# முத்தமிழ் விழா மலர்



விடுதலைப்புலிகள்
கலை, பண்பாட்டுக் கழகம்

எங்கள் தாயக மண்ணிலே வந்துள
எதிரி எங்குளான் என்றுமே தேடிடும்
பொங்குகின்ற உணர்ச்சிப் பிளம்புகள்
புலிகள்; என்றிவ் வையகம் பேசிடத்
தங்களின்னுயிர் தந்தமாவீரரின்
தாளடிகளின் இம்மலர் வைத்தனம்

# உலகத் தமிழினத்தின் விடிவிளக்கு

உலகத் தமிழினத்தின் விடிவிளக்கு — எங்கள்
ஊரில் உலவுகின்ற ஒளி விளக்கு.
முழவு எடுத்தடித்து நீ முழக்கு — தம்பி
மூத்த தமிழ்க் குடியின் அகல் விளக்கு

தூங்கிக் கிடந்ததய்யா தமிழீழம் — இவன்
சொல்லிக் கொடுத்த இசை பூபாளம்.
வேங்கையென எழுந்து தான் நடந்தான் — புலி
வீரர்தனைத் திரட்டிப் போர் தொடுத்தான்.

நஞ்சைக் கழுத்தணிந்த நாயகனே — இனி
நாளும் உனக்கு வெற்றி போமகனே.
குஞ்சும் எதிரிகளைக் கொத்தி விரட்டும் — உந்தன
கூட்டில் வளர்ந்தகுஞ்சு வெற்றி எடுக்கும்.

சிங்களத்துப் பாசறைகள் கண்டு கொதித்தான் — தினம்
திட்டமிட்டே அத்தனையும் தட்டி மிதித்தான
தங்கத் தமிழ்நிலத்தின் தலைவனிவன் — பல
தகுதி ஒருங்கிணைந்த கலைஞனிவன்.

தாயைத் தாய் நிலத்தைப் பூசித்தான் — எங்கள்
தலைவன் சுதந்திரப் பண் வாசித்தான்
பாயும் புலித்தலைவன் பேரைத் தொடுத்தான் — பிர
பாகரன் என்றழைக்கும் பேரை எடுத்தான்

புதுவை இரத்தினதுரை



தமிழீழ தேசியத் தலைவர்
திரு. வே. பிரபாகரன் அவர்கள்

## தமிழீழ தேசிய தலைவரும், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தலைவரும், பிரதம இராணுவத்தளபதியுமான திரு. வே. பிரபாகரன் அவர்கள் வழங்கிய

## ஆசிச் செய்தி

எமது மொழியும், கலையும், பண்பாடும் எமது நீண்ட வரலாற்றின் விழுதுகளாக, எமது மண்ணில் ஆழமாக வேரூன்றி நிற்பவை. எமது தேசிய வாழ்விற்கு ஆதாரமாக நிற்பவை. எமது பண்பாடுதான் எமது தேசத்தின் உயிர். எமது இனத்தின் ஆன்மா. எமது உடல்கள் அழிந்தாலும், உடமைகள் அழிந்தாலும், எமது இனத்தின் இதயமாக இயங்கும் பண்பாட்டு வாழ்வை எவராலும் அழித்துவிட முடியாது.

எமது மொழியில், எமது கலைகளில், எமது பண்பாட்டில், எமது மண்ணில் நாம் கொள்ளும் பாசமும் நேசமும் தேசியப் பற்றுணர்வாக பரிணாமம் பெறுகிறது. இந்தத் தேசாபிமான உணர்வானது மக்களை ஆழமாகப் பற்றிக் கொள்ளும்பொழுதுதான் ஒரு தேசம் தனக்கே உரித்தான, தனித்துவமான ஆளுமையைப் பெறுகிறது. இந்தத் தேசிய ஆளுமையைக் கொண்ட மக்கள் இனம்தான் ஒரு அரசை அமைத்துக்கொள்ளும் தகுதியைப் பெறுகிறது.

ஒரு திடமான, தனித்துவமான தேசிய ஆளுமையைக் கொண்ட மக்களாக தமிழீழ மக்கள் வளர்ச்சியும் முதிர்ச்சியும் கண்டிருக்கிறார்கள். இரத்தப் புரட்சியாக கட்டவிழ்ந்த, நீண்ட, கடினமான போராட்ட வரலாறும், அதனால் உருவான நிலை தளரா இலட்சிய உறுதியும், நாட்டுப் பற்றும் எமது மக்களை தேசிய ஆளுமைகொண்ட மக்கள் இனமாக மாற்றியமைத்திருக்கிறது. இதனால் எமது மக்கள் தன்னாட்சி உரிமைக்கு உரித்தானவர்களாக, தனியரசு அமைக்கும் தகுதி பெற்றவர்களாக விளங்குகிறார்கள்.

உலகெங்கும் தமிழினம் பரந்து வாழ்ந்தாலும் தமிழீழத்தில்தான் தேசிய ஆன்மா விழிப்புப் பெற்றிருக்கிறது. தமிழீழத்தில்தான் தேசிய ஆளுமை பிறந்திருக்கிறது. தமிழீழத்தில்தான் தனியரசு உருவாகும் வரலாற்றுப் புறநிலை தோன்றியிருக்கிறது.

தமிழீழத்தில் பிறந்து, வளர்ந்து, நிமிர்ந்து நிற்கும் தமிழனின் தேசிய ஆளுமையைக் கொன்றுவிட எமது பகைவர்கள் திடசங்கற்பம் பூண்டு நிற்கிறார்கள். எமது வரலாற்று எதிரியான சிங்கள அரசு ஒரு புறமும், இந்திய வல்லரசு மறுபுறமுமாக எமக்குப் பெரும் சவால்களாக எம்மை அச்சுறுத்தி நிற்கின்றன.

அனைத்துலக தமிழ்ப் பண்பாட்டின் மையமாக, தன்னாட்சி உரிமைக்கு தகுதி பெற்றதாக, அரசியல் ஆளுமைபெற்று வளர்ந்துள்ள தமிழீழத் தேசியம் இந்திய உபகண்ட தேசிய எழுச்சிப் போராட்டங்களுக்கு உந்துசக்தியாக அமைந்து விடுமென இந்தியா அஞ்சுகிறது. குறிப்பாக தமிழ்நாட்டில் செத்துக்கொண்டிருக்கும் திராவிடப் பண்பாட்டு இயக்கத்திற்கு புத்துயிரளித்து தூங்கிக்கிடக்கும் தமிழகத் தமிழனை தட்டி எழுப்பிவிடலாமென பாரதம் பயப்படுகிறது. இந்தியாவிலும்' உலகளாவிய ரீதியிலும் தமிழ்ப் பண்பாட்டு மறுமலர்ச்சிக்கும் தமிழ்த் தேசிய எழுச்சிக்கும் ஊக்க சக்தியாக உருவாக்கம் பெற்றுவரும் தமிழீழ தேசியத்தை ஆரம்பத்திலேயே சிதைத்துவிட வேண்டுமென டில்லி ஆட்சிபீடம் திட்டம் தீட்டியது. இந்த நோக்கில்தான் இந்திய ஆளும் வர்க்கமானது சிங்களப் பேரினவாதிகளுடன் கூட்டுச் சேர்ந்து, ஒப்பந்தம் செய்து எமது மண்ணில் தனது ஆக்கிரமிப்புப் பாதங்களைப் பதித்தது. தமிழீழ தேசியத்தின் புரட்சிவடிவமான புலிகள் இயக்கத்தை அழித்துவிட முனைந்தது. இந்திய தலையீடும், அதனால் எமது தாயகத்தில் நிகழ்ந்த மனிதக் கொலைகளும் அழிப்புகளும் தமிழ்த் தேசியத்தை நசுக்கிவிட முடியவில்லை. பதிலாக, எமது போராளிகளதும் பொதுமக்களதும் உறுதிமிக்க எதிர்ப்பியக்கம் தேசியப் பற்றுணர்வை மேலும் வலுப்படுத்தியது என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்திய ஆட்சியாளரதும், சிங்களப் பேரினவாதிகளதும் நெருக்குதல்கள் இன்னும் ஓய்ந்தபாடில்லை. விடுதலைப் புலிகள் இயக்கத்தை தடைசெய்து தமிழீழ தேசிய எழுச்சியை 'பிரிவினைவாதம்' என்றும் 'பயங்கரவாதம்' என்றும் உலகிற்கு திரித்துக்காட்டுவதில் இந்தியா முனைப்பாக நிற்கிறது. தமிழரின் தேசிய கட்டமைப்பிற்கு ஆதாரமாக விளங்கும் தமிழரின் வரலாற்றுப் பூமியை

ஆக்கிரமிப்பால் அபகரித்துக் கொள்ள சிங்களப் பேரினவாதம் பகீரத முயற்சி களை செய்கிறது. இதனால் எமது தேசிய விடுதலைப் போராட்டம் என்றுமில் லாத ஒரு பெரிய சவாலை சந்தித்து நிற்கிறது.

இந்த சவாலை நாம் வெற்றிகரமாக எதிர்கொண்டு முறியடிப்பதாயின் ஒரு திடமான, வலுவான தேசிய எதிர்ப்பியக்கத்தை நாம் கட்டி எழுப்ப வேண்டும். போர்க்குணம் மிக்க ஒரு புரட்சிகர சமுதாயமாக எமது தேசத்தை உரு வாக்கம் செய்ய வேண்டும்.

ஒரு விடுதலை இயக்கம் தனித்துநின்று போராடி விடுதலையை வென் றெடுத்ததாக வரலாறு இல்லை. ஒரு விடுதலை இயக்கத்தின் பின்னால் மக்கள் சக்தி அணிதிரண்டு எழுச்சிகொள்ளும் பொழுதுதான் அது மக்கள் போராட்ட மாக தேசிய போராட்டமாக முழுமையும், முதிர்ச்சியும் பெறுகிறது. அப்பொழுது தான் விடுதலையும் சாத்தியமாகிறது.

எமது விடுதலைப் போராட்டத்தை மக்கள் மயமாக்கி மக்கள் போராட்ட மாக முழுமைப்படுத்தி, மக்கள் அரங்கிலிருந்து ஒரு பலமான, உறுதிமிக்க தேசிய எதிர்ப்பியக்கத்தை கட்டி எழுப்பும் பணி இன்றைய வரலாற்றுத் தேவை யாக எழுந்திருக்கிறது. இந்தத் தேவையை பூர்த்தி செய்வதில் எமது கலை இலக்கிய படைப்பாளிகளின் பங்கு முக்கியமானது.

எமது போராட்ட வாழ்வின் மெய்யுண்மைகளை கலை, இலக்கியப் படைப்புகள் தரிசித்து நிற்கவேண்டும். எமது சமூக வாழ்வியக்கத்தின் சகல பரி மாணங்களிலும் ஆழமாக ஊடுருவி நிற்கும் இன ஒடுக்குமுறையின் கொடூரத் தினை சிருஷ்டி கர்த்தாக்கள் சித்திரித்துக்காட்ட வேண்டும். மக்களிடையே விழிப் புணர்வையும் எதிர்ப்புணர்வையும், விடுதலையுணர்வையும் தூண்டிவிடும் கலை, இலக்கிய ஆக்கங்களே எமது இலட்சியப் போருக்கு உரமேற்றுவதாக அமையும். இத்தகைய கலை, இலக்கியப் படைப்புகளே தேசிய எதிர்ப்பியக்கத்திற்கு உயி ரூட்டுவதாகவும் அமையும்.

போர்க்காலக் கலை, இலக்கிய மறுமலர்ச்சிக்கு களமாகத் திகழ்ந்துவரும் கலை, பண்பாட்டுக் கழகத்தினர் ஒழுங்குசெய்துள்ள முத்தமிழ் விழாவுக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

*'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்'*



புதுவை இரத்தினதுரை
பொறுப்பாளர்
விடுதலைப்புலிகள் கலை, பண்பாட்டுக்கழகம்
நடுவப்பணியகம்,
தமிழீழம்.

# வாருங்கள் வடம் பிடிப்போம்

தமிழீழ விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகம் எமது தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களின் நேரடியான வழி காட்டலுக்குட் பட்டதாகும். இதனால் தான் குறுகிய காலத்துக்குள் பெறுமதியான பலவற்றை எமது கழகம் நிறைவேற்றிவிட்டு நிமிர்ந்து நிற்கிறது. அவற்றில் ஒன்று - முத்தமிழ் விழா.

விடுதலைப் புலிகளின் காலத்தில் மீண்டும் சங்ககாலம் திரும்பியது என்று கூறுவது உணர்ச்சிபூர்வமான வெறும் ஆனந்தக்களிப்பல்ல. தமிழனின் வரலாற்று வழித்தடத்தில் வீரத்திலும், கலைகளின் வளர்ச்சியிலும், புரட்சிகரமான பண் பாட்டுப் பேணலிலும் புலிகளின் காலம் பொற்காலம் என்று நாளை சரித்திரம் விதந்துரைக்கும்.

எம் தாயகத்தை மீட்டெடுக்கும் பயணத்தில் விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகத்தின் பங்களிப்புக் கணிசமானது என்று எங்கும் பேசவைத்து எம்மோடு இணைந்த கலைஞர்கள், கவிஞர்கள், அறிஞர்கள், எழுத்தாளர்கள் ஓவியர்கள் அனைவரையும் முத்தமிழ் விழா நாட்களில் முன்னிறுத்திப் பார்த்து மகிழ்ச்சியடைகின்றோம். இன்னும் இன்னும் எங்கள் கழகத்தின் வேர்கள் எம் மண்ணில் ஆழமாகவும், அகலமாகவும் ஓடிப் படரவிட ஆசைப்படுகின்றோம்.

ஊரும், உலகும் ஏன் எதிரிகூட அதிசயிக்கும் முத்தமிழ் விழாவும், முத்தமிழ் விழாவையொட்டி வெளிவரும் விழாமலரும் சிறப்புற எனது வாழ்த்துக்கள். மலர்க்குழுவினருக்கு எனது நன்றிகள்.

வாருங்கள் எல்லோரும் வடம் பிடிப்போம்.
போராட்டத் தேரை இழுத்தெங்கள் தேசத்தை விடுவிப்போம்.

*''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''*

திரு. தேவர்
விடுதலைப்புலிகள் கலை, பண்பாட்டுக் கழக
துணைப் பொறுப்பாளர்
முத்தமிழ் விழாப் பொறுப்பாளர்
தமிழீழம்.



# போற்றுகின்றேன் !
# வாழ்த்துகின்றேன் !!

பேசும் மொழியும் அதனூடாகப் பிறந்த இலக்கியங்களும் ஓர் இனத்தின் வளர்ச்சியிலும் வீழ்ச்சியிலும் பெரும் தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. வீழ்ந்து விட்ட ஒரு சமுதாயம் வீட்சி நிலையிலிருந்தும் மீட்சி பெறுவதற்கும், வாழ்ந்து வரும் சமுதாயம் வளம் பல பெற்று வாழ்வின் உயர் நிலையை எய்துவதற்கும் உந்து சக்திகளாக விளங்கும் தன்மையில் இலக்கிய வடிவங்கள் பெரும் பங்களிப்புச் செய்கின்றன. இத்தன்மையில், தமிழர்க்கே உரியனவாகத் தமிழ் மேதைகளால் உணர்த்தப்பட்டு, ''முத்தமிழ்'' என வடிவம் கொடுக்கப்பட்ட இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றும் தமிழர்தம் வாழ்வுடன் பின்னிப் பிணைந்துள்ளன.

முத்தமிழ் ஊடாகச் சமுதாய நிகழ்வுகள் தெரிந்தன. சமூக இயல்புகள் பரந்தன, அரசியல் அறங்கள் போற்றப்பட்டன. அறம் அல்லாதன தூற்றப் பட்டன. கலை, கலாச்சார, பண்பாட்டு அம்சங்கள் யாவும் முத்தமிழின் அணைப் பினால் நித்தமும் பொலிந்தன. இத்தனைக்கும் மேலாக அந்நியர்தம் ஆதிக்க வெறியினால் தமிழினம் தாக்குண்ட காலங்களில், அட்டூழியக்காரர்களின் அடா வடித்தனங்களில் - அடக்குமுறைச் செயற்பாடுகளில் எம்மினம் சிக்கிச் சீரழிந்த நேரங்களில் தமிழர்தம் அபிலாசைகளை உணர்த்தும் தன்மையிலும் உணர்ச்சிக் குமுறல்களை வெளிப்படுத்தும் வகையிலும் 'முத்தமிழ்' வடிவிலே இலக்கியங்கள் பல பிறந்தன. சமூக உறவுகளில், சமுதாய நிகழ்வுகளில், அரசியல் தொடர்பு களில், உரிமைப் போராட்டங்களில் இலக்கியகர்த்தாக்களாற் தோற்றுவிக்கப் பட்ட கதைகள், கட்டுரைகள், கவிதைகள், நாடகங்கள் ஆகியன இரண்டறக் கலந்து நின்றன. இயல் வடிவிலே புரட்சிக் கருத்துக்கள் தெறித்தன. இசை வடிவிலே உணர்ச்சிக்குமுறல்கள் பொங்கின. நாடக வடிவிலே நற்போதனைகள் நிகழ்ந்தன. பண்டைத்தமிழர்தம் வாழ்க்கை வெளிப்பாடுகள் அனைத்துமே முத்தமிழ் வடிவிலே தோற்றம் பெற்றன. அந்நியர் ஆதிக்கத்திற்கு அடங்காத வகையில், அடக்குமுறைகளுக்குப் பணியாத முறையில் தமிழர்தம் உணர்வுகளை

உரமாகிய பெருமையும், நரம்புகளை முறுக்கேற்றிய மகிமையும் முத்தமிழ் வடிவங்களுக்கே உரியனவாகும். அன்றைய நிலையை இன்றும் காண்கிறோம், காண விழைகின்றோம்.

எமது சமுதாயத்திலே புரையோடிப் போயிருக்கும் வேண்டாத நடைமுறைகள் - விரும்பத்தகாத பழக்க வழக்கங்கள், எமது உரிமைப் போருக்கே ஊறு விளைக்கும் வேறுபட்ட கருத்துக்கள் - மாறுபட்ட கொள்கைகள் யாவும் எம்மத்தியிலிருந்தும் களைந்தெறியப்பட வேண்டிய நிலையிலே நாம் இன்று இருக்கின்றோம். இத்தனைக்கும் மேலாக, ஆதிக்க வெறியினை நெஞ்சிலே தாங்கி ஆட்சி அதிகாரத்தைக் கையிலே ஏந்தி, சூழ்ச்சியினால் எம் பூமியைப் பறிப்பதிலும், எம் இனத்தின் வீழ்ச்சி கருதி, எம் உரிமைகளைக் குழி தோண்டிப் புதைப்பதிலும் முனைந்து நிற்கும் இனவெறியாளர்களின் பலமுனைத் தாக்கங்களுக்கும் ஈடுகொடுக்கவும், அதிகார வெறி படைத்தோரின் அடக்குமுறைகளுக்கு அடிபணியாது, எம் மொழியைக் காப்பதற்காகவும் எம்மண்ணை மீட்பதற்காகவும் ஒரு பாரிய போராட்டத்தை முன்னெடுத்துச் செல்லும் நிலையிலே நாம் இருக்கின்றோம். எமது விடுதலைப் போரானது வடிவங்கள் பல பெற்று - வளர்ச்சிகள் பல கண்டு, வினைகள் பலபுரிந்து - வெற்றிகள் பல அடைந்து, எமக்கென ஓர் ஆட்சியை அமைப்பதற்காக - இதற்கான பணிகளை ஆற்றுவதற்காக எம்மை அழைத்துச் செல்கின்றது. இந்த நிலையிலே எமது சமுதாயத்தின் மலர்ச்சி வேண்டி, புரட்சிக்கருத்துக்கள் மலிந்திட வேண்டும். புதுமை எண்ணங்கள் பொலிந்திட வேண்டும். விடுதலை வேட்கையும் வீர உணர்வும் எமது உள்ளங்களில் பொங்கி வழிந்திட வேண்டும். ''எமது தாய் மொழி தமிழ். எமது சொந்த மண் தமிழீழம்'' என்ற எண்ணம் உள்ளங்களில் எழுந்திட வேண்டும். இவற்றை எமது சமுதாயத்திற்கென ஆக்கித்தந்திடும் பணியில், எமது உள்ளங்களில் இவற்றைத் தேக்கி நிறைத்திடும் செயலில் இன்றைய எமது இலக்கிய கர்த்தாக்கள் முனைந்திட வேண்டும். இலக்கிய வடிவங்களான இயல், இசை, நாடகம் ஆகியன முத்தமிழ் வடிவிலே பெருந்துணை புரிந்திட வேண்டும்.

இன்றைய எமது இலக்கிய கர்த்தாக்களை முத்தமிழ் ஊடாக இனங்கண்டு - தரங்கண்டு தமிழினத்தின் விடிவுப் பாதையிலே இட்டுச் செல்வதுடன் தாமும் எம் இனத்தின் மீட்சிக்காக நாளும் பொழுதும் வினைபுரிந்து வருகின்றமை போற்றுதற்குரியதாகும். இந் நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு சென்ற வருடம் தமிழீழ விடுதலைப் புலிகளின் கலை, பண்பாட்டுக் கழகத்தினரால் நடாத்தப்பட்ட 'மாபெரும் முத்தமிழ் விழா' தமிழினத்தின் விடிவுப்பாதையில் ஓர் ஒளிக்கீற்றாகும். இவர்கள் முயற்சி மேலும் பெருகிட வேண்டும். மண் மீட்கும் பணியில் இதுவரையிலே கலை, பண்பாட்டுக் கழகம் முன்னெடுத்துச் சென்ற முயற்சிகளைப் போற்றுகின்றேன். இவர்கள் முயற்சி மேலும் பெருகி தமிழீழத் தாயகம் அமைத்திடத் துணை புரிந்திட வேண்டுமென வாழ்த்துகின்றேன்.

'' புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் ''

திரு. சூசை அவர்கள்
சிறப்புத் தளபதி
விடுதலைப் புலிகளின் கடற் புலிகள்
தமிழீழம்.



# முத்தமிழ்விழா எத்திசையும் பொலிக

''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்த குடியினர்'' நாங்கள், அமிழ்தினும் இனிய தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்றவர்கள். மொழி - கலை - பண்பாட்டால் இஞ்ஞாலத்தில் பிறர் எவர்க்கும் இல்லாத பழமையும் பெருமையும் கொண்ட வரலாறு நமக்குண்டு.

நாம் கோலோடும் கொடியோடும் வாழ்ந்த காலத்தில் கங்கைவரை எங்கள் படை சென்றது. பொங்கும் அலைகடல் மீது வங்கம் ஓட்டி சிங்களம் முதலாம் சாவகம் கடாரம் ஆகிய தென்கடல் தீவுகள் பலவற்றையும் வெற்றி கொண்டது; வடவரை வென்று வடவரையிலும் (இமையத்திலும்) புலிக்கொடி பொறித்து மீண்டது. மேற்கே யவனரோடும் கிழக்கே சீனரோடும் கலமோட்டி கடல் வாணிகம் செய்தோம்; சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தோம். அதன்பின் வந்த காலத்தில் தமிழீழம் வேற்றாரிடத்தில் சிக்குண்டு போயிற்று.

திசை கெட்டுத் தடுமாறிய தமிழருக்கு வழிகாட்ட இன்று தமிழீழத்தில் தன்னிகரில்லாத் தலைவர் ஒருவர் தோன்றிவிட்டார். முன்னை மூவேந்தர் வீரமெல்லாம் மூண்டெரிய எரிமலையாய் - புயலாய் - புலியாய்ச் சீறிப் பகைப்புலம் பாழ்படப் போர்முரசு கொட்டி நிற்கிறார். ஆயிரம் ஆயிரம் தம்பியர் தங்கையர் அவர் பின்னே அணிவகுத்து நிற்கிறார்கள். பெரும்புலியாய் - கரும்புலியாய் கடற்புலியாய் உருவெடுத்து நிற்கிறார்கள்.

இன்று எங்கள் தாய்க்கு விழா அவள் மூன்று வடிவையும் போற்றும் முத்தமிழ் விழா நடைபெறப் போகிறது. இஃது இரண்டாவது விழா. சென்ற ஆண்டிலும் இந்த ஆண்டில் விழா மேலும் எழுச்சியுற எமது உளங்கனிந்த வாழ்த்துக்கள் உரியவாகுக.

*''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''*

செல்வி. ஜெயந்தி அவர்கள்
சிறப்புத் தளபதி
விடுதலைப் புலிகள் மகளிர் படைப்பிரிவு
தமிழீழம்.



# தலைநிமிர்ந்தே நாம் நிற்போம்

தேசியத்தைத் தொலைத்துவிட்டு தெருவில் நிற்பவர்கள் அல்ல நாம். எங்கள் உயிர்கள் பறிக்கப்படலாம். உடமைகள் அழிக்கப்படலாம். எம் உறவுகள் எம் கண் முன்னாலேயே வதைக்கப்படலாம். ஆனால் எமது உடலின் உயிர் இயக்கம் அடங்கும் வரை உறுதியுடன் போராடி எம் தேசியத்தை காப்பாற்றுவோம்.

எங்கள் தேசத்தின் பண்பாட்டுக் கோலங்கள் சிதைக்கப்படவோ, சீரழிந்து போகவோ விடமாட்டோம். கலாச்சாரத்தை பாழ்படுத்தி எம்மினத்தை நிர்மூல மாக்கிவிட முயன்று கொண்டிருக்கும் எதிரிக்கு எதிர் நின்று போராடி எம் தேசத்தை மீட்போம் என்பதை உறுதியுடன் உணர்த்தி நிற்பதுதான் முத்தமிழ் விழா.

அன்னிய ஆதிக்கத்தின் கெடுபிடிகளாலோ, ஆக்கிரமிப்பு செயற்பாடுகளாலோ எமது தாய்மொழியாம் தமிழ்மொழி சீரிழந்து, சிறப்பிழந்து வீழ்ந்து விடப் போவதில்லை என்பதை உலகிற்கு விளக்கி நிற்கின்றது இவ்விழா.

பெண்மைக்கும் வீரமுண்டு; பெரும் ஆற்றல் உண்டு; ஆணும் பெண்ணும் ஆற்றலிலும் ஆளுமையிலும் சமமானவர்கள் என்பதை எடுத்தியம்பும் புரட்சிகர மான, புதிய கலாச்சாரத்தை வியப்புடன் உலகு நோக்கிக் கொண்டிருக்கிறது.

இவ்வேளையில் புத்துயிர்ப்பூட்டும் எழுச்சி விழாவாம் முத்தமிழ் விழாவை கொண்டாடுவதன்மூலம் எம் தேசத்தை உலகின் முன்னால் உயர்த்திவைக்கின் றோம். எம்மினத்தின் தன்மானம் எவ்வித அழிப்பு நடவடிக்கைகளாலும் தாழ்ந்து விடப்போவதில்லை. தலைநிமிர்தே நாம் நிற்போம் என்பதை தெளிவுடன் அசையா உறுதியுடன் வெளிப்படுத்துகின்றோம்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**செல்வி. ஜெயா அவர்கள்**
பொறுப்பாளர்
விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணி
தமிழீழம்.

# தமிழ்த்தேசியத்தின் எழுச்சியின் வெளிப்பாடு



மனித நாகரீகத்தின் வளர்ச்சியோடு அதன் அம்சங்களாக, அதன் கூடவே வளர்ந்து வருவன - மொழி, தொழில் நுட்பம், சமூக ஒழுங்குகள் மனிதநேயம் போன்றவை.

எமது மக்களின் வீரம் அறத்தோடு கூடியது. மனிதநேயம் நிரம்பியது. இன்றுமட்டுமல்ல, தொன்று தொட்டு எமது இனத்தின் தனிப்பெருமையாக வீரம் இருந்து வந்திருக்கிறது. ஆண்களுடன், பெண்களும் வீரத்துடனும், தன் மானத்துடனும் வாழ்ந்த வாழ்க்கைமுறையை எமது பண்டைய இலக்கியங்கள் பகர்கின்றன.

இவ்வாறு, தமிழ் மொழியின் செழுமையும், எமது இலக்கியங்கள் கூறும் வீரவரலாறும் பழங்கதையாகி விட்டனவோ என்னும் நிலை அந்நிய ஆதிக்கப் பிடிகளினாலும், பிறமொழி ஊடுருவல்களாலும் ஏற்பட்டுள்ளது. இந்த நிலை மாறவேண்டும். 'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்ய வேண்டும்.' தமிழனின் பண்பட்ட வாழ்க்கை முறையை தெரிந்து கொள்ளச் செய்ய வேண்டும்.

இந்த நோக்கத்தை நிறைவேற்றும் பணியின் ஒரு படியாக முத்தமிழ் விழா அமைகிறது.

வீரமும், மானமும், விடுதலை வேட்கையும் நிரம்பிய விடுதலைப் போராட்டம் எம்மண்ணில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. எமது வீரர்களின் தியாகத்தினால் எமது தேசம் படிப்படியாக மீட்கப்பட்டு வருகிறது.

இந்த தியாகப் போரில் நாம் வெல்வோம். எமது தேசம் விடுதலை பெறும். எமது தேசம் விடுவிக்கப்படும் பொழுது எமது தேசியமும் பாதுகாக்கப்படும்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''



திரு. கருணா அவர்கள்
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
மட்டக்களப்பு, அம்பாறைப் பிராந்தியம்.

# முத்தமிழ்விழாவை வாழ்த்துகின்றேன்

முத்தமிழை வளர்ப்பதற்காக விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகம் நடாத்தும் முத்தமிழ் விழாவிற்கான வாழ்த்துச் செய்தியை எழுதுகின்ற இவ்வேளையில் எங்கள் பிரதேசத்து மக்கள், எதிரியான ஸ்ரீலங்கா அரச இராணு வத்தினரின் துன்புறுத்தலுக்குள்ளாகும் வேதனை நிகழ்வு தொடர்ந்த வண்ணம் உள்ளது.

எமது மண்ணோடும் மக்களோடும் இணைந்து வளம்பெற்ற தமிழ்க் கலைகள் இன்று தேற்றுவாரின்றி தேங்கிக் கிடக்கும் நிலையை ஏற்படுத்துவதற்கு எதிரி முனைகின்றான். எனினும், துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் முகம் கொடுத்து மனம் தளராத உறுதியுடன் இக்கலைகளைச் சுமந்து வாழும் மக்களைக் காக்க வென்று தொடரும் இப்போராட்ட வேளை இம் முத்தமிழ் விழா நடைபெறுவது மகிழ்ச்சிக்குரியதேயாகும்.

போர்மேகம் கவிந்துள்ள இச்சூழலில் நடைபெறும் இவ்விழாவிற்கு இம் மண்ணிலே நின்றுகொண்டு ஆயிரம் ஆயிரம் வேதனைகளையும் சோதனைகளையும் சுமந்தபடி வாழும் எம்மக்களின் மேலான அன்பு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

எங்கள் நிலத்திலும் வரலாற்றுப் பெருமைமிக்க இவ்விழா நடைபெறும். எனது பிரதேச மக்களும் தங்களுடைய கலைகளையும் உணர்வையும் பெருமை யுடன் முத்தமிழ் விழாவில் வெளிப்படுத்துவர். இதற்கான காலத்தை எம் கரங்களால் உருவாக்கும் வேளை வெகுதொலைவில் இல்லை என்று உறுதிகூறி இவ்விழாவை வாழ்த்துகிறேன்.

*புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்.*

திரு. தீபன் அவர்கள்
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
கிளிநொச்சி, வவுனியா பிராந்தியம்.



# புகழ்பரப்பும் முத்தமிழ்விழாவை வாழ்த்துகின்றோம்

ஓங்கி உயர்ந்த மரங்களின் ஊடே ஓயாத விழிப்புடன் துப்பாக்கிகளைக் குறிவைத்தபடி எல்லையில் நின்று நடைபெறவிருக்கும் முத்தமிழ் விழாவிற்கான இந்தச் செய்தியை எழுதுகின்றேன்.

எல்லையை மீறி எங்களுடைய மண்ணில் காலடிவைக்க எதிரி எத்தனம் செய்கின்றான். எங்களுடைய வாழ்நிலத்தை எவனும் கபளீகரம் செய்வதற்கு என்றும் நாம் அனுமதிக்கப் போவதில்லை.

எங்கள் பிரதேசத்தில் தொழில் முறைகளின் போதும், பருவகாலங்களின் போதும் ஆடலும் பாடலுமாக இங்கு கலைகள் உயிர்ப்புடன் வாழ்ந்தன; வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

இந்த வகையில் தமிழர் பண்பாட்டையும், தமிழர் கலைகளையும் பேணவும் வளர்க்கவும் எடுக்கப்படும் முத்தமிழ் விழா உலகம் முழுவதும் வாழும் தமிழர்களுக்குப் பெருமை சேர்ப்பதாக அமையும்.

விடுதலைப் புலிகள் தமிழையும், தமிழர் வாழ்வு, கலைகள், பண்பாடு தமிழர் தாயகம் என்பவற்றைப் போராடிப் பெற்று வாழ்ந்தார்கள் என்பதை வரலாறு பெருமையுடன் எழுதிச்செல்லும்.

சங்க நாதமென எட்டுத்திக்கும் புகழ் பரப்பும் முத்தமிழ் விழாவை நாமனைவரும் வாழ்த்துகின்றோம்.

*புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்.*



திரு. தமிழ்ச்செல்வன் அவர்கள்
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாண பிராந்தியம்.

# புதியதோர் வரலாறு உருவாகட்டும்

எங்கள் மொழி தொன்மையானது. இனிமையானது. நீண்ட வரலாற்றையுடைய இனத்தவர் நாம். கூத்தும், பாட்டும், கும்மியும், ஆட்டமும், அழகுமிகு சிற்பமும், ஓவியமும் இன்னபிற கலைகளும் எங்கள் வாழ்வோடு கலந்தவையே. எங்கள் மண் கலைகளால் வளம்பெற்றது.

வழிவழியாக இந்தக் கலைகளெல்லாம் பேணப்பட்டு வளர்க்கப்பட்டு வந்தன. தமிழையும், தமிழின் கலைகளையும் வளர்க்கவும் பாதுகாக்கவும் நம் முன்னோர்கள் பாடுபட்டார்கள்; போராடினார்கள்.

எதிரியின் அழிப்பு நடவடிக்கைகளைத் தடுத்து இந்த மண்ணை மீட்பதற்காக வீரமுடன் போராடும் புலிகளாகிய நாம் தமிழையும் இயல், இசை, நாடகங்களையும், பண்பாட்டையும் வளர்க்க இந்த விழாவை நடாத்துவது வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும்.

போராளிகளின் உணர்வுகளை, கள நிகழ்வுகளை, போர் நடக்கும் இந்த நாட்களில் மக்கள் எதிர்கொள்ளும் துன்ப, துயரங்களை வெளிப்படுத்தும் புதிய கலை இலக்கியங்கள் தமிழுக்கும் வரலாற்றுக்கும், இலக்கியத்திற்கும் வளம் சேர்க்கும். புதிய தோர் வரலாற்றை எழுதிக்கொள்ளும்.

யாழ்ப்பாணத்திலும் வன்னியிலிலும் மட்டுமல்ல தமிழீழத்தின் மற்றைய இடங்களிலும் முத்தமிழ் விழா நடைபெறவேண்டும். அங்குள்ள கலைஞர்களும் பங்கேற்க வேண்டும். அந்த மக்களும் பங்காற்ற வேண்டும்.

முத்தமிழ் விழா வெற்றிபெறவேண்டுமென யாழ் மாவட்டத்து மக்களுடனும் காவலரண்களில் கண் விழித்து எதிரிக்குக் குறிவைத்தபடி காத்திருக்கும் போராளிகளுடனும் சேர்ந்து வாழ்த்துகின்றேன்.

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்

திரு. குணம் அவர்கள்
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
திருகோணமலை பிராந்தியம்.



# இந்த முத்தமிழ்விழா ஒரு முன்னறிவிப்பு

விடுதலைப் புலிகள் கலை பண்பாட்டுக் கழகத்தினர் நடாத்தும் முத்தமிழ் விழாவின் தித்திப்பில் திளைப்பவர் பேறுபெற்றோரே! சென்ற ஆண்டிலும் இதே காலகட்டத்தில்தான் கலை பண்பாட்டுக்கழகத்தினர் தமது முதலாவது முத்தமிழ் விழாவை நடாத்தி முடித்தனர். இந்த ஆண்டில் முத்தமிழ்விழா நடைபெற ஆரம்பிக்கும் இவ்வேளையில்,

எதிரியானவன் தனது முப்படைகளினதும் முழுப்பலத்தையும் பிரயோகித்து மூர்க்கத்தனமாய் எம்முடன் மோதி எமது தாய்நிலத்தைக் காயப்படுத்தவும் கபளீகரம் பண்ணவும் எமது கலை பண்பாட்டின் கட்டுக்கோப்பினைச் சிதைக்கவும் முனைந்தபோதும், சகல தாக்குதல்களுக்கும் முகம் கொடுத்து எதிரியின் மோதலை முறியடித்து முத்தமிழ்விழா அரங்கேறுகின்றமை முழு உலகிலும் உள்ள தமிழினத்தின் உள்ளங்களிலும் வெள்ளமென உவகை பொங்கிடவே செய்யும்.

விடுதலைப் புலிகள் முன்னெடுத்துச் செல்லும் தமிழீழ விடுதலை போராட்டத்தின் அறுவடையாகத் தாயினும் இனிய எமது தமிழீழம் மலரும் நாளை

தமிழீழத்தின் மூலை முடுக்குகளிளெல்லாம் முத்தமிழ் விழாவின் முழக்கங்கள் கேட்கும் அந்த இனிய முழக்கத்தின் தேனோசை தேசமெங்கும் தாக்கும்.

பிறநாட்டார் செவிகளுக்கும் சுவையதே நாதமெனக் கேட்கும்! எனவே அந்த நிறைவான நாளை நினைவுகளில் சுமந்தபடி, அந்த நன் நாளை நோக்கி எடுத்தடி பதித்தபடி உறுதியுடன் நிற்கும் எனது மாவட்ட மக்களோடு சேர்ந்து இந்த முத்தமிழ்விழாவை முகமும் அகமும் மலர வாழ்த்துவதில் மகிழ்வடைகின்றேன்.

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்



**திரு. சுபன் அவர்கள்**
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
மன்னார் பிராந்தியம்

# பரணி முழக்கங்கள் பகைவர் செவிப்பறைகளைக் கிழிக்கட்டும்!

வீரவரலாறு விரைவாக எழுதப்பட்டு விடியலை நோக்கிய வெற்றிப்பாதையில் சென்று கொண்டிருக்கும் தமிழீழ தேசம் வாழ்மக்கள் தமிழ் அன்னைக்கு எடுக்கும் பெருவிழாவானது இம்முறை தமிழீழ மண்ணின் பல பாகங்களிலும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. முத்தமிழ்விழாவினை தமிழீழமக்கள் அனைத்துப்பிரதேசங்களிலும் சிறப்புடன் கொண்டாடவேண்டும் என்ற எமது தேசியத்தலைவரின் உறுதியான தீர்மானத்தின் செயல்வடிவமாக வரலாற்றுப் புகழ்படைத்த மன்னார் மண்ணிலும் தமிழ் அன்னைக்கு பெருவிழா எடுக்கப் படுவதையிட்டு பெருமிதம் அடைகின்றேன்.

எதிரிகள் எம்மைக்கண்டு அஞ்சுவது எமது கரங்களில் இறுகிக்கனலும் ஆயுதங்களைக்கண்டு அல்ல. துன்பங்களையும் துயரங்களையும் அடக்குமுறையின் சோதனைகளையும் வேதனைகளையும் அழிவுகளையும் அவலங்களையும் துச்சமாக மதித்து தடைகளை வெற்றியின் படிக்கற்களாக அடுக்கி வீர சுதந்திரப் போரில் வைரித்த மன உறுதியுடன் நிமிர்ந்து நிற்பதைக் கண்டுதான் என்ற உண்மையினை முத்தமிழுக்கு விழா எடுக்கும் இத் தருணத்தில் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்

எமது பூரண கட்டுப்பாட்டின் கீழுள்ள வடதமிழீழத்தில் மன்னார் முதலாக அனைத்துப் பிரதேசங்களிலும் விமரிசையாக நடைபெறும் முத்தமிழ் விழாவானது எதிர்காலத்தில் தென்தமிழீழத்தின் புலிபாய்ந்தகல்லிலும் நடைபெறும் காலத்தை வென்றெடுக்க வேண்டும். முத்தமிழ் விழாவின் அனைத்து நிகழ்வுகளும் வெற்றி பெற வேண்டுமென எனது இதயபூர்வ வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

*புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்*

திரு. அன்பு அவர்கள்
சிறப்புத் தளபதி
தமிழீழ விடுதலைப் புலிகள்
மணலாறு மாவட்டம்.



# முத்தமிழ் விழாவின் ஒலி உலகின் செவிகளில் கேட்கட்டும்

வரலாறு பல படைத்தது எங்களுடைய மண். வளங்கள் பல நிறைந்ததும் எங்களுடைய மண்.

இன்று இடைவிடாது கேட்டுக்கொண்டிருக்கின்றது வேட்டொலி. காடுகள் தீயில் கருகுகின்றன. குண்டுவீச்சு விமானங்களின் கொடூரம் எல்லையை மீறுகிறது. தாயக மண்ணை எதிரி இடையில் துண்டாடப் பார்க்கிறான்.

எதிரியை எதிர்த்து நடக்கும் போரில் எந்தநாளும் இந்த மண்ணில் இரத்தம் சிந்துகின்றோம். இரத்தம் சிந்திச் சிந்தியே இந்த மண் சிவப்பேறிவிட்டது.

மருதமும், நெய்தலும், முல்லையும் இணைந்த எமது பிரதேசத்தில் வாழும் மக்கள் மகிழ்வும், நிறைவும் கொண்டிருந்த காலத்தை மீளவும் வாழ்க்கையாக்கிக் கொள்வதற்கு எங்களுடன் சேர்ந்து எல்லை வரை போரிடுகின்றனர். போரை எதிர்கொள்ளும் காலத்திலும் விடுதலைக் கருவியை ஏந்தியபடியே கலைகளை வளர்க்கின்றனர்.

எங்கள் வன்னி மண்ணில் அரங்கமிசைக்கும் முத்தமிழ் விழாவின் ஒலி உலகின் செவிகளில் கேட்கட்டும். எமக்குப் புதிய நம்பிக்கையை ஊட்டட்டும்

எமது இயக்கத் தலைமையின் வழிப்படுத்தலில் நாம் அணிவகுப்போம்.

எங்களின் மண்ணிலிருந்து எதிரி விரட்டியடிக்கப்படுவான். எங்கள் மண் விடுதலை பெறும்.

வாழ்க தமிழ்! வளர்க கலைகள்! வானளாவட்டும் நம்புகழ்!

*புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்.*



**திரு. கரிகாலன் அவர்கள்**
அரசியல் நிர்வாகப் பொறுப்பாளர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
மட்டக்களப்பு, அம்பாறைப் பிராந்தியம்.

# சோகம் நீங்கிடப்பாடும் பரணியாக விழா அமையட்டும்!

விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகம் நடத்தும் இரண்டாவது முத்தமிழ் விழா விரிந்து, பரந்து வீறுநடைபோடுவதற்கு ஏதுவாக வன்னியிலும் யாழ் மாவட்டத்து மண்ணிலும் நிகழ்த்தப்படும் என்ற செய்தி கேட்டு மனம் மகிழ்கின்றேன்.

எமது தமிழினத்திற்கே உரித்தாகிய எம்மொழி, கலை, கலாச்சாரக் கோலங்களைக் காக்கவே, நாம் இன்று சிறந்த தலைமைத்துவத்தின் கீழ் அணி திரண்டுள்ளோம் என்பதை இவ்விழாக்கள் எம்மவர்க்கும், எம்மை விட்டுத் தள்ளியிருப்போருக்கும் எடுத்துரைக்கட்டும்.

இந்த மண்ணில் இன்று சோகம் கவிந்துள்ளபோது அதை நீக்கிடப் பாடும் பரணியாக இவ்விழா அமையட்டும்.

சங்க கால இலக்கியங்கள் தமிழர்களின் வரலாற்றுச் சிறப்பை எமக்கு எடுத்துக்காட்டுவது போல இன்றைய காலத்தில் எம்மவரால் எடுக்கப்படும் இவ் விழாவும், இவ்விழா மலரும், வருங்காலத்திற்கு இவ்வரலாற்றைச் சொல்லும் இலக்கியமாக அமையும் என்று எதிர்பார்க்கிறேன்.

எமது மண்ணில் மண்டிக்கிடக்கும் அந்நிய ஆதிக்கத்தை நாம் உடைத்தெறிந்து இவ்விழாக்களையும், இது போன்ற விழா மலர்களையும் உலகிற்குக் கொடுத்திடும் காலத்தை உருவாக்கிடுவோம் என்று கூறி அல்லற்படும் எமது பிரதேச மக்களின் சார்பிலான என் அன்பான நல்வாழ்த்துக்களை முத்தமிழ் விழாவிற்குக் கூறுகின்றேன்.

*''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''*

திரு. மனோ அவர்கள்
அரசியல் நிர்வாகப் பொறுப்பாளர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
கிளிநொச்சி வவுனியாப் பிராந்தியம்.



# தோழமையுடன் வாழ்த்துகின்றேன்

வளமும் வனப்பும் மிகுந்த வன்னிமண் கலைகளிலும், பண்பாட்டிலும் தனித்துவம் மிக்கது. தமிழுணர்வும், தமிழ்மொழிப்பற்றும், தமிழர் பண்பாடு ஒருங்கு கூடி சிறப்புமிக்க வீரவாழ்வு வாழ்ந்த வரலாறு வன்னி மண்ணுக்கு உண்டு.

வன்னியின் எழிலார்ந்த வனப்புக்களையும். பேறுடைய வளங்களையும் சிங்க இராணுவம் திட்டமிட்டு அழிக்க முனைகையில் அதனை எதிர்த்து எங்களுட இணைந்து போராடியவர்கள் வன்னிமக்கள், எதிரியின் படைமுகாம்கள் எம்மால் வெற்றி கொள்ளப்பட்டன.

வன்னியின் பெருமளவு பிரதேசம் எதிரியிடம் இருந்து விடுவிக்கப்பட்டது. இந்த வெற்றியின் பூரிப்புடன் முத்தமிழ் விழாவை எங்களுடைய பிரதேசத்தில் கொண்டாடுகின்றோம்.

தொழில் முறைகளின் போதும் பருவகாலங்களின் போதும் ஆடலும் பாடலுமாக கலைகளை வளர்த்தவர்கள் வன்னிமக்கள்.

ஓங்கி வளர்ந்த மரங்களும்: கண்மலரும் திசையெங்கும் விரிந்திருக்கும் பசுமை பூரித்த வயல்வெளிகளும் ஆயிரம் பாடல்களை, ஆயிரம் ஆயிரம் கதைகளைக் கூறுகின்றன.

நாளை மலரும் தமிழீழத்தில் இவையெல்லாம் இன்றைய சேதிகளை இரத்தம் சிந்திப் போராடும் இந்த மண்ணின் வரலாற்றைச் சந்ததிகளுக்குத் சொல்லிக் கொடுக்கும்.

எல்லாவற்றுக்கும் எழுச்சிதரும் வகையில் நிகழும் முத்தமிழ் விழாவை எங்களுடைய பிரதேச மக்களுடனும் எப்போதும் கனலும் துப்பாக்கிகளைத் தூக்கித் திரியும் என் தோழர்களுடன் இணைந்து வாழ்த்துகின்றேன்.

''புலிகளின் தாகம் தமிழீழ தாயகம்''



திரு. அமுதன் அவர்கள்
அரசியல் நிர்வாகப் பொறுப்பாளர்
தமிழீழ விடுதலைப் புலிகள்.
மன்னார்ப்பிராந்தியம்.

# முத்தமிழ் விழா எழுச்சி பெறட்டும்

எமது விடுதலைப் போராட்டம் தமிழ் மக்களின் எழுச்சிப் போராட்டமாக மாறியுள்ள தென்று உலகம் ஏற்றுக் கொள்ளும் இவ்வேளையில் தமிழுக்கான முத்தமிழ் விழா எமது மண்ணில் நடைபெறும் செய்தி கேட்டு மகிழ்வடைகின்றேன்.

திக்கெட்டும் புகழ் பரவும் வண்ணம் நடைபெறப்போகும் இவ் விழாவின் மூலம், எமது மண்ணின் வளமும் எங்கள் தமிழ் மக்களின் தொன்மையும், சிறப்புத் தன்மையும் உலகிற்குப் புலப்படும் என்ற திடமான நம்பிக்கை எமக்குண்டு. இந்தவகையிலே இவ்விழா நடைபெறுவதற்கு எங்கள் உளமார்ந்த ஒத்திசைவையும் வாழ்த்துக்களையும் விடுதலைப்புலிகள் கலை பண்பாட்டுக் கழகத்தினருக்கும் முத்தமிழ் விழாமலர்க் குழுவினருக்கும் வழங்குவதில் எமது பிராந்திய மக்களும் என் கரங்களாகிய சக போராளிகளும் நானும் இணைந்து கொள்கின்றோம். பெருமையுறுகின்றோம்.

" புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் "

திரு. தமிழன்பன் அவர்கள்
அரசியல் நிர்வாகப் பொறுப்பாளர்
மணலாறு மாவட்டம்.
தமிழீழ விடுதலைப் புலிகள்



# "மீண்டும் சங்கத் தமிழ் வளரட்டும்"

சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்தனர் நம் முன்னோர்கள். சங்க காலத்தில் வளர்ந்தது முத்தமிழ்.

இன்று தமிழையும், தமிழ் மண்ணையும் காப்பதற்காகப் போரிடுகின்றோம் விடுதலைப் புலிகளாகிய நாங்கள். தமிழும், தமிழின் கலைகளும் சிறப்படைய வேண்டுமென்பதற்காக எமது இயக்கத்தின் கலை, பண்பாட்டுக் கழகம் வரலாற்றுச் சிறப்புமிக்க முத்தமிழ் விழாவை நடாத்துகின்றது.

எங்களுடைய இனத்தின் தேசிய அடையாளங்களான நிலம், மொழி கலை, பண்பாடுகள் என்பனவற்றினை வெளிப்படுத்துவதாக இந்த முத்தமிழ் விழா அமையும். எமது தனித்துவங்களை, பெருமைகளை உலகிற்குக் காட்டுவதாக இந்த விழா நடைபெறும்.

மண்ணும் மக்களும் விடுதலை பெறும்போது எமது மொழியையும், பண்பாட்டையும் நாம் வளர்த்தெடுத்தவர்களாக இருக்க வேண்டும். அவற்றுக்கான செயற்பாட்டுத் தளத்தில் நாங்கள் அனைவரும் ஒருங்குசேர்ந்து உழைப்போம்

புலிகளின் காலத்தில் மீண்டும் சங்கத் தமிழ் வளரட்டும். அதற்குக் கட்டியம் கூறுவதாக முத்தமிழ் விழா அமையும் என நினைக்கின்றேன்.

விழா சிறப்புற நடைபெற, எனதும், எனது பிரதேச மக்களினதும், எனது தோழர்களினதும் ஆசிகளைத் தெரிவிக்கின்றேன்.

*புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்.*

# மலரை அணி செய்பவர்கள்

**மலர்க்குழு:**

இணுவையூர் சிதம்பரதிருச்செந்திநாதன்
எஸ். கருணாகரன்.
பொன். பூலோகசிங்கம்.
க. பாலநடராஜன் (இளையவன்)
கல்வயல். வே. குமாரசாமி.

**மலர் அமைப்பு:**

இணுவையூர் சிதம்பரதிருச்செந்திநாதன்

**அட்டைப்பட ஓவியம்:**

''ரமணி''

**ஓவியங்கள்:**

தயா, ஞானகுரு, ராஜன்,
இராசையா, மாற்கு.

**அச்சு:**

ம. மரியதாஸ் (மல்லாகம்)

**அட்டை, வர்ண ஓவிய வார்ப்பு:**

''ஞானம்'' (சங்கானை)

**ஓவியங்களுக்கான மரப் படிமம்:**

''ஆனந்தன்''

**வெளியீடு:**

விடுதலைப் புலிகள்
கலை, பண்பாட்டுக் கழகம்
தமிழீழம்.

கவிதைச் சுவையும்
கட்டுரை இன்பமும்
ஓவியம் நல்கும் உணர்வும்
கதையும்
உண்டு மகிழும் உளத்தீர்
உமக்கு
வெல்லத் தமிழில் விருந்தைப் படைத்தோம்
வாழத்தகுந்த வரிகள் கோர்த்து
ஈழத்தறிஞர் எழுதியவற்றை
பக்கம் தோறும் படையல் செய்தோம்.

# மரபுவழிக் கூத்துக்களும் மரபு சாராத நாடகங்களும் இன்றைய பயன்பாடும் எதிர்கொள்ளும் பிரச்சனைகளும்

குழந்தை ம. சண்முகலிங்கம்



நாட்டார் பண்பும், பழமைத் தன்மையும் வழிவழி வரும் பாரம்பரியச் சிறப்பும், எளிமையும் விரவிக் காணப்படும் ஆடல், பாடல் நிறைந்த கூத்துவகைகளை 'மரபு வழிக் கூத்துக்கள்' எனக் கொள்ளும் மரபு ஏற்பட்டு விட்டது. அன்னியர் ஆட்சியின் விளைவாக நாம் கைக்கொள்ள முற்பட்ட புதிய நாடக வடிவங்களை, 'மரபுசாராத நாடகங்கள்' எனக் கூறிக் கொள்ளும் நிலைமையும் மரபாகி விட்டது. இந்த 'மரபுநிலைப்பட்ட பார்வையினை அடியாகக் கொண்டே இங்கு 'மரபுவழிக் கூத்துக்களும் மரபு சாராத நாடகங்களும்' எனும் தொடர் எடுத்தாளப்படுகிறது.

மேற்கண்ட நோக்கு நிலையில் நில்லாத விடத்து, அனைத்து நாடகங்களையுமே 'மரபுவழி' வந்த நாடகங்களாகவே கொள்ளவேண்டி வரும். காரணம், அனைத்து நாடக வடிவங்களுக்கும் தோற்றம், வளர்ச்சி என்றதொரு வரலாறு இருக்கும். அவ்வரலாறு ஒரு மரபினடியாகவே அமையும். எந்தவொரு கலைவடிவமும் சூனியத்திலிருந்து திடீரெனத் தோன்றுவதில்லை. மேலைத்தேயங்களின் செல்வாக்கால்இங்குதோன்றிய வடிவங்களுக்கும் நீண்ட மரபொன்றுண்டு. இன்று நாம் மரபுவழிக் கூத்துக்களுக்குள் அடக்கி விட்டிருக்கும் 'இசை நாடகம்' மேலைத்தேய மூலத்தைக் கொண்டதாகவே உள்ளது. ஏனைய எமது கூத்துக்கள் பலவும், இந்தியத்துணைக் கண்டத்தின் வலையத்துள் அடங்குவனவாகவே உள்ளன. அவ்வாறு இருப்பதே இயல்பும் இயற்கையுமாகும்.

**மரபுவழிக் கூத்துக்கள்**

தமிழர் மத்தியில் பலவகையான கூத்து வகைகள் ஆடப்பட்டு வருகின்றன. அவற்றில் சில இன்று அருகியும், அற்றும் போய் விட்டன. மட்டக்களப்பில் வடமோடி, தென்மோடி, வசந்தன், மகுடி பறைமேளக் கூத்துப்போன்ற பலவும், யாழ்ப்பாணத்தில் வடமோடி, தென்மோடி, காத்தவராயன் வசந்தன், இசைநாடகம் போன்ற பிறவும், மன்னாரில் தென்பாங்கு, வடபாங்கு என்பனவும், வன்னியில் காத்தவராயன், கோவலன் கூத்துப் போன்றவையும், மலையகத்தில், காமன் கூத்து, அருச்சுனன் தபசு, பொன்னர் சங்கர் போன்றவையும் ஆடப்பட்டுவருகின்றன. இப் பிரதேசங்களைத் தவிர திருகோணமலை, சிலாபம் போன்ற இடங்களிலும் கூத்துக்கள் ஆடப்படுகின்றன. (கூத்துக்கள் பற்றி விரிவாக நோக்குவது இங்கு நோக்கமல்ல.)

**மரபுவழி சாராத நாடகங்கள்**

எமது மத்தியில் பயின்று வரும் 'மரபு சாராத' நாடகங்கள் சம்பந்தமானதொரு மயக்கம் நிலவிவருவதை நாம் அவதானிக்க முடியும் 'மரபுசாரத' நாடகங்களை 'நவீன' நாடகங்கள் என்று கருதும் மரபொன்று அண்மைக் காலமாக எழுந்துள்ளது. 'யதார்த்த விரோத' நாடகங்களையே பலர் 'நவீன' நாடகங்கள் என அழைக்கின்றனர். ஆங்கிலக்கல்வியின் காரணமாகவும் தென்னிந்திய நாடகங்கங்களின் வரவு காரணமாகவும் (மரபுவழி எனக்கருதப்படும் இசை நாடகம் அல்லாதவை டீ. கே. ஷண்முகம் குழுவினர் போன்றோர் வருகை), தென்னிந்தியத் தமிழ் சினிமாவின் காரணமாகவும் இங்கு தோற்றம் பெற்று, இன்னும் பரவலாகப் பயின்று வரும், 'சமூக நாடகங்கள், 'அரச' நாடகங்கள், 'சினிமா' நாடகங்கள் போன்றவற்றுக்குள் அடங்கி நில்லாதவற்றை - அதாவது 1970 களின் தோற்றம் பெற்ற காத்திரமான நாடகங்களையே இவர்கள் 'நவீன' நாடகம் என்பர். எழுபதுகளில் எழுந்த நாடக இயக்கத்தின் பலனாகப் பல யதார்த்த விரோத நாடகங்கள் தோற்றம் பெற்றன, காத்திரமான நாடக சிந்தனை உள்ளவர் மத்தியில் இன்றும் யதார்த்த விரோதப் பண்பே மேலோங்கி நிற்கின்றது. இப்பண்பு இன்னும் பல ஆண்டுகளுக்கு நின்று நிலைக்கும் அறிகுறியே தென்படுகிறது.

நாடகம் தெளிவானதொரு வளர்ச்சியை அடைய வேண்டுமென விரும்பி நிற்பவர், நாடக வகைகளையும், வரலாற்றையும் தெளிவுபட வகுத்துக் கொள்வது அவசியம். ஐரோப்பிய நாடக வரலாற்றனுபவத்தை ஆதாரமாகக் கொண்டும், எமது நாட்டின் நாடக வளர்ச்சிப் போக்கினைக் கருத்திற்

கொண்டும், நாம் இப்பணியினை நிறைவு செய்வது அவசியம்.

எம்மைப் பொறுத்த வரையில், எமது நாடக வரலாற்றின் நவீன காலம் எப்பொழுது ஆரம்பமாகிறது என்பதனை நாம் தெளிவு படுத்திக் கொள்வது அவசியம். உலகப் பொதுமையானதொரு நவீன காலத்துள் எமது நாடகத்தின் நவீன காலத்தையும் பொருத்திவிட முடியுமா? அவ்வாறாயின் கலையரசு க. சொர்ணலிங்கத்தோடு எமது நவீன காலம் உதயமாகிறது என்று கூறப்படுவதை நாம் ஏற்றுக் கொள்ளலாமா? அவ்வாறாயின் 'யதார்த்த விரோத' நாடகங்கள் தோன்றிய காலத்தை 'அதிநவீன' காலம் என்பதா? இவையாவும் தெளிவு படுத்தப்பட வேண்டியவையே.

**தமிழ் நாடகம்**

எமது மரபுவழிக் கூத்துக்கள் யாவும் வெவ்வேறு குழுவினரால் ஆடப்பட்டு வந்தவையேயாகும். தமிழர் மத்தியில் நின்று நிலவும் சாதி முறைமை, எமது கூத்துக்களையும் அவ்வழி பகுத்து விட்டது காத்தவராயன் ஆடுவோர் இன்ன சாதியார், இசைநாடகம் ஆடுவோர் இன்ன சாதியார், என்பது போன்ற நிலை, இன்றும் ஓரளவு இருந்தே வருகிறது.

'தமிழ் நாடகம்' என்று கூறுமளவுக்கு, அனைத்துத் தமிழ் மக்களையும் ஒன்றிணைத்ததொரு நாடக வடிவம் தோற்றம் பெற முடியவில்லை. தமிழர் மத்தியில் உள்ள அரங்கு என்று நோக்கலாமேயன்றித் 'தமிழ் அரங்கு' என்று நோக்கமுடிவதில்லை எனப் பேராசிரியர் கா சிவத்தம்பி கூறுவது கருத்திற் கொள்ளப்படவேண்டிய தொன்றாகும். எனவே, 'தமிழ் அரங்கு' ஒன்றினை வகுத்தமைத்துக் கொள்ள முற்படுபவர், எமது கூத்துக்களின் வரலாற்று நிலை பற்றிய தெளிவானகருத்துக்களைக் கொண்டிருப்பது அவசியம்.

**அந்நியர் ஆட்சியும் எமது அரங்கும்**

அன்னியர் ஆட்சியின் பேறாக இங்கு கத்தோலிக்க மதம் பரவிற்று. மத்தியகால ஐரோப்பாவின் அனுபவத்தைக் கொண்டு எமை ஆண்ட ஐரோப்பியர், மதப்பிரசாரத்துக்காக இங்கு பயின்று வந்த நாட்டுக் கூத்துக் கலையையும் பெரிதும் பயன் படுத்தினர். இதன்பயனாக, ஆட்டம் அருகிய வடிவமாகக் 'கத்தோலிக்கக் கூத்து' வளர்ச்சி பெற்றது. அக்கூத்தும் குறித்தவொரு மதம் சார்ந்தவர்களால் ஆடப்படும் கூத்து என்ற நிலையில், ஏற்கனவே இருந்த பிரிவுகளோடு மேலுமொன்றைக் சேர்த்து விடுவதாகவே அமைந்தது.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் நாடகத் துறையிலும், பல புதிய பரிமாணங்களைத் தோற்றுவித்தது எனலாம். எமது நாட்டில் ஆங்கிலத்தை கற்றவர்கள், ஆங்கில நாடகத்தையும் தரிசிக்கும் வாய்ப்பினைப் பெற்றனர். ஆங்கில இலக்கியத்தினூடாகவே அவர்கள் நாடகத்தைப் பெரிதும் தரிசித்தனர். ஷேக்ஸ்பியரின் நாடகங்களையேஅவர்கள் கற்றனர் ஷேக்ஸ்பியரது நாடகங்களை நடிக்கும் இரண்டொரு நாடகக் குழுக்களும் இங்கிலாந்திலிருந்து இங்கு வந்து போயின. ஷேக்ஸ்பியர் நாடகங்களையே பல்கலைக் கழகங்களிலும், பெரும் பாடசாலைகளிலும் எம்மவரும் நடித்தனர். ஷேக்ஸ்பியருக்கு பின்னர் நாடக உலகம் சுற்ற மறுத்து விட்டதென நம்பும் சிலர் இன்னும் எம்மத்தியில் உள்ளனர்.

ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர் நாடகங்களை நடித்ததோடு நில்லாது தமிழில் மொழி பெயர்த்தும் நடித்தனர். ஆங்கிலப் பெயர்களைத் தமிழ் மயப்படுத்திப் பாத்திரங்களையும், சூழலையும் எமக்கு அண்மித்ததாக்க முயன்றனர்; உதாரணம் ஹம்லட் அமலாதித்தனானான்; வெனிஸ் நகரம் வாணிபுரம் ஆனது, பம்மல் சம்பந்த முதலியார் வாயிலாக இம் மொழிபெயர்ப்பு நாடகங்கள் எம்மை வந்தடைந்தன. 'பம்மலைத்' தனது குருவாகக் கொண்ட

கலையரசு இவற்றைப் பக்தி விசுவாசத்தோடு தயாரித்தார்.

பிற்காலங்களில் ஷேக்ஸ்பியர் மட்டுமன்றி வேறு சில ஆங்கில நாடகாசிரியர்களதும், ஐரோப்பிய நாடகாசிரியர்களதும் நாடகங்கள் இடையிடையே மொழிபெயர்த்து அரங்கேற்றப்பட்டன. இவையாவும் கற்றறிந்தவர் மத்தியிலேயே நிகழ்த்தப்பட்டன.

வேற்று மொழி நாடகங்களை மொழிபெயர்த்தும், தழுவியும் அரங்கேற்றும் முயற்சி ஆங்கிலக்கல்வியோடு ஆரம்பித்து, இன்று வரைதொடர்ந்து வருகிறது. எண்பதுகளின் ஆரம்பத்தில், 'அவைக்காற்றுக் கலைக்கழகம்' பிறமொழி நாடகங்களை அரங்கேற்றியமை குறிப்பிடப்படவேண்டிய ஒன்றாகும்.

**நாடகங்களில் சினிமாவின் தாக்கம்**

சினிமா, 'ஊமைப் படமாக'த் தோற்றம் பெற்ற போது, அக்காலத்தில் இருந்த விகடநாடகங்களும், 'சேர்க்கசும்' சினிமாப் படங்களாக வெளியிடப்பட்டமை மேலைத்தேய சினிமாவின் ஆரம்பவரலாறாகும். நாடகநடிகர்களே ஆரம்பகாலங்களில் சினிமா நடிகர்களானார்கள். இவற்றின்காரணமாக ஆரம்பகால சினிமாக்கள் நாடகப் பண்பினைப் பெரிதுங் கொண்டவையாக இருந்தமை இயல்பான ஒன்றே. ஆயினும் மேலைத் தேயங்களில் சினிமா விரைவில் நாடகத்திலிருந்து விடுபட்டுத் தனது தனித்துவத்தை நிலைநாட்டிக் கொண்டது.

ஆனால் தென்னிந்திய தமிழ்ப்படங்களைப் பொறுத்த வரையில், இசை நாடகங்களினதும், அரச நாடகங்களினதும், பின்னர் வந்த நீண்ட வசனநாடகங்களினதும் செல்வாக்கு, மிக நீண்ட காலத்துக்கு நீடித்து வந்தது. இன்றும் சினிமாவில் நாடகப் பண்பு முற்றாக மறையாத நிலையே இருந்து வருகிறது.

அதேவேளையில் சினிமாவின் செல்வாக்கு நாடகங்களில் புகுந்தமையால் எமது நாடகம் சரியான முறையில், காலத்தின் தேவைகளை ஒட்டி வளர முடியவில்லை, ஒரே கதை, ஒரே மோடியில், இரு ஊடகங்களிலும் பலகாலமாக நடிக்கப்பட்டு வருகிறது. இசை நாடகங்கள், ஆரம்ப கால சினிமாக்களில் நடிக்கப்பட்டன. அவற்றின் காட்சியமைப்புக்களைச் சினிமாவில் பார்த்த இசைநாடகக் கலைஞர் தமது மேடை நாடகங்களிலும் அத்தகைய காட்சியமைப்புக்களைச் செய்துகொண்டனர். அரச நாடகங்களுக்கும் இதேகதிதான் ஏற்பட்டது.

சினிமா மிகவிரைவில் மக்கள் மனதைக் கவர்ந்துவிட்டது. அக்கவர்ச்சியின் விளைவாக நாடகம் பலவழிகளில் பாதிப்புக்குள்ளானது. சினிமாநாயகர்கள் நட்சத்திரங்கள் ஆயினர். நட்சத்திர நடிகரின் நடிப்பு முறைமைகள், அப்படியே நாடகநடிகரால் பிரதி பண்ணப்பட்டன, அவர்களைப் போலவே நடிக்கும் பல கூத்து நடிகர்களும் இசை நாடக நடிகர்களும் எம்மத்தியில் இன்றும் இருக்கிறார்கள். இதனால் எமது பாரம்பரிய நாடகங்கள் காட்சியமைப்பு, நடிப்பு முறைமை என்பவற்றில் சினிமாவின் செல்வாக்குக்கும் சினிமா நடிகரின் செல்வாக்குக்கும் உட்பட்டது. கற்றவரின் கூத்துத்தயாரிப்பிலும் இந்த நிலைமை இருப்பதை அவதானிக்க முடிகிறது. பாரம்பரிய கூத்துக்களின் தூய்மையைப் பேண விரும்புவோர், இது பற்றி மிகுந்த அக்கறையோடு கவனிப்பது அவசியமாகிறது. ஆற்றுகைக் கலைகள் காலத்தோடு சேர்ந்து மாற்றத்துக்குள்ளாவது இயல்பு. ஆற்றுகை செய்வோர், அரங்க அறிவும் நாடகங்களின் வகைத்தூய்மை பற்றிய தெளிவும், பாரம்பரியக் கலைவடிவங்களை எவ்வாறு பாதுகாக்க முடியும் என்பது பற்றிய அக்கறையும், பிற நாடுகள் எவ்வாறு பிரதான கலை வடிவங்களைக் குறித்தவொரு வளர்ச்சியில் வைத்துப் பாதுகாத்து, அதன் மோடித் தூய்மையை

உறுதிசெய்துள்ளனர் என்ற அறிவும் கொண்டவராக இருப்பது மிகவும் விரும்பத்தக்கது, இத்தகையக பொதுப்பணிகளில் சொந்த விருப்பு வெறுப்புக்கள் குறுக்கிடாது, அத்தகையோர் பார்த்துக் கொள்வது அவசியம்.

சினிமா, மேலுமொரு வகையிலும் எமது மரபு சாராத நாடகங்கள் பலவற்றைப் பாதித்து வந்துள்ளது. சினிமாவில் வந்த 'கதை வசனங்களை' அப்படியே மேடையில் நடிக்கும் பழக்கம் பலகாலமாக எமது மத்தியில் இருந்து வருகிறது. இவற்றைச் 'சினிமா நாடகங்கள்' என்று கொள்ளமுடியுமா? இரண்டு வெவ்வேறு ஊடகங்களாக இருக்கையில், இவ்வாறு கொள்வது தவறாகி விடும். சினிமாவின் மீதுள்ள கவர்ச்சியாலும் காதலாலும் இத்தகைய நாடகங்களைத் தயாரிப்பவர்கள், பெரும் பாலும் கிராமத்து இளைஞர்களாகவே உள்ளனர். இவர்கள் பரிவுக்குரியவர்கள். நாடகம், சினிமா ஆகிய ஊடகங்களின் தனிச்சிறப்புக்களை இவர்கள் அறிய வாய்ப்பிருப்பின் இத்தகைய தவறுகளைத் தொடர்ந்து செய்ய வாய்ப்பிராது, எனவே சினிமாவால் ஏற்படுத்தப்பட்டுள்ள மேற்கண்ட குழப்பங்களிலிருந்து எமது நாடகத்தையும் (மரபுவழி மரபுசாராத இரண்டையும்) நாடக நடிகரையும்' பார்வையாளர்களையும் மீட்டெடுப்பது அவசியம் நாடகம், அரங்கம் சார்ந்த தெளிவின்மைக்கும், அதனால் எழும் சர்ச்சைகளுக்கும், இதுவே அடிப்படைக் காரணமாக அமைகிறது.

**கூத்தின் மறுமலர்ச்சியும் வித்தியானந்தனும்**

மக்கள் கூட்டமொன்று சுதந்திரம் பெற்றதாக உண்மையில் இருக்க வேண்டுமாயின் அது பல சுதந்திரங்களைப் பெற்றதாக இருக்கவேண்டும், கலாசார சுதந்திரம் அத்தகையவற்றுள் ஒன்று. தமது கலைகள் பற்றிய அறிவும், பெருமிதமும் கலாசார சுதந்திரத்தை விளைவிக்கும் காரணிகளுள் ஒன்று. 1948ஆம் ஆண்டு, மக்களுக்கு இத்தகைய பலசுதந்திரங்களை அளிக்கவில்லை. அன்னிய மோகம் இதற்கு தடையாக அமைந்தது. பாரம்பரிய கலைகளினூடு மக்களது கலாசாரச் சுதந்திரத்தைப் பேணுவதில் பேராசிரியர்கள் சரத்சந்திராவும், வித்தியானந்தனும் அக்கறை கொண்டனர். வித்தியானந்தனின் இப்பணி, பிரதேசவாரியாகப் பிரிந்திருந்த தமிழர்களை ஒன்றுபட்டதொரு மக்கள் கூட்டமாக்குவதற்குப் பெரிதும் துணை நிற்கக் கூடியதொன்றானது. மட்டக்களப்பு, மன்னார், யாழ்ப்பாணம், மலையகம் ஆகிய பிரதேசங்களின் பாரம்பரியக் கலைவடிவங்களை, அனைத்துத்தமிழ் மக்களும் கண்டனர். இவற்றைக் கண்ட கற்றவர் சிலர், தமிழரின் கலாசாரத்தின் கலை மூலங்களைக் கண்டு கொண்டனர். தமிழ்மக்களை ஒன்று படுத்தமுனைந்த அரசியல் வாதிகள் காணத்தவறிய, ஒன்று படுத்தலுக்கான மூலத்தை, வித்தியானந்தனின் கூத்து மீட்புப்பணி, வெளிப்படுத்தி நின்றதை, நிற்பதைப் பலரும் உணர்ந்து கொள்வது அவசியம். தமிழ் அரங்கின் தோற்றத்துக்கான அத்திபாரத்தை அவர் அமைத்தார்.

அவர் வழியில் நின்று பணிபுரிய முற்படுபவர்கள், பலவற்றைக் கருத்திற் கொள்வது அவசியம்; அண்ணாவிமாரையும், அரங்க அறிவுடையோரையும், ஆற்றலுள்ள கலைஞர்களையும் ஒன்றிணைத்து, அவர் தனது பணியைப் புரிந்தார்; அண்ணாவிமாருக்கு உரிய கௌரவத்தைக் கொடுத்தார்; கூத்துக்கலையையும் தன்பணியையும் விசுவாசித்தார்; கூத்தைபரவலாக்கப் பல வழிகளைக்கண்டார்; கூத்தைச் செழுமைப்படுத்தச் சிறந்த வழிகளைப் பலரிடம் அறிந்தார். இன்று அவரது பணி முடிந்து இரு தசாப்தங்களுக்கு மேலாகிறது; இவ்விடைக்காலத்தில் நாடக, அரங்க முயற்சிகளும், அறிவும் பல மாற்றங்களையும் வளர்ச்சிகளையும் அடைந்துள்ளன; அவர் செய்ததை அப்படியே இன்று திருப்பிச் செய்வதிலும் எது வித பயனுமில்லை; கால மாற்றம், கருத்து நிலை முதிர்ச்சி, அவர் பணியின் பயனாக விளைந்த பேறுகள் என்பவற்றைக் கருத்திற் கொண்டே, மரபு வழிக்கூத்துக்களைப்

பேணும் பணியினை மேற்கொள்ளுதல் சிறந்தது; இது தமிழ் மக்களை எதிர்நோக்கி நிற்கும் ஒரு முக்கியமான பிரச்சினை என்பதை நாம் உணர்ந்து கொண்டு செயல் முனைப்புப் பெறுவது அவசியம்.

அறுபதுகளின் பிற்பகுதியிலும் எழுபதுகளிலும், காத்திரமான முறையில், நாடக, அரங்க அறிவோடும், கொள்கைப்பற்றோடும் செயற்பட முனைந்த, கற்ற தமிழ் இளைஞரும், அறிஞரும் ஒன்றிணைந்து கரும மாற்றும் நிலை, கொழும்பில் ஏற்பட்டது. இவர்கள் மேலைத்தேய நாடக, அரங்க அறிவையும், சிங்கள நாடக உலகில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிய அறிவையும், வித்தியானந்தனின் பணியால் விளைந்த கூத்தார்வத்தையும் கொண்டவர்களாக இருந்தனர். இதன் பெறுபேறாக இவர்களிடமிருந்து பல காத்திரமான நாடகங்கள் தோன்றின. அவை, யதார்த்தவகை நாடகங்கள் முதல் யதார்த்த விரோத நாடகங்கள் வரையிலும் மொழிபெயர்ப்பு நாடகங்கள் முதல் மரபு வழிக்கூத்துக்களை அடியொற்றிய 'புதிய மோடி' நாடகங்கள் வரையிலும் பரந்துபட்டதாக அமைந்திருந்தன. இவற்றில் பரிச்சயமில்லாத ஏனைய நாடக ஆர்வலர்கள் இவற்றை 'நவீன' நாடகங்கள் எனக்கூறினர்.

### தேசிய நாடகம்

வித்தியானந்தனின் பணியால், எமது பாரம்பரியக் கலை வடிவங்களில் ஆர்வங் கொண்ட, மேற்கண்ட கலைஞர்கள், கூத்துக்களை அடியத்திபாரமாகக் கொண்டதொரு நாடகவடிவத்தைத் தோற்றுவிக்க முயற்சிக்கவேண்டுமென்பதில் ஆர்வம் கொண்டனர். அதுவே எமது 'தேசியநாடக'மாக அமையும் என்பதில் நம்பிக்கை கொண்டனர். இக்கருத்தினை மறுத்தும் ஆதரித்தும் நீண்ட சர்ச்சைகள் எழுந்தன. மேலைத்தேய நாடகங்களில் முழுவிசுவாசங்கொண்டசாரார் 'தேசிய நாடகக்' கொள்கையினையும் அவர்கள் தயாரித்த பல நாடகங்களையும் முற்றாக நிராகரித்தனர். 'தேசிய நாடகம்' என்னும் கருத்தினை அனுதாபத்தோடு பார்த்தவர் மத்தியிலும், அவ்விலக்கினை எவ்வாறு அடையலாம் என்பதில் கருத்து மாறுபாடு நிலவியது. கூத்தொன்றின் வடிவத்தூய்மை கெடாது, புதிய உள்ளடக்கத்தைப் புகுத்தி நாடகம் அமைப்பதன் மூலம் ' 'தேசிய நாடக' இலக்கை அடைந்து விடமுடியுமென, அவர்களில் ஒரு சாரார் கருதினர். ஒரு வகைக் கூத்தின்வடிவத்தை மட்டும் எடுத்துக் கொண்டு நாடகம் படைக்க முற்பட்டால் அவ்வடிவம் பல எல்லைகளையும் கட்டுப் பாடுகளையும் படைப்பாளி மீது விதித்து விடுமென மறு சாரார் கருதினர். கூத்துக்களின் ஆடல் பாடல்களை வேண்டியவாறு வேண்டிய இடங்களில் பயன் படுத்திக் கொள்வதன் மூலம், கட்டுப்பாடு எதுவுமற்ற முறையில் 'தேசிய நாடக' வடிவத்தைப் பிறப்பிக்க முடியுமென இவர்கள் கருதினர். ஆடல் பாடல் மட்டுமன்றி உரை நடைமுறைமை, நாட்டார் பாடல்கள், நொடிகள், பழமொழிகள் தேவார திருவாசகங்கள், மற்றும் தமிழ் இலக்கியத்தில் உள்ள பாடல்கள், புதிய கவிதைகள், என எதுவித கட்டுப்பாடு மற்ற முறையில் வேண்டியதைப் பயன் படுத்தி எமது நாடக முறைமையை வளர்த்தெடுத்துச் செல்ல முடியுமெனப் பிற்காலத்தில் ஒரு கருத்தும் தோன்றியது. இவர்கள் யாவரும் மேலைத்தேய நாடக முறைமைகளையும் தமது நாடக வாக்கத்தில் இணைத்துக் கொள்ளப் பின்நிற்கவில்லை. துரதிஷ்டவசமாக, இம்முயற்சியில் ஈடுபட்டோர், பல காரணங்களால், எண்பதுகளின் பின்னர் எண்ணிக்கையில் மிகக் குறுகி, ஒரு குழுவினர் போல அமைந்து விட்டமையால், நாடக வடிவம் ஸ்தம்பிதமடைந்து விட்டதென்றதொரு கருத்து மேலோங்கத் தொடங்கியது. பலர் இருந்திருப்பின், பல தனித்தனிவேறுபாடுகளுடன் கூடிய மோடிகள் தோன்ற வாய்ப்பிருந்திருக்கும், எது எவ்வாறாயினும் வடிவ இறுக்கம் வருவதென்பது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றேயாகும். காத்திரமான

சிந்தனை உள்ளவர் பலரும், இணைந்தும், புரிந்துணர்வோடு பிரிந்து நின்றும், படைப்பில் ஈடுபடுவதன் மூலம் புதிய புதிய பரிமாணங்களை அடையமுடியும். கடந்த இருபது ஆண்டுகளில் தமிழ் நாடகத்தின் போக்கினை நிர்ணயிப்பதில் 'நடிகர் ஒன்றியம்' 'அவைக் காற்றுக் கலைக்கழகம்' 'நாடக, அரங்கக் கல்லூரி' என்பவற்றின் பங்கு கவனத்தில் கொள்ளப்பட வேண்டியதொன்றாகும்.

**நாடகம் யாழ்ப்பாணத்தில் குவிமையங் கொண்டமை**

1977இன் பின்னர் காத்திரமான முறையில் நாடகம் பற்றிச் சிந்தித்துச் செயற்படும் நிலைமை கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்தை நோக்கி நகர்ந்ததெனலாம். அதற்கான காரணங்களை இங்கு நோக்குவது அவசியப் படவில்லை. 'அவைக்காற்றுக் கலைக்கழகம் 'நாடக அரங்கக் கல்லூரி' என்பன தோற்றம் பெற்றன. கலையரசின் வழியில் வந்தவர்களும் நடிகர் ஒன்றியக் கலைஞர்களும் காத்திரமான சிந்தனையோடு நாடகங்களைப் பலகாலமாகத் தயாரித்து வந்த மன்றங்களைச் சேர்ந்தவர்களும், தனிப்பட்டவர்களும் 'நாடக அரங்கக் கல்லூரி'யின் பணிகளிலும், பயிற்சிகளிலும், படைப்புக்களிலும் பங்கு கொண்டனர். 'அவைக் காற்று கலைக் கழகத்தின்' தயாரிப்புக்கள் மூலம் உயர்மட்ட ரசிகர்களும், நாடகக் கலைஞர்களும் வேற்றுமொழி நாடகங்களைத் தரிசிக்கும் வாய்ப்பினைப் பெற்றனர். நாடக அரங்கக் கல்லூரியின் தற்புதுமை நாடகங்கள் உயர்மட்ட ரசிகரையும் சாதாரண ரசிகர்களையும் சென்றடைந்தன. 'நாடக அரங்கக் கல்லூரியின் கலைஞர்களின் ஒத்தாசையுடன் யாழ் பல்கலைக் கழக கலாசாரக் குழு தயாரித்த நாடகங்கள், புதிய நாடக அனுபவங்களைச் சாதாரண மக்கள் மத்தியிலும் பரப்பியது. இது நாடகம் பற்றிய புதிய சிந்தனைகளுக்கும், எதிர்ச் சிந்தனைகளுக்கும் பரவலான வகையில் வாய்ப்பளித்தது.

நாடகம் பற்றிய கல்வியும் யாழ்ப்பாணத்திலேயே மையங்கொண்டது. க. பொ. த. உயர் தரத்திலும், வட இலங்கை சங்கீத சபையிலும், யாழ் பல்கலைக் கழகத்திலும் நாடகமும், அரங்கக்கலைகளும் ஒரு பாடநெறியானது. இப்பயில்வின் பரப்புப் படிப்படியாக விரிவடைந்து வருகிறது. இக்கட்டத்தில். பயில்வும் செய்முறையும் சமநிலையைப் பேணிக்கொள்வதன் அவசியத்தை நாம் உணர்ந்து கொள்வது அவசியம். வெறும் பாடமாகப் பயிலப்படுவதும், தனிப் பயிற்சியாகச் செய்யப்படுவதும், நாடகத்துக்கோ அதில் ஈடுபடுபவர்களுக்கோ எந்தப் பயனையும் அளித்து விடாது. ஆற்றுகைக் கலை என்ற வகையில் நாடகம் சம்பந்தப்பட்ட ஆற்றுகைப் பயிற்சிகளோடு உலகநாடகங்களினதும், எமது நாடகங்களினதும் வரலாற்றுப் பின்னணி நாடகக் கோட்பாடுகள் அரங்கின் பல்வேறு பரிமாணங்கள், ஏனைய கலைகளோடு நாடகம் கொள்ளும் தொடர்பும், அதன் தனித்துவங்களும், நாடகத்தினூடு மனிதனை அறிதல், வாழ்வைப் புரிந்து கொள்ளுதல் போன்ற பல்வகைப்பட்ட அறிவையும் பெற்றுக் கொள்வது, நாடகக் கலைஞர் ஒவ்வொருவரது பணியுமாகும். இதைப் புரிந்து கொள்ள முன்வராதவர்கள், காற்றடிக்கும் வேளையில் சலசலத்து விட்டுக் காற்றோடு அள்ளுண்டு சென்று மறைந்து போக வேண்டியவர்களாகி விடுவர்.

**மரபுவழிக் கூத்துக்களின் இன்றைய தேவை:**

தேடுதல், பேணுதல், பரவலாக்குதல் பயன்படுத்தல் என்ற மட்டங்களில் நாம் இத்துறையில் செயற்படுவது அவசியம். அனைத்து மரபுவழிக் கலைகளையும் தேடிக் கண்டு, ஒலி, ஒளிப் பதிவுகள், செய்து வைத்துக் கொள்வது முக்கியம். கூத்துக்களை உள்ளவாறு வைத்து, அவற்றில் காலத்தால் படிந்த ,மாசுகளை' நீக்காது. பேணுவதில் பயனில்லை. குடியரசு 'சீனா' தனது 'பீக்கிங் ஒப்பேராவைப் பேணிக்கொண்ட முறைமையும், யப்பான் தனது நோஹ்'. 'கபுக்கி

போன்ற வடிவங்களைப் பேணிக் கொண்ட முறைமையும், எமக்கு நல்ல முன்னுதாரணங் களாகவுள்ளன. புதிய பீக்கிங் ஒப்பேரர் சிறந்த பயன் படுத்தலுக்கும் முன்னுதார ணமாக உள்ளது. நல்ல முன்னுதாரணங் களைக் கருத்திற் கொள்ளாது, நாம் கூத் துக்களை நவீன தேவைகளுக்காகப் பயன் படுத்திய வேளைகளில், தவிர்த்திருக்க வேண் டிய தவறுகளையும், இணைத்திருக்கிறோம். யாரைக் கொண்டு கூத்துக்களைப் பரவலாக்க முடியும் என்பதிலும் எமக்குக் கருத்துத் தெளிவிருப்பது அவசியம். பேணலும் பரவ லாக்கலும் தொடர்ச்சியாக இருக்கவேண்டி யவை. பரவலாக்கல் என்பது ஒரு மட்டுப் பாட்டுக்குள்ளேயே அமையும், தொடர்ந்து செயற்படக் கூடியவர் பாரம் பரியக் கலை ஞர் அன்றிப் பயில் முறைக் கலைஞர்க ளல்லர்.

எமது தேசியத் தன்மையை இனங்காட் டுவதற்கும் பண்பாட்டினடியாக எமது நாடகத்தை வளர்த்தெடுப்பதற்கும், உலக நாடகத்துக்கு எமது பங்கினை ஆற்ற முயற் சிப்பதற்கும், எமக்கானதொரு பொது இசை' நடன முறைமையை உருவாக்கிக் கொள்ள முயல்வதற்கும், நாம் மரபுவழிக் கூத்துக்களில் கவனம் செலுத்தவேண்டியுள் ளது. இவை யாவும் தனிநபர்களாலன்றி உயர் ஸ்தாபன மொன்றினாலேயே செய் யப்படக் கூடியவையாகும்.

**எம்மத்தியில் இன்றுள்ள நாடகங்கள்**

பலவகையான மரபுவழிக் கூத்து வகை கள், கலையரசு வழியிலும், ஏனைய காத் திரமான நாடக மன்றங்கள் வழியிலும், தென்னிந்திய சபா நாடகங்களின் வழியிலும் வந்து இன்று பொதுவாகச் சமூக நாடகங் கள், அரச நாடகங்கள், எனப்படும் நாடக வகைகள்; நாடக அரங்க அறிவினை ஓரள வேனும் பெற்றவர்கள் தயாரிக்கும் யதார் த்த விரோத நாடகங்கள், யதார்த்த நாட கங்கள், மரபுவழிவடிவங்களுள் புதிய உள் ளடக்கத்தைப் புகுத்திய வடிவங்கள், புதிய நாடகப்போக்குகளைக் கண்ணுற்ற அருட் டுணர்வால் தயாரிக்கப்படும் வடிவங்கள்; சினிமா மாயை நாடகங்கள்: தெருவழி நாடகங்கள், சிறுவர் நாடகங்கள் பாடசா லை நாடகங்கள் இன்று அறிமுக நிலை யில் நிற்கும், நாடக வீடு எனும் அரங்க வடிவம் என்பன இன்று எம்மத்தி யில் பயிலப்பட்டு வரும்நாடக வகைகளும் வடிவங்களுமாகும். இவற்றில் சினிமாமாயை நாடகங்களைத் தவிர்ந்த அனைத்தும், வளர்த்தெடுக்கப்பட வேண்டியவையாகும்' அவற்றை ஆற்றுவோர், அவற்றின் வகைச் சிறப்பையும் வடிவத்தனித்துவத்தையும் தெளிவுற அறிந்து தயாரிப்பது அவசியமாகி றது. அதை அறிய அனைவரும் முன்வர வேண்டும். ஒருவகை நாடகம்தான் நாடகம் என்று, என்றும் இருப்பதில்லை. அதேவே ளையில்' வடிவங்களும் வகைகளும் கலைஞ னின் சிருஷ்டிச் சுதந்திரத்தை மட்டுப்படுத் துவனவாக அமைவதும் தவறு. கலைஞனின் கற்பனைக்கும் சிருஷ்டிப் புதுமைக்கும் பிர பஞ்சங்கூட எல்லையாக அமைவது தவறு என்பதை நாம் மீண்டும் மீண்டும் மனத்தி ருத்திக் கொள்வது அவசியம். இன்று தேசிய நாடகம் என்பதற்கப்பால் சென்று சர்வதே சிய அரங்கை அமைக்கும் எண்ணம் பல நாடு களில் தோற்றம் பெற்றுவருகிறது.

**முடிவுரை**
**சேரவாரும் சகத்தீரே!**

கலைஞர்கள் என்றாலே ஒற்றுமைப் படாதவர்கள், என்பது சந்ததிக் கையளிப் பாக வந்துகொண்டிருக்கிறது. கருத்துக்களில் நாம் வேறுபடலாம், நாடகவகை வடிவம் என்பதில் எமக்கு வெவ்வேறானவற்றில் நாட் டமிருக்கலாம். நாடக அரங்க வளர்ச்சியும் அதனூடுமக்களின் வளர்ச்சியும் எமது குறி யிலக்காக இருக்குமாயின், நாம் ஒன்றுபட்டு' இணைந்து சிந்தித்து, பின் இணைந்தும் தனித்தனியேயும் எமது பணிகளை மேற் கொள்வதற்கு எதுவும் தடையாக இருக்க முடியாது. □□



# ஈழத்தமிழர் எழுச்சியில் கவிதைக் கலையின் பங்களிப்பு

இ. முருகையன்

ஈழத்தமிழர் எழுச்சி என்பது இந்த நூற்றாண்டுத் தமிழர் வரலாற்றிலே தோன்றியுள்ள மிகவும் பிரதானமான நிகழ்வு. இன்று இது தென்னாசிய அரசியல் அரங்கிலே, நடுமேடையைப் பிடித்துக்கொண்டிருக்கிறது என்று கூறலாம். வரலாற்று நிகழ்வுகள் எல்லாமே, ஒரு விதத்தில், ஆதி அந்தம் இல்லாதவை. எது தொடக்கம் எது முடிவு என்று வரையறுத்துக் கூறுவது இலகு அன்று. ஈழத்தமிழர் எழுச்சி என்னும் நிகழ்வுங்கூட அந்த நியதிக்குப் புறம்பானதல்ல. இதன் திட்டவட்டமான தொடக்கம் எது என்றோ அந்தத் தொடக்கம் இடம் பெற்ற காலம் — நேரம் முகூர்த்தம் எது என்றோ கணித்துக் கூறுதல் இயலாது. ஆனால் வசதியின். பொருட்டு வரலாற்றின் ஓட்டத்தைச் சில கட்டங்களாக வகுத்து அவற்றுக்குத் தொடக்கமும் முடிவும் கற்பிப்பது அறிஞர்களின் வழக்கமாக உள்ளது

பருமட்டாகப் பார்க்கும்போது, தமிழர் இலங்கையிலே தம்மை ஒரு தேசியக் குழுமாகக் கருதி, தமது உரிமைகள் அரித்தெடுக்கப் படுகின்றன, என்ற உண்மையை உணரத் தொடங்கிய காலம் ஆயிரத்துத் தொளாயிரத்து ஐம்பதுக்குச் சற்று முந்தியது எனலாம் அக்காலந்தொட்டே ஈழத் தமிழர் எழுச்சிக்குத்

தமிழ்க் கவிதைக் கலையும் (ஏதோ ஒரு விதத்திலே) தனது பங்களிப்பைச் செய்யத் தொடங்கிவிட்டது. நாற்பத்தெட்டாம் ஆண்டுக்கும் ஐம்பதாம் ஆண்டுக்கும் இடையில் என்று நினைக்கிறேன் -- புயல் என்னுமொரு சஞ்சிகையில் ஒரு கவிதையைப் படித்த நினைவு இலேசாக நெஞ்சத்தில் நிழலிடுகிறது. அந்த ஏட்டின் ஆசிரியர் வை. இராவணன், பாட்டின் தலைப்பு, 'படை திரண்டு வருவதனை பாரீர் சொன்னேன்' பாட்டை இயற்றியவர் தில்லைச்சிவன். அதில் வரும் வீறு மிகுந்த கூற்றொன்று என் நினைவிலே இப்போதும் பசுமையாய் உள்ளது.

''செந்தமிழான் செரு என்றால் வாளைத் தொட்டுச்
சீறி எழும் சிங்கமடா! சிந்தித்தாயா?''

செரு என்பது போர். கவிஞர் கருதும் போர் எப்போது வரும், ஏன் வரும் என்பன எல்லாம் அந்தப் பாட்டிலே தெளிவாக எடுத்துரைக்கப்படவில்லை. ஆனால் தமிழர் மரபிலே வந்த வீரமுழக்கத் தொனியின் ஆவேச ஆற்றல் முழுதும் அந்தக் கவிதை அடியிலே பொதிந்து வைக்கப்பட்டுள்ளது அல்லவா?

இதே கவிஞர், 'ஈழம் எமதுநாடு, என்று மற்றொரு கவிதையையும் இயற்றியுள்ளார்.

''ஈழம் எமதுயர் நாடு — எந்தை
இருந்து மகிழ்ந்து மடிந்த மண்மேடு
சூழும் துயர் முடித்திங்கே — சுத்த
சுதந்திரராக மகிழ்ந்திடுவோமே
ஓலமிட்டாவதொன்றில்லை — நித்தம்
உதைபட்டு வாழ்வதும் தொல்லை
காலம் வருமந்த வேளை — எதிர்
காத்திருந்தே எடு வாளை''

முற்கூறிய பாட்டிலும் வாள் வருகிறது, இந்த இரண்டாவது பாட்டிலும் வாள்வருகிறது. பாரதிதாசன் கூட,

''விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி கலக்குதற்கும் ... .....
மண்ணிடை வாளை ஏந்திப்
பகைப் புலம் மாய்ப்பதற்கும்
எண்ணிலாத் தமிழர் உள்ளார்?''

எனும் நிலை காண்பதன்றோ?
என்றுதான் பாடுவான்

''கையிலே வேல் ஏந்திக்
கடல் உலகாளும் வேந்தர்''

பற்றி அவன் பெருமைப்படுவான்

> ''கொலை வாளினை எடடா — மிகு
> கொடியோர் செயல் அறவே''

என்று தமிழ் மகனைக் கூவி அழைப்பான் அந்தப் பாவேந்தன்

இங்கெல்லாம் வாளும் வேலும் தாங்கிப் போரிடும் பழந் தமிழ் வீரந் தான் பெருமையுடன் எண்ணிப் பார்க்கப் படுகிறது. நவீன ஆயுதங்கள் பற்றிய எண்ணமோ புதிய சுடுகலன்கள், எறிகணைகள் பற்றிய குறிப்பு களோ மருந்துக்கும் கிடையாது. அது ஒரு நிலை. அந்த நிலையில் எழுந்த ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டுகள் எல்லாம் கள அநுபவத்தின் நேரடிப் பேறு களாகத் தோன்றியவை அல்ல, அநீதிகளையும் அடாவடித்தனங்களை யும் கண்டு மூண்டெழுந்த சீற்றத்தின் விளைவாகத் தோன்றிய எதிர்ப்பு முழக்கங்கள் என்று அவற்றைக் கூறலாம். நம்மவருக்கு உணர்ச்சியூட்ட வேண்டும் என்ற ஆர்வ வேகத்திற் பறந்த கனற்பொறிகள் அவை. இதோ, இராஜபாரதி என்ற வி. கி. இராஜதுரையின் பாட்டிலே பறந்து வந்த ஒரு பொறி ...

> '' தமிழ் மொழியும் தாய் நாடே, உன்னைக் காக்கத்
> தலை அரிந்து தருவேன், என் தாலி பூண்ட
> அமுதனைய மனையாளைப் பிரிவேன்: ஆடும்
> அலைகடலுட் குதிப்பேன்; உன் அன்புக்காக
> உமி தவிடே என்றாலும் உண்டு வாழ்வேன்...''

இந்தப் பாட்டைப்பற்றி நண்பர் '' மஹாகவி '' யுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது அவர் கேட்டார் — தலையை அரிந்து தருவதனாலே ஆருக்கு என்ன நன்மை? ஒருவர் அலைகடலுள்ளே குதிப்பதனால் என்ன நடைமுறைப் பயன் கிடைக்கப் போகிறது?' நண்பரின் விமரிசனம் சரியா னது என்று தான் அன்று எனக்கும் தோன்றியது. ஆனால், தாம் பெரி தெனக் கருதும் பெருங்குறிக் கோள் ஒன்றின்பொருட்டுத் தம் உயிரையே வழங்குகின்ற வீரப்பெருஞ் செயல்களைச் சுட்டும் அடையாளங்களாக இவற் றைக் கொள்ளலாந்தானே என்று இப்போழுது தோன்றுகிறது, போரென்பது நிதரிசன நிகழ்ச்சியாக வடிவம் பெறாத அந்தக் காலகட்டத்தில், முன் னோக்குடைய பாவலனின் உயிராற்றல் இவ்வித உருவேற்றத்தைப் பெறுவ திலே புதுமை இல்லையன்றோ?

ஈழத்தமிழர் எழுச்சியின் தொடக்க காலத்தில், போராட்டத்தின் தே வைபற்றிய எண்ணங்கள் இலேசாகக் கருக்கொண்டன. அந்த எண்ணக் கருக்களுக்கு உருவம் தந்தும், உரமூட்டியும் தமது கற்பனை ஆற்றலைக் கவிஞர்கள் தொழிற்படுத்தினார்கள். ஆவேசங்கள் கலையுருப் பெற்று வெளிவீச்சங் கொண்டன.

1956 இலே பண்டாரநாயக்க சிங்களச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றினார். அதனோடு, நமது இன எழுச்சியிலே மற்றொரு கட்டம் முகிழ்த்தது. சாத்துவிகப் போராட்டம் என்றும் சத்தியாக்கிரகம் என்றும் அறப்போர் என்றும் சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இங்கு இடம் பெற்றவை வன் செயல்கள் அல்ல: மென் செயல்கள்: இத்தருணத்திற் கையாளப்பட்ட முறை வன்முறை அல்ல: மென்முறை.

ஐம்பதுகளின் பிற்பாதியிலும் அறுபதுகளிலும் தோன்றிய கவிதைகளின் உள்ளடக்கம் மேற்கூறிய மென்செயல் நடவடிக்கைகளைச் சார்ந்து எழுந்தன. இக்காலப்பகுதியில் 'சுதந்திரனும் ஈழகேசரியும்' எழுச்சிக் கவிதைகள் பெரும்பாலானவற்றை வெளியிட்டன; ''மஹாகவி,'' நீலாவணன், காசி. ஆனந்தன். இ. அம்பிகைபாகன், சி. சரவணபவன் (சிற்பி) முதலாகிய பலர் இவற்றை இயற்றினார்கள். இக்கவிதைகளின் உள்ளடக்கம் மென்செயற் போராட்டஞ் சார்ந்து இருந்தாலும், வன்செயற் போர்ச் சார்புள்ள சொல்லாட்சிகள். இவற்றில் இடம்பெற்றதுண்டு.

எடுத்துக்காட்டாக நான் எழுதிய ஒரு பாட்டில், பின்வரும் அடிகள் இடம் பெற்றன—

*''பாவம், இவ்விலங்கைப் பச்சை நாடு; அந்தோ*
*பலமுறை தமிழரின் பலத்தை,*
*சாவகம் கடாரம் சயித்த அவ்வீறலைச்*
*சலித்தது நெடுகிலும் சுவைத்து!*
*தேவையே போலும் பிறகுமோர் 'டோசு!'*
*சிறிததிற் கொடுக்க ஏன் தயக்கம்?''*

இங்கு தென்னிந்தியத் தமிழரசர்களின் படையெடுப்புகள் குறிப்பிடப் படுவது வெளிப்படை மற்றொரு பாட்டில் நான் எழுதினேன்—

*''யாரை அடக்கிடும் எனை நினைப்பிது? நாடாளும்*
*ஈழ இனத்தர் உன் மானம் அறுத்திடுவார் போலும்!*
*போரை அழைத்திடு பாடம் அவர்க்கது போதிக்கும்,*
*பூரண வெற்றியை நீ அடை! இக்கணமே போவாய்,''*

(குறிப்பு-- நாடாளும் ஈழ இனத்தர் — சிங்களவர்)
இங்கு போர் என்று சொல்லப்பட்டது மென்செயல் நடவடிக்கையை அல்ல, ஏனென்றால், அடுத்த பந்தியில் நான் பாடினேன் —

*''தாயை ஒறுத்திடுவோரை எதிர்த்திடு! தாழ்வேசடத்*
*தானை நடத்துக: போதும் இனிப் பொறை...''*

தானை என்பது சேனை: மறப்படை.

''மஹாகவி'' பாடினார்—

''பறை எலாம் அதிர்க; நம்
படை எலாம் திரள்கவே'' என்று கிழக்கிலங்கையிலே மண் பறிபோவது பற்றி ஒரு கவிதையிலே சுட்டிக் காட்டிய, ''மஹாகவி''

'' அழகாய் இருக்கிறது, தமிழா! உனக்கெதுவும்
ஆகாததில்லை எழடா''

என்று அறை கூவல் விடுத்தார் (அரசியற் பாட்டுகளை எழுதும்போது 'மஹாகவி'' பயன்படுத்திய புனைபெயர் ''மாபாடி'')

செய்தித்தாள்களிலும் பருவஇதழ்களிலும் வந்த கவிதை தவிர வேறும் பல ஆக்கங்கள் நூல் வடிவம் பெற்றும் வந்தன. அவற்றுள் 'தமிழ் எங்கள் ஆயுதம்' என்பதும் ஒன்று. இதனை வெளியிட்டவர்கள் யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர். இந்த நூலின் தயாரிப்பு வேலையின்போது சங்கச் செயலாளராக நான் இருந்தேன், கவிஞர் காசி. ஆனந்தனின் 'தமிழன் கனவு' 1968 இல் வெளியாயிற்று. அதில் வரும் கவிதைகளும் மென்செயற் போராட்டத்துக்குத் தம்மை மட்டுப்படுத்திக் கொண்டன என்று சொல்ல முடியாது.

''தாவிடு வேங்கைகள் குகையிடை ஒளிந்தன
போலும் தமிழ் வீரர்
காவிய மார்பிடை ஒளிந்தன குண்டுகள்
களத்தே செவ்வானின்
ஓவியம் வரைந்தது தமிழரின் குங்குமக்
குருதி நீரோட்டம்!
சாவிலும் விடுதலை பெறுவது மெய்யென
வீழ்ந்தார் தமிழ் நெஞ்சர்''

மென்செயல் நடவடிக்கை சார்ந்து எழுந்த கவிதைகள் சொல்லளவிலே வன்செயற் குறிப்புள்ளனவாய் இருந்தது உண்மை. ஆனால் பொருளளவிலே அவை மென்முறைகளுக்கு அப்பாற்பட்டவற்றை நோக்கித் தீவிரமாகத் தம் கருத்தைச் செலுத்தின என்று சொல்லிவிட முடியாது.

மறப்போர் என்பது அறப்போரின் ஒரு குறியீடுபோலப் பயன்பட்டது என்று கூறுவது ஓரளவு சரியாகும்.

ஈழத்தமிழர் எழுச்சி எழுபதுகளிலே வன்முறைத் திசைநெறியில் மெல்ல மெல்லச் செல்லத் தொடங்கிற்று. எண்பதுகளின் தொடக்க, நடு, இறுதிக் கூறுகளினூடே, அந்த எழுச்சியானது முழு அளவிலான படைக்கலப் பயன்பாட்டு நிலைக்கு வந்து சேர்ந்தது. இந்தக் காலப்பகுதியின் கவிதைக்கலை பல பரிமாணங்களை உடையது. விரிவான கவனமான ஊன்றிய ஆய்வுக்கு உரியது, சில பிரதான வகைப்பாடுகளையும் உள்ளோட்டங்களையும் மாத்திரம் இங்கு சுருக்கமாகப் பார்க்கலாம்.

இப்பொழுது நாம் போர் நிகழ் காலத்துக்கு வந்து விட்டோம். இக்கா லகட்டத்தில் நமது மக்கள் தொகையை இரு பெரும் பிரிவினராக வகுக்கலாம். போரில் நேரடிப் பங்கேற்கும் போராளிகள் ஒரு பிரிவினர். ஏனையோர் மற்றொரு பிரிவினர். கவிதை படைக்கும் கவிஞர்களும் இவ்விரு பிரிவுகளுள் அடங்குவர். சுருக்கம் நோக்கி, இவ்விரு பிரிவினரையும் 'களக்கவிஞர்கள்' வெளிக்கவிஞர்கள் என்று சுட்டுவோம்.

வெளிக் கவிஞர்களின் படைப்புகள், உரிமை இழப்புகளை விவரிப்பன வாயும், எதிரி தரப்பினரின் அநியாயங்களையும் அவற்றால் விளையும் இன்னல்களையும் எடுத்துரைப்பனவாயும் பெரும்பாலும் அமைகின்றன. மக்களின் வாழ்நிலைப் பதிவுகளாயும் ஏக்கங்களாயும் இவை உள்ளன.

தா. இராமலிங்கம், சண்முகம் சிவலிங்கம், சோ. பத்மநாதன், சு. வில்வரத்தினம், சாருமதி, வவுனியா திலீபன் முதலான பலரின் சில படைப்புகளை வெளிக்கவிஞர் ஆக்கங்களுக்கு வகைமாதிரிகளாக எடுத்துக்ககாட்டலாம்.

*' எங்கள் புருவங்கள் தாழ்ந்துள்ளன*
*எங்கள் இமைகள் கவிந்துள்ளன*
*எங்கள் உதடுகள் அண்டியுள்ளன*
*... ... ...*
*எங்களை நீள்கள் ஆண்டு நடத்துக*
*எங்களை நீங்கள் வண்டியிற் பூட்டுக*
*எங்கள் முதுகில் கசையால் அடிக்குக*
*எங்கள் முதுகுத்தோல் பிய்ந்துரிந்து போகட்டும்*
*தாழ்ந்த புருவங்கள் ஒரு நாள் நிமிரும்*
*கவிந்த இமைகள் ஒரு நாள் உயரும்*
*இறுகிய உதடுகள் ஒரு நாள் துடிதுடிக்கும்*
*அது வரை நீங்கள் எங்களை ஆள்க*
*அதுவரை உங்கள் வல்லபம் ஓங்குக''*

வெளியில் நிற்கும் மக்கள் கூட்டத்தினிடை கூட எவ்வளவு ஆற்றல் வாய்ந்த சலனங்கள் தோன்றக் கூடும் என்பதற்கு சண்முகம் சிவலிங்கம் அவர்களின் மேற்காட்டிய வரிகள் சான்றுகளாய் உள்ளன.

வெளிக்கவிஞர்கள் தனியான கவிதைப் புத்தகங்களையும் வெளியிட்டுள்ளனர். காரை சுந்தரம்பிள்ளையின் 'பாதை மாறிய போது...,? கல்வயல் வே. குமாரசாமியின் ''மரண நனவுகள்'' 'சார்ள்ஸின்' அணையாத அறிவாலயம், திருஞானசேகரத்தின் 'புதியதோர் உலகம் செய்வோம்' எனது ''வெறி ராட்டு'' என்பன சில எடுத்துக்காட்டுகள்.

இனி களக்கவிஞர்களின் பக்கம் நமது பார்வையைத் திருப்புவோம் போர்க்களத்தில் நேரடி நடவடிக்கையில் ஈடுபடும் போராளிகள் தமது உணர்வின் வெளிப்பாட்டுச் சாதனங்களாக, இயற்பாக்களாகிய கவிதைகளை

யும் இசைப்பாடல்களையும் கொண்டுள்ளனர். இவற்றுட் பல கவிதைகள் ' தமிழீழம் ' 'விடுதலைப் புலிகள்,' சுதந்திரப்பறவைகள், 'வெளிச்சம் நெருப்பு, முதலான ஏடுகளில் இடம் பெறலாயின; இடம் பெறுகின்றன. முத்தமிழ் விழாக் கவியரங்குகளில் ஒலிக்கின்றன: புலிகளின் குரல் ஒலி பரப்பிலும் கேட்கப்படுகின்றன.

இந்த இயற்பாக்களின் சிறப்பியல்புகள் மனங்கொள்ளத் தக்கன.

— இவற்றிலே கள அநுபவம் பேசுகிறது:
— போராளிகளை உந்தி நிற்கும் உணர்வு நிலை உணர்த்தப்படுகின்றது;
— நேர்மையான, நேரிய வெளிப்பாட்டின் நாதம் ஒலிக்கிறது;
— கவிஞரின் பற்றுறுதி பதிவு செய்யப்படுகிறது:
— போராளிகளிடை நிலவும் உறவு நிலைகளும், ஆளுமைகளின் பல் வேறு பரிமாணங்களும் காட்டப்படுகின்றன.

வானதி, பாவரசன், வாஞ்சிநாதன், கஸ்தூரி முதலிய கவிஞர்கள் பலரின் ஆக்கங்கள் மக்கள் மத்தியில் அறியப்பட்டுள்ளன. தலைவர் பிரபாகரன் கூட கவிதைக்கலையின் பால் ஈடுபாடு உடையவர் என்பதைக் கேள்விப்படும் போது, ஈழத்தமிழர் எழுச்சியில், கவிதைக்கலையின் பங்களிப்புக் கணிசமானதே என்னும் எண்ணம் உறுதிப்படுகிறது.

களக்கவிஞர்களின் இலட்சிய வேட்கையையும், ஓர்மத்தையும், உறுதியையும் அவர்களது ஆக்கங்கள் நமக்குத் தெளிவாக உணர்த்தி வைக்கின்றன அத்துடன் சண்டைகளின் செப்பமான படப்பிடிப்பாகவும் உள்ளன. சுதந்திரப் பறவைகளில்' வந்த ஒரு கவிதையைப் பார்க்கலாம் —

'' பற்றைகளின் இடையே சருகுகளின் சரசரப்பு ......
புரியாத பாஷைகளின் ரகசியச் சத்தங்கள் ......
எதிரியின் பிரவேசத்தைப் பறை சாற்றுவனவாய் ...
துப்பாக்கியைப் பிடித்த கரங்கள்
புதிய வலிவு பெறுகின்றன.
சட, சட ...
அவளது துப்பாக்கி
மின்னல் வேகத்தில் எதிரியை நோக்கி
தனது ரவைகளை உமிழ்கிறது
அத்தோடு
அவளது சகாக்களின் துப்பாக்கிகளும் சட சட...
... ... ... ...
நாளை... அவளது மூச்சும்
அவளது தோழியைப் போல்,
இன்று மறைந்த இரண்டு தோழர்கள் போல்,
இந்த மண்ணின் மடியில்
மீளாத் துயிலில் நிசப்தமாகலாம்
... ... ...

*ஆனால் அது வரை*
*அவள் கரங்களில் இருக்கும் துப்பாக்கி*
*கனன்று கொண்டே இருக்கும்*
*கால்கள் விரைந்து கொண்டே இருக்கும் '*

இந்த இடத்தில் மற்றுமொன்றைக் குறிப்பிட வேண்டும்' களக்கவிஞர்கள் பலரின் கவிதைகள் பெயரிலிகள் (அனோனிமஸ்) ஆக இருக்கின்றன. கவிஞர்கள் தாம் யார் என்பதை வெளிப்படுத்திப் பிரசித்தம் செய்வதில் அதிக ஆர்வம் இல்லாதவர்களாக இருக்கிறார்கள். அது சரி அவர்கள் வேறு எப்படி இருப்பார்கள்? அவர்கள் ' தாய் ஈழம் வாழ என்று தம்மையே தந்துள்ளோர்கள் '' அல்லவா? தம் இன்னுயிர் ஈந்தும் தாய் நிலம் காக்கும் மறவர்கள் பேரும் பிரசித்தமும்பற்றி அதிகம் அலட்டிக் கொள்ளாமல் இருப்பதில் வியப்பில்லையே! இவர்களைத் 'தற்கொலைக் கொலையாளிகள்' என்று எதிரிதரப்பினர் சிலர் இழிவு செய்ய முற்படுவதுண்டு இவர்கள் செய்வது 'தற்கொலை' அல்ல இது தற்கொடை. 'தற்கொடை' என்ற புதிய பதத்தை ஆக்கி இவர்களின் அருஞ்செயலைக் குறிப்பதற்கு நாம் பழகிக் கொள்ள வேண்டும்.

தற்கொடையாளர்களாய் உள்ள களக்கவிஞர்கள், இசைப்பாக்களை இயற்றுவதிலும் பாடுவதிலும் வேட்கை உடையோராய் உள்ளனர்.

*',அடைக்கலம் தந்த வீடுகளே*
*போய் வருகின்றோம் நன்றி ... ''*

என்னும் பாடல் அடிகளிலே போராளியின் நன்றியுணர்வு எவ்வளவு இதமாகவும் இனிமையாகவும் பொங்கிப் பரவுகிறது!

*''எம் தோழர்களின் கல்லறையில்*
*மண்போட்டுப் போகின்றோம்''*
*கோட்டை கோட்டையாய் இனி விழும் ... புலிக்*
*கொடி கொடியாகவே இனி எழும் ... ''*
*'' இந்த மண் எங்களின் சொந்த மண் — இதன்*
*எல்லைகள் மீறி யார் வந்தவன், ''*

என்றெல்லாம் வரும் பாடல் அடிகளில் இசையின் செழுமையுடன் கவிதைத் திறமும் ஈடு சோடாக ஓசை வீசுவதை நாம் அநுபவிக்கிறோம். பாவலர்கள் தொடக்கம் பாட்டன் பாட்டிமார் வரை இந்தப் பாடல்களை முணுமுணுக்கிறார்கள் இது புனைந்துரை அல்ல, அணிந்துரையும் அல்ல. அப்பட்டமான அநுபவ உண்மை.

நளினமும் வலிமையும் இழைபோடும் சொற்களைச் சரளமாகப் பெருகியோடச் செய்யும் பழக்கமுள்ளவர் புதுவை இரத்தினதுரை, அவரின் இயற்பாக்களின்இயல்புகூட அதுதான்அந்த வாலாயப்பட்ட சொல்லோட்டத்துடன்.

இசையின் நயமும், இழையும்போது...சொல்லுக்குச் சொல்லு சுகமாய்ச் சுதி கூட்டுகிறது. புதுவையார் சிறந்த இசைப்பாவாணராகவும் வெற்றி பெற்று விடுகிறார். அவரது வழியிலே ஏனைய இசைப்பவாலர்களும் முன்னேற முற்பட்டுள்ளார்கள்,

ஈழத்தமிழர் எழுச்சியில், கவிதைக் கலை நடந்து வந்த பாதையின் சுவட்டை ஒருவாறு இனங்காட்ட முயன்றுள்ளேன். தொடக்கத்தில் ஆவேச முழக்கமாயிருந்த கவிதைகள் தொன்மையான பழந் தமிழ் உணர்வோட்டத்திலிருந்து உந்துதல் பெற்றன. பின்னர் அறப் போருக்கு ஒரு குறியீடாக மறப்போர்ச் சொல்லாட்டம் அமைந்தது. அதன் பின்னர் உண்மையான போர்நிகழ் காலம் தோன்றிற்று, அப்பொழுது களக்கவிஞர்களும் நமது எழுச்சிக்குப் பங்களிப்புச் செய்தனர்! செய்து வருகின்றனர்.

இயற்பா நிலையிலும் இசைப்பா நிலையிலும் களக்கவிஞர்களின் பங்களிப்புத் தொடர்கிறது. தொகையிலும் தரத்திலும் இந்தப் பங்களிப்பின் தரம் மேம்மட்டு வருகிறது. இது நம் கவிதை துறையில் ஆரோக்கியமான ஒரு வளர்ச்சிப் போக்காக அமையும் என நாம் எதிர்பார்க்கலாம் □□

□□□ □ □

அக்காலத்திலிருந்த தமிழரின் நாகரிகநிலை மிகவும் வியக்கத்தக்கதாயிருந்தது. அவர்கள் உழவுத் தொழிலில் மிக கைதேர்ந்தவர்; அதிகாரஞ் செலுத்து முறையும் நன்கறிந்தவர். ஆகவே அவர்கள் தமக்குள்ளே தலைவர்களையேற்படுத்திக் கொண்டு அமைதியுடன் அரசாட்சி செய்யத் தொடங்கினர். இவ்வாறு அமைதியுற்ற காலங்களே தேசாபி விருத்திக்கும் பர்ஷாபி விருத்திக்கும் ஏற்றனவாம்: ஆதலின் தமிழ் நாடும் ஓங்கி வளர்வதாயிற்று: அதனோடு அருமையான சிற்சில தமிழ் நூல்களுஞ் செய்யுளுருவத்தில் ஏற்படுவனவாயின. தமிழர்கள் படைக்கலப் பயிற்சி செய்து தெற்கே படையெடுத்துச் சென்று பல நூற்றுக்காத நிலங்களைத் தமதாக்கிக் கொண்டு தமிழ் மொழியை ஆங்கெல்லாம் பரப்பினர். இவ்வாறு தமிழ் நாடென்பது இந்தியா முழுவதும், சுமாத்திரா, ஜாவா முதலிய தீவுகளை யுள்ளடக்கிய பெருநிலப் பரப்புமாயிருந்தது. இதற்குக் 'குமரிநாடு' என்பது பெயர். தமிழர்களை வென்ற துரானியர் தொகை வரவரச் சுருங்கப் புகுந்தமையின் தமிழரே தலையெடுத்துத் தமிழ் மொழியையே யாண்டும் பரப்பி ஆளுவாராயினர்.

-வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்

எழுதிய தமிழ் மொழியின் வரலாறு என்ற நூலில் இருந்து-



# காலை ஒன்று கிழக்கில் விடிந்தது

சோ பத்மநாதன்

வானத்தில் இரண்டு கரும் புள்ளி
வந்து வட்டமிட்டுப் பறந்தன
சீனர் செய்த விமானம் வருகிற
செய்தி கொண்டெங்கள் சின்னவன் ஓடினான்
கூனி மெல்ல எட்டுப்பேர் பதுங்குகு
ழிக்குள் சென்று முடங்கிக் கிடந்தனர்
மோனம் ஓர் கணம், பின்னர் அகன்ற வான்
முகடு பிய்ந்திடக் குண்டு வெடித்தது!

தென்னை ஒன்றிரண்டாகிச் சரிந்தது;
தீ உமிழ்ந் தொரு வீடு கரிந்தது;
வண்ண மாமதில் உடைந்து விழுந்தது;
வங்கி, நாலு கடைகள் இடிந்தன;
சின்ன பின்னமாய்ச் சிதறிக் குலைந்து போய்த்
தெரு விழுந்து கிடந்து துடித்தது!
என்ன வென் றறியாததோர் சோகத்தின்
இழையினூ டொரு கவிதை பிறந்தது

பால் வடிந்த முகத்தொரு பச்சிளம்
பாலகன் பிணமாகிக் கிடந்தனன்
கால் முறிந்து கிடக்கிறார் முற்றத்தில்
காசியர்; செங்கமலம் அழுதவர்
மேல் விழுந்து புலம்புகிறாள்; அண்டை
வீதி நீளம் ஒரு வண்டி விரைந்தது!
தூல் முதிர்ந்தவள் ஒருத்தி அழுகுரல்
தொலை விருந்து செவி விழும், ஓயுமாம்

பத்துப் பன்னிரண் டூர்திகளோ டொரு
படைப் பிரிவணி வகுத்துக் கிராமத்தை
முற்றுகையிட, மக்கள் கலங்கிப் போய்
மூலைக் கொவ்வொரு பேராய் முடுகினார்
பற்றினார் கையில் குஞ்சு குழந்தை கைப்
பையை, ஆள் அடையாளச் சீட்டைச்சிலர்
தொற்றினர் ஈருருளியில்; வீட்டிலே
தொழு கிழங்கள் தியானத் தமர்ந்தன

இடம் பெயர்ந்த நூறிரு நூறுபேர்
இலக்கென் றேது மில்லாமல் சில மைல்
நடந்து போய் ஒரு கோயிலைக் கண்டதும்
நம்பி இங்கு தங்கலாம்; சின்னதாய்
மடமிருக்குது, மரநிழல், கிணறுள,
மண்டபம் இந்தக்கூட்டத்தைத் தாங்கும்; இங்
கிடரிலை எனச் சற்றிளைப் பாறினார்
இழப்பதற்கினி ஏதுள? - தேறினார்

அன்றிரா வொரு வாறு கழிந்தது
அயர்ந்துறங்கினர் நடந்த களைப்பினால்;
ஒன்று நிம்மதீ; இன்னும் உடம்பிலே
உயிரிருக்குதென் றுவகை உறுகிறார்

நின்று, நமக்கென இந்தக் கொடுமைகள்
நேர் வதேன் இந் நிலை அடியோடொழிந் (து)
என்று காண்பது விடிவென எண்ணவும்
இயல்பிலாது அம் மனிதர் இருக்கையில் -

காலை ஒன்று கிழக்கில் விடிந்தது;
கடவுளைத்தொழு தெழுந்தனர் அகதிகள்
மேலை வீதிக்குப் பின்னுள பற்றையுள்
விறு விறென்று தலைகள் முளைத்தன
கோலச் சீருடை அணிந்து துப் பாக்கிகள்
கொண்டு மெல்லமுன் னேறிநடந்தனர்.
ஆல யத்துள் இருந்த அகதிகட்கு
அணிவகுப்பு - அடையாளம் நடத்தினர்.

கையைத் தூக்கிய வாறுநின் றோரை 'ஹ்ம்'
காட்டு, எங்கேபுலி?'' என்று துவக்கினால்
நையத் தாக்கினர்; சப்பாத்துக் காலினால்
நசுக்கினர் வெறி கொண்டு! கண்ணில் பட்ட
தையலர் தம் கூந்தலைப் பற்றியே
தற தறவென இழுத்துக் கொண் டேகினர்
வையம் எல்லாம் கண்டு கல்லாகிப்போய்
வாயடைத்துக் கிடந்தது அக் காலையில்

படை புகுதற்கு முந்திய பிற்பகல்
பவளம் மாமியைப் பார்த்து வரப்பொடி
நடையில் போன நவம் அன்று காலையில்
நடந்த தெல்லாம் அறிந்தனன்; தந்தை தாய்
இடையில் என்ன - ஆனார்களோ மூத்தவன்
இளங்கோ பாடென்ன வோஎன் றலைகையில்
தடதடத்தன சப்பாத்து! இவனொரு
சந்தினுக்குள் புகுந்து மறைகிறான்.

இளைஞர் எண்மரைப் பின்புற மாகக்கை
இறுகக் கட்டி நடத்தி வருகிறார்
களங்கமற்ற முகங்களில் அச்சமும்
கலக்கமும் தெளிவாகத் தெரிந்தன
இளங்கோ கூட அக் குழுவில் இருக்கிறான்
என்ன டாஇது? ஏன் அத் துப்பாக்கிகள்
முழங்கு கின்றன? நொடிப் பொழுதுக்குளே
முடிந்த தாஇவர் கதை? ஆ, கடவுளே!

கால்கள் போன திசைநவம் ஓடு'றான்
கல்லு முள்ளெலாம் காற்றென ஓடு'றான்
நாள்கள் போவது உணர்கிலன் வேட்டொலி
நாடெலாம் கேட்கவும் இவன் ஓடு'றான்
தோள்கள் விம்மிப் புடைத்தன, நெஞ்சினில்
சுதந்திரத் தீ பற்றிக் கனன்றது
'வாழ்க தாயகம்'' என்று முழங்கினன்
வானம் 'ஓம்' என வாழ்த்து மொழிந்தது!

அன்னை நாட்டின் விலங்கை ஒடித்திட
ஆர்த்தெழுந்த இளைஞர் அணியில், இச்
சின்ன வீரன் பயிற்சி பெறுகிறான்
தேசம் காத்துக் கிடக்குது; செங்களம்
நண்ணு வான், தன் நாயகன் ஆணையை
நாட்டு வான்; இனம் மீளும் அந்நாள் அவன்
கண்ணுளே தெரிகின்றது - கைப்படும்!
காலை ஒன்று கிழக்கில் விடிந்தது!

□ □



# காண்டீபம்

செம்பியன் செல்வன்

அவர்கள் இருவரும் வேகமாக நடந்தார்கள். பொழுது புலர்வதற்கு முன்னர் புறப்பட்டநடை. நடை அவர்களுக்குப் பழகிய தொன்று. காட்டு வழிகளிலும்... வெம்மையான கட்டாந் தரைகளிலும்... இரவிலும் பகலிலும்... மழையிலும் குளிரிலும்...... சேற்று நிலங்களிலும் பாரச்சுமைகளுடன் நீண்ட பயணம் கொண்டு பாசறைகளில் வளர்ந்தவர்கள்.

நகரம் விழிப்படைவதற்கு முன் தங்கள் இருப்பிடத்தை அடைந்துவிட வேண்டும் என்ற துடிப்பு. இவர்களின் வரவுக்காக நண்பர்கள் காத்திருப்பார்

கள். இவர்கள் கொண்டு செல்லும் தகவலைக் கொண்டு தான் அவர் களின் அடுத்த நடவடிக்கை அமைய வேண்டும். அவர்களின் ஒவ்வொரு செயற்பாட்டிலும் ஏற்படும் பின்ன டைவுகள் அவர்கள் முயற்சிகளைக் காததூரம் பின்னிழுத்துச் சென்று விடும் என்பதனை நன்குணர்ந்தவர் கள்... இதனாற்றான் இந்தியன் ஆமி யும், தமிழ்த் தேசிய இராணுவமும் தங்களைச் சல்லடை போட்டுச் சலித் துக் கொண்டிருக்கும் வேளையில் யாழ்ப்பாண நகருக்குள் போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள், ஏதோ மரம் தறிக்க தச்சு வேலைக் குப் போகிறவர்கள் போல கையிலே உரப்பை,

நகரம் மெல்ல மெல்ல விழித்துக் கொண்டிருந்தது. தேநீர்க்கடை பண் ணெய் அடுப்புகள் மெல்லிய இரைச் சலை பரப்பிக் கொண்டிருக்க சீர்காழி கோவிந்தராஜன் பழநிமுருகனை பக்திப் பரவசமாகக் காலையில் வழிபாடு செய்து கொண்டிருச்க...... அவர்கள் மறைந்து மறைந்து விரைவாக நடந்து கொண்டிருந்தனர். சிலர் அவர்களுடன் இணையாக நடக்க .. பயணம் சுகமா யிற்று.

அவர்களை இந்திய இராணுவ ட்றக் ஒன்று கடந்து போனது. அவர்கள் நடையில் மாற்றமில்லை. சில மீற்றர் தூரம் சென்ற ட்றக் நின்றது. அவர் கள் நடையில் மாற்றமில்லல. ட்றக் அவர்களை உற்றுப்பார்த்தது. 'சலோ!' என்று புறப்பட்டது.

பிரதான நாற்சந்திகளிலும், ஒழுங்கை முடக்குகளிலும், ஒருச்சொ ழுங்கை வளைவுகளிலும் தமிழ் தேசிய இராணுவம் நின்று - அதே வழியால் செல்லும் இந்திய இராணுவத்தினருக் குச் 'சல்யூட்' அடித்துத் தாங்கள் யார் என்பதனையும், நாங்கள்' அலேட்'டாக நிற்கிறோம் என்பதனையும், அதே வேளையில் உங்கள் பாதுகாப்பில் தான் இப்படி எங்களால் நிற்க முடிகிறது என்றும் காட்டிக் கொண்டார்கள்... இதனைப் பெருமிதத்துடன் ஏற்றுக் கொண்ட சீக்கிய - கூர்க்காப் படையி னர் தங்களுக்குள் கேலியாக ஏதோ பேசிச் சிரித்துப் போவது யாழ்ப்பாணத் தமிழர் சமூகத்தின் முகத்தில் அவமா னச் சேற்றை வீசியது போல் இருக் கிறது.

இதனைக் காணக்காண இவர் களுக்கு ஆத்திரம் அளவு கடந்தது.

மச்சான்! இவன்களைப் பாத்தி யேடா... அவன்களுக்கு வால் பிடித் துக்கொண்டு? .... அவங்கட மணிக் கட்டில என்னடா புதிசாக்கட்டியிருக் கிறாங்கள்...... பெண்கள் தலையில கட்டிற சிவப்பு .. மஞ்சள் ..... பச்சை நிற றிபண்களை கட்டியிருக்கிறாங் கள்...? என்றான் காண்டீபன்.

ஒரு வேளை கூட்டத்தில உவங்கள் தொலைந்து போனாக் கண்டுபிடிக்க வாக்கும் ...... என்றான் நண்பன். இவனுக்கு எப்பவுமே இடக்குப் பேச் சுத்தான். வேளை கெட்டவேளையி லெல்லாம் எல்லாரையும் சிரிக்கப் பண்ணுவான். இதனால் சீரியஸான காண்டீபனுக்கே கூட இவனைப் பிடிக் கும். இதனால் பலசமயம் அவனை 'நீ ஒரு நல்ல மூதேசியடா!? என்று அன்போடு கூப்பிடுருக்கிறான். ஆபத் தான வேளையிலும் சிரிப்பாகச் சிந்திப் பது என்பது - சுத்தமான ஆத்மாக்க ளால் தான் முடியும்.

''உனக்கு எப்பவும் பகிடிதான் , உன்ரபகிடியே எங்களை காட்டிக் கொடுக்கப் போகுது... '' என்றான் காண்டீபன்.

''அது றிபண் இல்லை மச்சான் அவங்கட இராணுவ கிறேட்டைக் காட்டிற நிறங்களாம். சிவப்பு ஒரு கிறேட், மஞ்சள் இன்னொரு கிறேட் . பச்சையும் அப்படித்தான் ..''

.''மச்சான் ! எனக்கு வாற கோ பத்துக்கு இவங்களுக்கு ஒரு பாடம் படிப்பிக்க வேணும் போல இருக்கு... கைவேற கடிக்குது .'' என்றான் காண் டீபன்.

நண்பன் பதறியபடி அவன் கையைப் பற்றிக்கொண்டான். அவனுக்கு காண்டீபனைப் பற்றி நன்றாகத் தெரியும்... உயிருக்கு எப்பனும் பயமில்லை .. எப்பவும் எதிரிகளில நாலைந்து பேரையாவது தொலைக்க வேணும்.. .. திடீரென்று இந்திய இராணுவ முகாமுக்கு அருகில் விழக்கூடியதாக வெடிவைப்பான் சில சமயம் அவன் வெடிக்கு சில இராணுவம் பலியாவதுண்டு... .. அவன் அந்த இடத்தைவிட்டு மறைந்து விடுவான் . ஒரு சில மணிநேரங்களுக்கு அந்த ஏரியா அல்லோலகல்லோலப்படும் இராணுவம் ஏமாந்து திரும்ப அவர்களை அவனது ''வாக்கி டாக்கி'' திரும்ப அழைக்கும்.. எல்லாம் மக்கள் மேல் கொண்ட நம்பிக்கை தான் . தங்கள் பக்கம் தான் மக்கள் .. எங்களை ஒரு போதும் மக்கள் காட்டிக் கொடுக்க மாட்டார்கள்... இந்திய கப்டன் ஒரு முறை வாக்கி - டாக்கியில் காண்டீபனின் இடத்தை அறிந்து முற்றுகையிட்டான். அவன் சரியாக ''ஸ்பொட்'' பண்ணி விட்டான். அந்த வீட்டு வாசல் வரை வந்து விட்டான்.

ஆனால் அந்த வீட்டில் எல்லாரும் ஹாலில் இருந்து ரி.வி பார்ப்பது தெரிய அவன் உள்ளே வராமல் போய்விட .. படம் பார்த்துக் கொண்டிருந்த காண்டீபன் இடி இடி யெனச் சிரித்தது இவனுக்கு ஞாபகத்தில் வந்தது.

''மச்சான் உனக்கு நல்லாத் தெரியும் உன்னைத் தேடித்தான் இவங்கள் அலையிறாங்கள் எண்டு... . நீ இப்ப உன்னை இனம் காட்ட முற்படாத ... எங்களுக்காக நண்பர்கள் காத்திருப்பார்கள்... முதலில வெளிக்கிட்ட வேலையை முடிப்பம்.''

இன்னொரு ஜீப் இவர்களைக் கடந்து போனது.

அவனது ஆத்திரம் அளவு கடந்து போயிற்று.

இந்த அஞ்சாம் படைக் கூலிகளால தான் இந்திய இராணுவமும் இங்க இந்த ஆட்டம் போடுது...... சிங்களவரை எதிர்க்க வெளியாட்களை அழைத்து வந்த இவங்கட அரசியலும் இலங்கை வரலாறு என்பது எப்பனும் தெரியாத மூடனுகள்...

நாலைந்து இளைஞர்கள் எதிரே சைக்கிளில் இவர்களைத் தாண்டிப் போக, ஒருவனின் தலை மட்டும் சந்தேகத்துடன் அடிக்கடி திரும்பிப் பார்த்தது. பெடலை அவசரம் அவசரமாக மிதிப்பதும் தெரிந்தது.

''மச்சான்! .. அதில போறவனை எனக்கு நன்றாக அடையாளம் தெரியுது . அவன் ஒரு சமூக விரோதி. . . கையில ஆயுதமில்லாததால ஓடுறான்.. ஆட்களைக் கட்டாயம் கூட்டி வருவான்...... நாங்கள் இப்ப முன்னால

போகக் கூடாது...... பின்னால போவம்.. அந்தப்பழைய கோயிலுக்குள்ள நுழைஞ்சிட்டா பிறகு எங்களை ஒருத்தரும் பிடிக்க முடியாது.. வா . ஓடி வா...''என்றபடி கோயிலை நோக்கி ஓட, நண்பனும் பின் தொடர்ந்தான். உள்ளே அந்த இடிந்த மொட்டைக் கோபுரம் செடி கொடிகள் பற்றிப் படர தெருவைப்பார்த்துக் கொண்டிருந்தது.

''மச்சான் இது நல்ல இடம் வா '' இருவரும் அதில் ஏறி மறைந்து கொள்ள, விழிகளிலே தெரு பளீரெனத் தெரித்தது.

யாரோ 'தப தப' வென வீதியில் ஓடி வருகிறார்கள். எல்லார் கையிலும் ஆயுதங்கள்...

''இதால ரெண்டுபேர்... போனவங்களா... கையில போறாபை உரச் சாக்கோடு ..?''

வழியில் அகப்பட்டவர்களை யெல்லாம் பதட்டத்துடன் விசாரிக்கிறார்கள். அவர்கள் என்ன சொன்னார்கள் என்று தெரியவில்லை.

ஆயுதம் தாங்கியவர்கள் அங்குமிங்கும் ஓடி அலைகிறார்கள்.

ஜீப் ஒன்று முன்னும் பின்னுமாக .. வீதி ஒழுங்கை... குச்சொழுங்கை என அலை பாய்கிறது இந்தப் பதட்டத்தில் தெருவே வெறிச்சிட்டு விடுகிறது. தார்வீதியில் பூட்ஸ் கால்களின் 'தட தட' சப்தம் ..

இவர்களுக்கு நிலமை புரிகிறது- இவர்கள் தயாராகிறார்கள். போறாபையிலிருந்து ஆயுதம் வெளியே வருகிறது இவர்கள் தக்க வேளைக்காக காத்திருக்கிறார்கள்.

ஒரு மணித்தியாலத்திற்கு மேல் வெறும் வீதியை அலசிய வீரர்கள் ஓய்ந்து போக... மக்கள் நடமாட்டம் மீண்டும் ஆரம்பிக்கிறது.

''டேய் . இங்க வாங்கடா...... கோயிலுக்க போய்ப்பார்த்தனீங்களாடா?''

''இல்லை''

''பின்ன என்னத்தைத் தேடினியள் என்று ஊத்தைப் பேச்சுடன் ஒருவன் நுழைய, அவனைத் தொடர்ந்து ஒரு கூட்டமே பின் வந்தது.

''படீர்! என்று காண்டீபனின் துப்பாக்கி வெடித்தது. ஒரு ஆள் சரிவது தெரிய, கவர் எடுக்கவும் தெரியாமல் போராட கை ஏவாமலும் கூட்டம் சிதறி ஓட, இவர்களும் கீழே குதித்து ஓடத்தொடங்கினர்.

யார் ஆட்கள் எங்கே ஓடுகிறார்கள். என்று தெரியாத நிலை

இவர்கள் ஓடத் தொடங்கினார்கள். இவர்களை ஒருவரும் கவனிக்கவில்லையா? அந்த சந்தியால் திரும்பி விட்டால் தப்புவதற்கு எத்தனையோ வழிகள் . இவர்கள் வேகமாகத் திரும்ப எத்தனிக்கையில் துப்பாக்கி ஒன்று எங்கோ வெடித்தது.

காண்டீபனின் ஆடு தசையில் குண்டு ஒன்று பாய்ந்தது. ''மச்சான் காலில வெடிபட்டிட்டுது ... இந்தா துப்பாக்கி பத்திரமாகக் கொண்டோடு ...... என்னைப்பற்றிக் கவலைப்படாத ..''

''மச்சான் உந்த விசர்கதையை விடு...... முடிந்த மட்டில போராடு

வோம்...... முடியாட்டி...... பிறகுபாப்பம்......

துப்பாக்கி ஓசைகளால் அந்தப் பிராந்தியமே சற்று நேரம் கிடு கிடுத்தது.

காண்டீபனின் காலிலிருந்து இரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. அவன் தனது கைலேஞ்சியால் அழுத்தமாகக் கட்டிய போதிலும் பகற்பொழுது ஆனதால் இரத்தப்பெருக்கு அதிகமாக இருக்க .. சுட்டுக் கொண்டே நகர்கிறார்கள்.

சற்றுத் தூரத்தே அந்தக் கல்லூரியின் கட்டடங்களும், திறந்திருந்த கதவும் கண்ணில் பட, முகத்தில் நம்பிக்கைப் பூக்கள் மலருகின்றன.

''மச்சான்... இனிப்பயமில்லை. .. என்ர பள்ளிக்கூடம் மச்சான்... என்ர பிரெண்ட்ஸ் இப்பவும் படித்துக் கொண்டிருக்கிறாங்கள் — என்று கூறிய காண்டீபன் வலிதெரியாதவனாய் கல்லூரி வளவுக்குள் புகுந்து, கேற்றில் இருந்த பூட்டை அழுத்துகிறான் ... அவர்களைப் பார்த்து விட்டுச் சில மாணவர்கள் ஓடிவருகிறார்கள்.

2

அலுவலக வாசலில் நிழலாட அதிபர் நிமிர்ந்து பார்த்தார். வாசலில் பஞ்சாட்சரம் மாஸ்டர் நின்று கொண்டிருந்தார்.

''வாங்க மாஸ்டர் - என்ன விசயம்?''

உள்ளே புகுந்த மாஸ்டர் நின்ற நிலையிலேயே ''என்ர பிள்ளையை எல்லே ..'' என்று தடுமாறத் தொடங்கினார்

''முதலில இருந்து பேசுங்க''

கதிரையில் அமர்ந்த மாஸ்டரை அதிபர் உற்றுப்பார்த்தார். அவர் வாய் பேசாமல் ... உதடுகள் துடிக்க...... கண்களிலிருந்து நீர்வழிய...

அதிபர் திடுக்கிட்டுப் போய் மாஸ்டர் என்றார்.

''என்ன நடந்தது? ஏன் அழுகிறீர்கள்?''

''என்ர பிள்ளை . ... இந்த அறுவான்கள் வந்து பிடிச்சுக் கொண்டு போயிட்டாங்கள்...... பிள்ளையை என்ன செய்யிறாங்களோ... மனுசிக்காரி புள்ளையைக் கொண்டுவா ..... கொண்டுவா... எண்டு வீட்டில ஒரே புலம்பல்...

''ச்சா... ச்சா .. .. எந்த மகனைப் பிடிச்சுக் கொண்டு போனவங்கள்?''

''இங்க ஆண்டு பத்து படிக்கிற மூத்தவனைத் தான். அதிபர் திடுக்கிட்டார். இந்தக் கல்லூரி மாணவன் என்றால் அதிபர் என்ற முறையில் பல கேள்விகள் இந்திய இராணுவத்திடமிருந்து வரும் மாணவனின் பெற்றோர் என்ற முறையில் ஆசிரியர்களிடமிருந்து ஆதரவு கோரிவற்புறுத்தல்கள் வரும். ஆனால் இந்திய இராணுவத்துக்கோ இந்தக் கல்லூரி என்றால் வேப்பங்காய்தான்.

''அவனையா பிடிச்சுக் கொண்டு போனவங்க ..... நல்ல அமைதியான பொடியனல்லே...''

பஞ்சாட்சரத்தாரின் உதடுகளில் அந்தத் துயரத்திலும் தத்துவம் வெடித்தது.

இந்தக்காலத்தில ஆர்தான் அமைதியா இருக்கிறம் .. சின்னவையள் . பெரியவையள் என்ற வேறுபாடில்லாமல் எல்லாரும் தானே குமுறிக்கொண்டிருக்கிறம்.''

அதிபர் அவரைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

''மாஸ்டர் ... என்ன நடந்தது என்று சொல்லுங்கோவன் ..''

''நேற்று ஆரோஎன்னமோ சொன்னாங்கள் எண்டு நடுராத்திரியில வீட்டைவந்து பிடிச்சாங்கள் பொடியனைப் பிடிச்சு என்னென்னமோவெல்லாம் கேட்டாங்கள்... ஒரு பிடியும் அவங்களிட்ட கிடைக்கேல்ல.... ஆனா அவன்ர புத்தகத்துக்குள்ள இருந்த கடிதம் தான் .. ..

''அதில என்ன இருந்தது?

''நான் ஓ.எ ல் பாஸ் பண்ணினாப் பிறகு இயக்கத்துக்குப் போய்விடுவன்'' என்று ஒரு நண்பனுக்குக் கடிதம் எழுதி வைச்சிருக்கிறான். அவன் கடிதம் எழுதிய நண்பனின் பெயரும், ஒரு இயக்கப் பொடியனின் பெயரும் ஒண்டாயிருக்க, அவங்கள் அடிச்சு உதைத்துக் கொண்டுபோயிருக்கிறாங்கள்......

''அந்தப் பெயர் என்ன?''

''காண்டீபன்''

''எட அவனும் எங்கட கல்லூரி மாணவன் தான். எங்கட கல்லூரிப் பொடியளும் அவனில உசிர், இப்ப நான் என்ன செய்யவேணும்?

'எங்கட கல்லூரி மாணவன்...... ஒழுங்காக பாடசாலைக்கு வந்துபோற பிள்ளை அவனை பிடிச்சு வைச்சிருக்கிறது தவறு என்று சொல்லி...

அதிபர் யோசித்தார்.

' வந்து நீங்கள் ஒருக்கா ரவுண் கொமாண்டனோட கதைச்சுப் பாத்தா ..

''ஆர் கல்கத்தோடயே.... அவன் சரியான கள்ளன். டிக்சிற்றைவிட மோசமான கள்ளன்..... அவனிட்டை வாயைக் கொடுத்திட்டு தப்ப ஏலாது ..

''இல்ல மகனை விடாட்டியும்... அவனுக்கு ஏதும் அடிக்காம சித்திரவதை பண்ணாமல் இருந்தால்போதும் நீங்க சொன்னா....''

இப்ப மகனை எங்கை வைச்சிருக்கிறாங்களாம்... ... மருதனாமடம்...... பலாலி காங்கேசன்துறை .. யாழ்ப்பாணம்... எங்கையாம்?

''அதுதான் தெரியாது சேர்...... அதையும் அறிஞ்சு சொன்னா நல்லது'' அவரது வார்த்தைகள் உடைந்து, விம்மலுடன் வெளிவந்தன.

''சரி '' என்று கூறிக்கொண்டிருக்கும் போதே கல்லூரி வளவில் சரமாரியாக துப்பாக்கி வெடிச்சத்தங்கள் கேட்கத் தொடங்கின மாணவர்களின் ''ஐயோ ''என்ற அலறலும் அழுகைச் சத்தங்களும் யார் யாரோ ஓடுவதும் சுடுவதுமாக

கல்லூரி வளவு கலங்கியது.

மாஸ்டர் மாரைச் சுட்டுப்போட்டாங்கள் ... தெருவோர வகுப்பறை

யெங்கும் இரத்தமயம்... சூடுபட்டவர் களை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போக ஏற்றியவர்களுக்கு நல்ல அடி உதை திடீரென அதிபரின் அறை - அலுவல கத்துள் ஆயுதங்களுடன் சிவப்பு, பச்சை மஞ்சள் பட்டை கட்டியவர்கள் நுழை தார்கள்

"எல்லாரும் வெளியில போய் வரிசையாக நில்லுங்கடா .. எங்கை யடா அதிபர் .. அந்த வே மகனுக்கு பாடம் படிப்பிச்சா எல்லாம் சரிவரும்"

"அவன் அதிபரைத்தேட, அவர் பாய்ந்து சென்று வெளியே ஏற்கனவே நடுங்கியவாறு உச்சிவெயிலில் வரிசை அமைத்திருந்த ஆசிரியர் கூட்டத்தில் கலந்து கொண்டார். உப அதிபர் காலால் உதையப்பட்டு வெளியே வந்து விழுந்தார்.

"உங்கள் எல்லோரையும் சுடப் போறம்... நீங்கள் உண்மை சொல் லாட்டி எங்களுக்கும் வேறவழியில்லை. ஓடிவந்தவங்கள் எங்க? . ஆர்வந்தது? எங்கை ஒழிச்சு வைச்சிருக்கிறியள்?....

வகுப்பறையில் இருந்த ஆசிரியர் களும் அலுவலகத்தில் இருந்தவர்களும் பதில் தெரியாது விழித்தனர். அவர் களது ஆத்திரம் அளவுகடந்தது. கெட்ட வார்த்தைகள் கல்லூரி வளாகத்தில் போதனா மொழியாயின. எல்லாரும் உறைந்து போக

பச்சை றிபண் கட்டிய கறுவல் முன்னும் பின்னும் அலை பாய்ந்தான்

"சொல்லுங்கடா... எங்க அவங் கள் .. உங்களுக்கு அவங்கள் மட்டுந் தான் போராளியா தெரியிறாங்க... எங்களைத் தெரியேல்ல ... எங்களைச் சுட்டிட்டு வாறவங்களுக்கு அடைக்கலம் கொடுக்கிறியள்... எங்களுக்கு ஒரு அடைக்கலமும் இல்லை... இன்னும் சிலவிநாடியில சொல்லாட்டி அம்மா... மக்களே ..

வானத்தில் ஒரு வெடி எழுந்தது. எல்லார் வயிறும் கலங்கியது. மனங்கள் கனத்துப் போய் இறுகின.

வகுப்பறையிலிருந்து மாணவர்கள் உச்சிவெயிலில் ஆசிரியர்கள் வறுபடுவ தைப் பார்த்து பயத்தால் விழிக்க ஏனைய வகுப்பறைகளிலிருந்த உயர் வகுப்பு மாணவர்களும் வரிசைவரிசை யாக கொலைக்களத்துக்கு அழைத்து வரப்படுவதுபோல... தொலைந்தோம் என்றுஎண்ணியபோது பிரதேச 'காம்ப்' அதிகாரி ராவ் வந்தார்.

### 3

ஆசிரியர்கள் சண்முகலிங்கம், தவ மணிதாசன், பிரபு ஆகியவர்கள் துப் பாக்கி ரவைகளுக்கு இலக்காகி, சண் முகலிங்கம் அந்த இடத்திலேயே மர ணித்துப் போக, மற்றவர்கள் ஆபத் தான நிலையில் ஆஸ்பத்திரியில்.....

பெற்றோர், ஆசிரிய, மாணவ குழாம் கொதித்துப்போய் ..

விசாரணை வேண்டும் ஆறுத லுக்கல்ல

மீண்டும் ஒருமுறை இவ்வாறு நிகழா திருக்க சர்வதேசங்கள் எங்கள் நிலை யைப்புரிந்து கொள்ள...

ஆசிரியர் சங்கக் கூட்டம் கனல் தெறிக்க நடந்து கொண்டிருந்தது. ஆசிரியர் கழகத் தலைவர் நேரில் கல்கத்தை சந்தித்து எதிர்ப்பதில் உறுதியாக நிற்க ..

''இது அநீதி... அக்கிரமம்...... பாடசாலை நேரத்தில் வகுப்பறையில் புகுந்து... மாணவர்கள் முன்னிலையில் ஆசிரியர்களைச் சுட்டுக் கொல்வது ஹிட்லரின் கொடுமையை விடக் கொடுமை...... நாம் எல்லோரும் ரவுண் கொமாண்டன்ட் கல்கத்தை சந்தித்து எங்கள் எதிர்ப்பைக் காட்ட வேண்டும்...

பஞ்சாட்சரம் தனது மகன் பற்றிப் பேசுவது ..

இது கூட்ட முடிவாயிற்று.

4

மாலை ஐந்து மணி.

''யெஸ்......கம் - கம் நகரகொமாண்டன்ற் கல்கத் ஆரவாரமாக வரவேற்கிறார். இவர்களுக்கு அந்த ஆரவாரம் அபத்தமாகப்படுகிறது. இன்று எனது பிறந்த நாள்..'' தேவையில்லாத விபரம் தரப்படுகிறது. இவர்கள் இது என்ன 'ஐரணி' என்று குமைகிறார்கள் '

''யெஸ் . நீங்கள் சொல்லுங்கள்... ஒன்றும் தெரியாத மாதிரி அந்த இராணுவ அதிகாரி கூறுகிறா'ன்'

''பாடசாலை நேரத்தில் கல்லூரி வளாகத்தில் புகுந்து ஆசிரியர்களைச் சுட்டு வீழ்த்தியிருக்கிறார்கள் அதில் இருவர் நிலமை கடுமையாக உள்ளது. ஒருவர் மரணித்துவிட்டார்..''

''அப்படியா?!.. .....'' கேள்வியில் போலியான வியப்பு

''கல்லூரிக்குப் போதிய பாதுகாப்பு வழங்க வேண்டும்... மாணவர்களுக்கு.. ஆசிரியர்களுக்கு ..''

''உங்கள் கல்லூரி மாணவர்களும் ..... ஆசிரியர்களும் புலி என்று கூறுகிறார்களே?''

பஞ்சாட்சரத்தாருக்கு ஆத்திரம் மிஞ்சுகிறது.

''அப்படியிருந்தால் வந்தவையள் உயிரோடு திரும்பியிருக்கமாட்டார்களே... எங்களிலும் நாங்கள் ஆசிரியரை இழந்திருக்கமாட்டோம்...''

''ஓ! அங்கிரியெங்மான் .. இந்த உணர்ச்சி ஆவேசம் தான் மக்களைத் தூண்டி விடுகிறது நாங்கள் வந்தது சமாதானத்துக்கு ..... நீங்கள் மக்களின்ரை உணர்ச்சிகளைத் தூண்டி விடுகிறீர்கள் ... மெல்லிய கோபம்''

''யார் சுட்டது என்று சொன்னீர்கள்.''

''கையில் பச்சை, சிவப்பு, மஞ்சள் நிறம் கட்டிய ஆயுதம் தாங்கிய இளைஞர்கள் ..''

''யாரவர்கள்?''

''தெரியாது.... ஆனால் ஆயுதம் தாங்கியவர்கள்''

''ஆயுதம் தாங்கிய புலிகளாக இருக்கலாமல்லவா?''

''அவர்கள் எங்களைத் தாக்க வேண்டிய அவசியமில்லை. அதே வேளையில் அவர்கள் மக்களைத் காப்பாற்ற ஆயுதம் தாங்கியவர்கள் அவர்கள் இத்தகைய அநீதிவிளைத்ததாக நாம் கேள்விப்படவுமில்லை.''

''பஞ்சாட்சரத்தார் கூறுகிறார். கல்கத் அவரையே உன்னிப்பாக நோக்குகிறார்.

''வந்தது புலிகளல்ல. ஆனால் ஆயுதம் தாங்கியவர்கள் அப்படியானால் ஐபிகேஎவ் ஆ வந்தது?''

''அவர்கள் அந்த நேரம் வரவில்லை என்பது தான் பிரச்சனை''

''ராவ் அங்கு நின்றதாக நான் அறிகிறேன்.''

''எல்லாம் முடிந்ததன் பின்தான் வந்தார்.''

''அப்ப யார் வந்ததாக நினைக்கிறீர்கள்?''

''தேசிய இராணுவமாக இருக்கலாம்... ''ஆசிரியர் கழக தலைவர் கூறுகிறார்.''

''முதலில் தெரியாது என்றீர்கள். இப்ப ரீ என் ஏ என்கிறீர்கள். இது எப்படி ..? முகம் சுளித்தது.

''இது ஊகம் தான். ஐபிகே எவ் வந்ததன் பின்பும் அந்த அநியாயகாறர் இருந்தனர்...''

''ஓ!... அனதர் அங்கிரிமான்..... அவர்கள் ஐபிகே எவ் வுடன் துணைக்கு வந்தவர்கள் என்று தான் பிரதேசப் பொறுப்பாளர் ராவ் கூறுகிறார்.''

''சரி அப்படியே ஒரு வாதத்திற்கு எடுத்துக் கொண்டாலும் அவர்கள் நடந்து கொண்ட முறை .. கல்லூரி வகுப்பறை வராந்தா இரத்த வெள்ளத்தில் நனையக் காரணம் ''

''அந்த இரத்தம் புலிகளின்ர என்று தான் ராவ் கூறுகிறார்... சூடுபட்டு வந்த புலிகள் சிந்திய இரத்தமாக ஏன் இருக்கக் கூடாது...''

அப்படியானால் அந்த இரத்தம் ஆசிரியர்கள் சிந்தியதல்ல என்கிறீர்களா?''

''கூல் டவுன்... காம் ..... காம்... இப்போது நீங்கள் சமர்ப்பிக்கும் கோரிக்கை என்ன? உங்களுக்குத் தெரியுமா உங்கள் கல்லூரி வளவில் பொறுக்கிய 'எம்ரிகப்ஸ்' எதுவும் ரீ என் ஏ இனது அல்ல அவர்களிடம் ஏகே 47ஏ கிடையாது. நாம் வழங்கவில்லை. ஆதலால் ஆசிரியர்களைச் சுட்ட துப்பாக்கிகள் புலிகளினதாக ஏன் இருக்கக் கூடாது...''

விவாதம் வேறு வழிகளில் சென்று கொண்டிருந்தது. வழங்கப்பட்ட தேநீரை பஞ்சாட்சரத்தாரும் ஆசிரிய கழகத்தலைவரும் நாகரிகமாக மறுத்துவிடுவதை அவன் கண்கள் அவதானிக்கின்றன. மெல்லிய சீற்றம் அவனுள் எழுகிறது.

''இந்தப் புலிகள் நகரத்திற்கிடையில் உங்களைக் கேடயமாக வைத்துக் கொண்டு போராடுகிறார்கள். அதற்கு நீங்களும் உடந்தை, அவங்களுக்குப் பாதுகாப்பளிக்கிறீர்கள்... இழப்புக்கள் ஏற்பட்டவுடன் அவற்றை எங்கட்கு எதிராகத் திருப்ப முனைகிறீர்கள் ..''

எல்லோரும் உள்ளம் கொதிக்க கேட்டுக் கொண்டிருக்கின்றனர். கல்கத் சீற்றத்துடன் கூறுகிறான்

முடியுமானால் உங்கட புலிகளை வெளியால வந்து போரிடச் சொல்லுங்க... பாதுகாப்புக்கு அவங்களிட்டயே போங்க ... இங்க ஏன் வந்தனீங்க... அவங்கள நேருக்கு நேர் வரச் சொல் .. நகர வீடுகளில்...... மக்களிடையே பதுங்கிக் கொண்டு வீரமா பேசுகிறீர்கள்? இதைப் போய்ப் புலிகளிடம் கூறுங்கள்...''

அவர் சீற்றம் எல்லாமையுமே மௌனிக்கவைக்கிறது ..... எல்லாமே நன்கு புரிகிறது ... காலை புலர்வது போல போல மயக்கங்கள் .. தயக்கங்கள் எல்லாம் கலைகின்றன.. சர்வதேச அரசியல் புரிபடத் தொடங்குகிறது ..

அதிபர் மெதுவாகக் கூறுகிறார்

''இனியாவது இப்படி நடக்காமல் பாதுகாத்துத் தரும்படி கூறத்தான் வந்தோம்.... நல்லது .. விடைபெறுகிறோம் என்ன மாஸ்டர் உங்கட மகனைப்பற்றி பேசுவமா? ... அதுக்காக வந்திட்டு...... என்று மெல்லக் கேட்கிறார்...''

''வேண்டாம்.... போகலாம்...... வாங்க... பொடியன் இனி போராளியாத்தான் வருவான்... இவங்களை அகற்ற என்ர பிள்ளை மட்டுமல்ல... ஏராளமானபேர் சேருவாங்கள்...... இவங்கட எண்ணம் எல்லாம் தான் வெட்டவெளிச்சமாய் விட்டதே...... புலியளை வெளியவரச் சொல்லுறாங்கள் .. கட்டாயம் அது வெளிய வரும்... அதில என் மகனும் காட்டாயமாக இருப்பான்... அவரின் மனம் உறுதி கொள்கிறது.'' □□

# பதினாறு வகைப் படைகள்

பண்டைத் தமிழர் வாழ்வியலைக் கருப்பொருளாகக் கொண்டு புனையப்பட்ட இலக்கியங்கள் தமிழர் படையணி போர்க்களத்தில் பயன்படுத்திய பலவகையான போர், முறைகளைப்பற்றி எடுத்துக்கூறியுள்ளன. புறத்திணைக்குரிய பொருள் மரபை விளக்க வந்த புலவர்கள் போர்க்களத்தில் ஈடுபட்ட படையணிகளின் பதினாறு வகைகளைப் பற்றிக் கூறியுள்ளனர். அவை வருமாறு.

1. மூலப்படை
2. உரிமைப்படை
3. துணைப்படை
4. அமையப்படை
5. வான்படை
6. பயிற்சிப்படை
7. பயிற்சியில்படை
8. குழுப்படை
9. தனிபபடை
10. கருவிபெறுபடை
11. தற்கருவிப்படை
12. ஊர்திப்படை
13. தன்னூர்திபபடை
14. கானப்படை
15. பகையிடுபடை
16. கூலிப்படை

**எதிர்ப்பக்க ஓவியம்**

**ஓவியர் அ. இராசையா**

நொந்து தளர்ந்து குனிந்து வளைந்து
நொடிந்த சரு(கு) அதன் முன்
வெந்து புழுங்கித் துவண்டும் விடியலை
வேண்டி நிற்கும் குருத்து!

# தூய தமிழ் வழக்கும் அதன் இன்றைய தேவையும்

கலாநிதி இ. பாலசுந்தரம்

மொழி என்பது ஒரு சமுதாயத்தின் விளை பொருளாகும்.[1] ஆனால் அம்மொழிக்கு உயிருண்டு; உணர்வுண்டு; வளர்ச்சியுமுண்டு; தேவையுமுண்டு. அதன் வளர்ச்சியும் தேய்வும் அதனைப் பயன்படுத்துவோரின் பண்பாட்டுச் சீர் அமைப்புக்களிலேயே தங்கியுள்ளன. மக்கள் தம் எணண்க் கருத்துக்களை வெளியிடுவதற்கு மட்டுமன்றி, எண்ணுவதற்கும் மொழி கருவியாகின்றது.[2] ஒரு மொழியைப் பேசும் குறிப்பிட்ட சமுகத்தின் பல தலைமுறையினரின் எண்ணங்களையும் உணர்வுகளையும் வெளிப் படுத்தும் சொற்களஞ்சியத்தை அம் மொழி கொண்டதாக அமைந்திருக்கும், அச் சொற் களஞ்சியமும், அதன் வழிப்பட்ட இலக்கியங் களும் அம்மொழிபேசும் மக்களின் வரலாற்று அடிப்படையிலான அரசியல், பொருளியல், மதம், கலை, பண்பாடு முதலான நடவடிக்கை களை வெளிப்படுத்தும் சான்றுகளாகும்.



## தமிழும் வடமொழியும்

தமிழ் மக்களின் மொழி, இலக்கிய. பண்பாட்டு வரலாற்றிலே வடமொழியும் அதன் வழிப்பட்ட பண்பாட்டுத் தொடர்புகளும் காலம்காலமாக மிகப்பெரிய தாக்கங்களை ஏற்படுத்தலாயின. இதன்பயனாகப் பழந்தமிழ்ச் சொற்கள் வழக்கற்றுப் போக அந்த இடத்தை வடசொற்கள் நிரப்பிக்கொண்டன. தமிழ்நாட்டை, தமிழர் வாழ்வைக் களமாகக் கொண்ட இலக்கியங்களுக்குப் பதிலாக ஆரியரின் வாழ்வியல் அவர்களது இலக்கியங்கள் என்பவற்றைத் தழுவியவையாகத் தமிழில் இலக்கியங்கள் தோன்றலாயின. அத்துடன் வடமொழி இலக்கிய ஆளுமைகள் தமிழில் ஆழமாகவும் பதிந்துகொண்டன. தமிழ்நாட்டில் வந்து சேர்ந்த அனைத்து மதங்களும் தத்தம் மத இலக்கியங்களைப் படைக்கும்போதும் வடமொழிச்சொற்களைப் பெரிதும் கையாண்டுள்ளமையும் தமிழ்மொழிக்கேற்பட்ட ஒரு வாய்ப்பின்மையாகும். ஆட்பெயர் தொடக்கம் கடவுளர் பெயர்வரை, மக்கள் செயல்கள் முதல் இறைசெயல்கள் வரையிலான சொல்லாட்சிகளும் வடமொழியில் அமையலாயின. ஆங்கிலச் சொற்களைத் தமிழில் வழங்கும் போதும் வடமொழிச் சொல்லாகவே வழக்குப் பெற்றமையும் இன்னொரு வகையிலான இழப்பாகும் எ+டு; Papir பத்திரிகை Press முத்திராயந்திரசாலை.) எனவே தமிழ்மொழி காலம் காலமாக வடமொழியின் மேலாண்மைக்கு ஆட்படுத்தப்பட்டு வந்தமை தெளிவாகின்றது. தமிழ்நாட்டில் 19 ம் நூற்றாண்டிலேற்பட்ட பண்பாட்டு விழிப்புணர்வு, பிராமணீய எதிர்ப்பு, தேசிய உணர்வு, மொழியுணர்வு என்ற அடிப்படைகளின் பின்னணியில் தனித்தமிழ் இயக்கம் தோன்றுவது தவிர்க்கமுடியாததாயிற்று.

## மொழித்தூய்மை பேணல்

தம்மொழியிலுள்ள பிறமொழிச் சொற்களை அகற்றி அவற்றுக்குப் பதிலீடாகத் தம்மொழியிற் புதுச்சொற்களை ஆக்கம் செய்து வழங்கும் பெரு முயற்சியே மொழித் தூய்மை பேணல்(*Language Purism*) ஆகும்.3 தாய்நாடு, தாய்மொழி, தம் அரசு, தம் பண்பாடு என்னும் உணர்வுகளோடு வாழும் சமூகம் தம் மொழியைத் தூய்மையாக வழங்கவேண்டும் என்ற அடிப்படையில் உலகின் பல மொழியாளர் செயற்பட்டு வந்திருக்கின்றனர். பிறமொழியாளரின் மேலாண்மை நடவடிக்கைகளினால் தம் மொழி அழிந்துவிடும் என்ற பய உணர்வினாலும் மொழித்தூய்மை இயக்கம் பல நாடுகளிலும் மேற்கொள்ளப்படுவதாயிற்று.4 பலமொழிகள் வழங்கும் ஒரு நாட்டில் ஆட்சியுரிமைகொண்ட மொழியாளர் அந் நாட்டில் வாழும் ஏனைய மொழிபேசும் சமூகத்தினரை அடக்கியாள முற்படும்போது அடக்கப்படும் மொழியினர் ஒருகால் வீறு பெற்றெழுந்து தம்மொழியின் தனித்தன்மையைப் பேணும் முயற்சியிலீடுபட்ட வரலாறுகளுமுண்டு.

இத்தகு அகப்புறக்காரணிகளால் இன்று ஈழத் தமிழர்களாகிய நாம், எம் மொழியின் தூய்மை பேணப்படவேண்டியதொரு நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றோம். எமது மொழியின் தனித்தன்மை, எமது மொழியின் கலை, பண்பாட்டு விழுமியங்கள் யாவும் அழிந்துவிடக்கூடியதொரு நிலை இன்று காணப்படுகின்றது. தென்னிந்தியத் தமிழர்களது மொழியில் தூய்மை பேணப்படவில்லை. அங்குள்ள அரசியல், சமூகச் சிக்கல்கள், மொழிப்பற்றின்மை, போதிய கல்வியறிவின்மை முதலான காரணங்களால், மொழித்தூய்மை பேணப்பட வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருந்தும், தமிழகத்தின் தமிழ் தூய்மை இழந்து காணப்படுகின்றது. ஆனால் நம் நாட்டில் அரசியல் நிலைப்

பாடும், அதன்வழி சார்ந்த கலை பண்பாட்டு நடவடிக்கைகளும் ஈழத் தமிழர்கள் தனித்தமிழ் வழக்கில் இறுக்கமும் பற்றும் உடையவர்களாக இருக்க வேண்டியதன் இன்றியமையாத்தன்மையை உணர்த்துகின்றன.

ஒரு குறிப்பிட்ட மொழிபேசும் மக்களின் அரசியல், சமுதாய அமைப்புக்களில் பெரிய மாற்றங்கள் உண்டாகும்போது அதனால் பிறமொழிக் கலப்பு ஏற்பட்டு தம்மொழியின் தனித் தன்மை அழிந்துவிடும் என்ற பயவுணர்வு தோன்றும்போது மொழித் தூய்மை பேணல் என்ற நிலைமை ஏற்படுகின்றது. ஆனால், காலந்தோறும் மக்களிடையே ஏற்படும் வளர்ச்சி மாற்றங்களுக்கேற்ப மொழியிலும் சில மாற்றங்கள் நிகழ்தல் வழக்கமாகும் அம் மாற்றங்கள் மொழியின் அடிப்படை, இயல்புகளைமாற்றுவதில்லை. அவ்வாறில்லாது அடிப்படை மாற்றங்களுக்கு அகப்படுமேயானால் அம்மொழி தன் இயல்பான தன்மைகளை இழந்துவிடக் கூடிய ஆபத்துமுண்டு. தமிழ்மொழி அம்மொழி பேசும் அனைத்து மக்களுக்கும் பொதுவானது. எனவே அதுதன் பொதுத் தன்மைகளை இழக்காதவாறு அதன் தூய்மை பேணப்படவேண்டியது தமிழர் கடமையாகும். தமிழ்மொழி வழங்கும் மக்களினதும் அவர்கள் வாழும் மண்ணினதும் உணர்வு வெளிப்பாடாக இருக்க வேண்டுமே தவிர, பிறமொழியாளரின் உணர்வுகளுக்கு முதன்மை அளிக்கும் ஊடகமாகத் தமிழ் மொழி அமையாதவண்ணம் காக்கவேண்டிய பொறுப்பு தமிழ் வழங்கும் அனைவரது மேலான பணியாகும்.

## பிறமொழிக் கலப்பு

பிறமொழிக் கலப்பானது அரசியல், மதம், வணிகம், பண்பாடு முதலான காரணங்களால் ஏற்படலாம். மேற்குறிப்பிட்ட காரணிகளின் அடிப்படையில் தமிழ்மொழி வரலாற்றில் பிறமொழிச் சொற்கள் பெரிதும் கலப்பதாயின. மண் முற்றுகையாளர் ஒரு நாட்டிற் படையெடுத்துவந்து தங்கியிருக்கும்போது அவர்களது மொழிச் சொற்கள் மற்ற மொழியாளரது மொழியிற் கலப்பதுமுண்டு. எடுத்துக் காட்டாக இந்தியப் படை தமிழீழ மண்ணில் குடிகொண்டிருந்த போது தமிழில் ஜவான், முதலான சொற்கள் பெரிதும் வழங்குவதாயின. ஆனால் அப்படையினர் நாட்டைவிட்டகன்றதும் அச்சொற்களும் மெள்ள மெள்ள மறந்து போவதாயின.

உலக மொழிகளின் வரலாற்றில் பிறமொழிக் கலப்பானது, மதம் சார்ந்த மொழிகளின் வழியாகவே பெரிதும் ஏற்பட்டுள்ளது. கிறீத்தவ மொழியாகிய இலத்தின் ஐரோப்பிய ஏனைய மொழிகளிலும், இந்து மத முதல் மொழியாகிய வடமொழி இந்திய ஏனைய மொழிகளிலும், பௌத்த மதத்தின் வழியாகப் பாளிச் சொற்களும், சமணத்தின் வழியாகப் பிராகிருதச் சொற்களும் பிற மொழிகளிற் கலப்பதாயின. தமிழில் வழங்கும் அரபு, உருது, பாரசீகச் சொற்கள் இஸ்லாத்தின் வழியாகத் தமிழிற் கலந்தவையாகும். கிறித்தவத்தின் வழி ஐரோப்பிய மொழிச்சொற்களை தமிழ்மொழி பெற்றுக்கொண்டது.

இவ்வாறாகக் காலம் காலமாக வெவ்வேறு சூழல்களில் வேறு வேறு காரணிகளின் அடிப்படையில் குறிப்பிட்ட ஒரு மொழியிற் பிறமொழிச் சொற்கள் புகுவதும், அதனை அம்மொழிபேசும் மக்கள் ஏற்றுக்கொள்வதும் வழக்கமாகும். மேற்கூறப்பட்ட காரணிகளையும் பிறமொழியாளரின் அடக்குமுறைகளையும் எதிர்த்து நிற்கவேண்டிய தொரு சூழல் ஏற்படும்போது, தம்மொழியாளரின் நாடு, இனம், மொழி, கலை, பண்பாடு என்பவற்றை விடுவிப்புக்கான உணர்வு மக்களிடையே தோற்றுவிக்கப்படுகிறது. தம்இனத் தேசியம், தம்மொழிப்

பற்று, சமுதாயப் புத்துருவாக்கம், அறிவியலைத் தம் மொழியில் உள்வாங்குதல் என்ற அடிப்படையில் பிறமொழிச் சொற்களை அகற்றி, தம் மொழியின் தூய்மை பேணும் முறை வலுப்பெறுவதையும் உலக மொழிகளின் வரலாற்றிற் காணலாம்.

வளரத்துடிக்கும் எம்மொழியும் தன்னைத் தூய்மைப்படுத்திக்கொள்ள விரும்புதல் இயல்பே. அப்போதுதான் அம்மொழி தனித்தன்மையுடன் வளர்கின்றது. மேற்கு ஐரோப்பிய மொழிகளிலும் மொழித்தூய்மை பேணும் நடவடிக்கைகள் பெரிதாக நடைபெற்றுள்ளன. குறிப்பாக பிரஞ்சுமொழி தூய்மை பேணும் முயற்சியானது, இயக்க அடிப்படையில் அரச துணையுடன் நடைபெற்றதை ஈண்டு சுட்டிக்காட்டலாம். ஆங்கில மொழியில் 12,0000 க்கும் மேற்பட்ட பிறமொழிச் சொற்கள் வழக்கில் இருப்பதை விரும்பாத அம்மொழியுணர்வாளர்கள் 1913 இல் ''தூய ஆங்கிலக்கழகம்'' நிறுவி ஆங்கில மொழித் தூய்மை பேணலிலீடுபட்டதையும் குறிப்பிடலாம்.[5] இந்திய மொழிகளிலும் சிறப்பாகத் திராவிட மொழிகளிலே வடமொழிச் செல்வாக்கை எதிர்த்துத் தூய்மைபேணும் செயற்பாடுகள் நடைபெற்றிருக்கின்றன. மலையாள மொழியில் வடமொழி எதிர்ப்பு நடவடிக்கைகளும்,[6] தெலுங்கு, கன்னட மொழிகளிலும் வடமொழி எதிர்ப்பு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன.[7]

சிங்கள மொழியின் உருவாக்கத்தில் பாளி, பிராக்கிருதம், வடமொழி ஆகிய மும்மொழிகளின் பங்கு முதன்மையானதாகும். சிங்களவரிடம் சிங்கள தேசிய வாதம் தலையெடுத்தபோது, சைவ - வைணவத்துடனும், பின்னர் தமிழர்களுடனும் தொடர்பு கொண்ட வடமொழிக்கு எதிராகத் தூய சிங்களமொழி இயக்கவாதிகள் இயங்கினர். அதற்குக் குமாரதுங்க முனிதாச தலைமை தாங்கியதையும் அறியக் கூடியதாக இருக்கின்றது.[8]

இவ்வாறாகப் பரந்த நோக்கில் மொழித் தூய்மை இயக்கங்களை நோக்கும்போது, ஈழத் தமிழர்கள் மொழித் தூய்மையைப் பேணவேண்டியதன் இன்றியமையாத் தன்மை தெளிவாகின்றது. ஈழத் தமிழர்களின் அரசியல் நிலைப்பாடு பண்பாட்டுச் சீர்கேடு, இனப்பற்றின்மை, மொழிப்பற்றின்மை முதலாம் தன்மைகளின் அகப்புறக் காரணிகளை ஆராய்ந்து நோக்கும்போது மொழிவழியான உணர்வூட்டல் தேவையாகின்றது. மொழி சமுதாயப் படைப்பாகவும், ஆற்றல் மிக்க சமுதாயக் கருவியாகவும் விளங்குவதால்மொழித்தூய்மை பேணல் வழியாகப்பல செயல் திறன்களை நிலைநாட்டக்கூடிய வாய்ப்புக்களுள. இன்றைய நெருக்கடியான - உறுதியான அரசியல் போராட்ட காலத்தில் மொழித்தூய்மை பற்றிய எண்ணம் தமிழ் மக்கள் அனைவரிடமும் ஏற்படவேண்டும். அதற்குரிய வாய்ப்பினை நாளிதழ்கள், மேடைப் பேச்சுக்கள், ஆக்க இலக்கியங்கள், நூல்கள், விளம்பரப் பலகைகள், தெருப் பெயர்கள் முதலான வழிகளால் மக்களுக்கு அறிவும் பயிற்சியுமூட்ட வேண்டிய பொறுப்பு இத்துறையாளர்களின் மிகப்பாரிய தேசியக் கடமையாகும்.

## காலந்தோறும் தமிழில் வடமொழி மேலாண்மை

வடமொழியாளரோடு தமிழ்மொழி உறவுகொள்வதற்கு முன்பு மேற்குலக நாடுகளோடு வணிகத்தொடர்பு கொண்டிருந்தது. எனினும் அவர்களது மொழிச் சொற்கள் தமிழில் மிகமிக அரிதாகவே இடம் பெற்றன. வரலாற்றுக் காலம் முதலாகத் தமிழ்நாட்டில் வடமொழியாளரின் செல்வாக்குப் படிப்படியாக ஏற்படுவதாயிற்று. தமிழ்நாட்டிற்குப் புலம் பெயர்ந்த ஆரியர், தமிழ்ப் பண்பாட்டுடன் கலந்தனர். ஆனால்,

தம்மொழி, தம்மதம், தம்இனம் என்பன தமிழரிலும் உயர்ந்தவை என்ற உணர்வே அவர்களிடம் இருந்தது சங்ககாலத் தமிழ் மன்னர்கள் கூட ஆரியர்களை உயர்ந்தோராகவே மதித்தனர் என்பதைப் புறநானூறு முதலான இலக்கியங்கள் சான்று தருகின்றன. இதனால், ஆரியர் தம் திறன்களால் தமிழ் மன்னர்களை ஆட்படுத்தி, உறவு கொண்டாடி தமிழரிடையே வடமொழிச் செல்வாக்கு ஏற்படத் தக்கவகையிலான பண்பாட்டு நட வடிக்கைகளை மேற்கொண்டு வரலாயினர்.9 இதனால் ஆரியப் பண்பாட்டு மேலாண்மை தமிழரிடை ஊடுருவதாயிற்று. மதத்தின் பெயரினால் இத்தகு மொழியூடுருவல் ஏற்பட்டது. இதனால் தமிழகத்து அரசர்களும் வடமொழியின் மேலாண்மைக் குத் துணைபோன குற்றத்தைச் செய்துள் ளனர்.

சங்ககால இலக்கியங்களிலே ஆரியரின் சமூக நிலை போற்றப்பட்டதுடன், அவர்களின் செல்வாக்கினால் வடசொற்கள் தமிழில் வழங்கத் தொடங்கின. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பதாக இந்நிலைமை தமிழிற் காணப்பட்டமையால், தொல்காப்பியர் தமிழில் வழங்கும் வடசொற்களுக்கும் வருமாறு இலக்கணம் கூறவேண்டியவரானார்.

> ''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லாகுமே''.
> (தொல். எச். சூத். 5)

வடசொற்கள் தமிழில் புகும்போது தமிழ் மொழியின் ஒலியமைப்புக்கு ஏற்ற வாறு மாறியமையவேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து. கி.பி. 5ஆம் நூற்றாண்டளவில் தமிழ்நாட்டில் சமணபௌத்த சமயங்கள் நன்கு நிலைபெற்றுவிட்டன. அவர்கள் தம் மதக் கொள்கைகளை சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள், நாலடியார் முதலான அறநூல்களின் வழியாகத் தமிழ் மக்களுக்கு அறிவுறுத்தலானார்கள். இம் மதத்தவர்கள்கூட தம் மதக் கொள்கைகளை வடசொற்களினூடாகவே பெரிதும் கூறினர். இதனால் இம் மதங்களும் வடசொல் மேலாண்மைக்கு வழிவகுத்தன. அக்கால இலக்கிய வழக்கில் 4 அல்லது 5 விழுக்காடு வடசொற்கள் தமிழிற் காணப் பட்டன என்கிறார் வரதராசன் அவர்கள்.10 இதே காலகட்டத்தில் சமணபௌத்த இலக்கியங்களினூடாகத் தமிழில் பாளி, பிராகிருதச் சொற்களும் கலந்துகொண்டன.

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தமிழக ஆட்சியைக் கைப்பற்றிய பல்லவ மன்னர்கள் வேற்று மொழியாளராவர். அவர்கள் ஆரியர் பக்கம் சார்ந்து, வடமொழியையே ஆட்சி மொழியாகக் கொண்டனர். வடமொழியாளர்கள் வடமொழிக் கல்விக்கூடங்களையும் அரசு துணையுடன் நடாத்தினர். பல்லவர்கள் தமது அரசபட்டப் பெயர்களையும் வட மொழியிற் சூடிக்கொண்டனர். தமது கட்டளைகள், அறிவிப்புக்கள் அனைத்தையும் வடமொழி கலந்த தமிழில் வெளியிட்டனர். புல்லவர் காலத்துக் கல்வெட்டுக்கள் இதற்குச் சான்றாகும். வடமொழியாளருக்கு அரசு பெரிதும் உதவியாக இருந்தது. இக் காரணங்களால் தமிழ்மொழி நலிந்தது; நசுக்கப்பட்டது.

இவ்வாறு அரசதுணையுடன் நடபெற்ற வடமொழித் திணிப்புக்கு மக்கள் எழுச்சியே தடையாக அமைந்தது. சைவ, வைணவ மதத் தலைவர்களாக விளங்கிய நாயன் மார்களும் ஆழ்வார்களும் அனைத்து மக்களையும் மதத்தின் பெயரால் அணிதிரட்டி அவர்களுக்குத் தமிழ் உணர்வு ஊட்டினர். திருநாவுக்கரசர் ''ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'' (6: திருத்தாண்டகம் 5) எனத் தமிழின் பெருமை பேசினார். ''நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்'' எனத் திருஞானசம்பந்தர் தன்னை தமிழ்ப்பித்தத் தலைவராக

உயர்த்திச் செயற்பட்டார். இக்காலப் பத்திப்பாடல்களை நோக்கும்போது அவற்றிடையே முன்னரிலும்விட வடசொற்கலப்பு மேலோங்கிக் காணப்பட்டபோதிலும், வடமொழிமீதான காழ்ப்புணர்ச்சியும், தமிழ் உயர்மொழி என்ற அடிப்படையிலான மொழிப்பற்றும் மக்களுக்கு ஊட்டப்பட்டிருந்தலைக் கண்டுகொள்ளலாம்.

தமிழ்ப் பேரரசர்களாகிய சோழமன்னர் காலத்திலும் வடமொழியே ஆட்சி மொழியாக இருந்தது. வடமொழியிலிருந்து பல் வேறுவகை இலக்கியங்கள் தமிழில் ஆக்கம் பெறலாயின. மத உண்மை விளக்க நூல்களுந் தோன்றலாயின. சைவத்தின் செல்வாக்கும், அரசியலில் பார்ப்பனர்களுக்குக் கிடைத்த சலுகைகளும் தமிழில் வடசொற்கள் பெரிதளவு இடம்பெற வாய்ப்பாகி விட்டன. இது குறித்துக் கே.கே. பிள்ளை அவர்கள் [11] கூறும் கருத்து ஈண்டுப் பொருத்தமாகின்றது.

> ''......பல்லவர் காலத்திலும் சோழர் பாண்டியர் காலத்திலும் மன்னரின் அழைப்பின் பேராலோ தாமாகவோ தமிழகத்தில் அலை அலையாக வந்து குடியேறிய பிராமணர்கள் புதுப்புதுப் பெயர்களைப் பூண்டவர்கள். புதிய குல தருமத்தைக் கடைப்பிடித்தவர்கள், வடமொழியையன்றி வேறு மொழியை விரும்பாதவர்கள்; வடமொழியின் ஏற்றத்திற்கென மன்னரிடம் பல சலுகைகளையும் செல்வாக்கையும் கொண்டு தமிழுக்குக் கூற்றமாக வந்தவர்கள்.''

சோழர் காலத்தில் தமிழ் மொழியிற் தோன்றிய காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், உரை நூல்கள் முதலியனவற்றிலே தவிர்க்க முடியாதவாறு அரச சமய சமூகக் காரணங்களால் வடசொற்கள் பெரிதும் இடம்பெறலாயின. கம்பர்கூட ''தேவ பாடை'' என்று வடமொழிக்கு ஏற்றம் கொடுத்துள்ளார். அக்கால உரைகாரரும்வடமொழிக்கு ஏற்றம் கொடுத்தனர். ''தமிழ்ச் சொல்லிற்கெல்லாம் வட நூலே தாயாகி திகழ்கின்றமையின் அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்'' என வீரசோழியத்திற்கு உரை எழுதிய பெருந்தேவனார் துணிந்து எழுதினார். [12] பின்னாளில் சிவஞான முனிவர் சிவஞானபோத முதற் சூத்திர விருத்தியுரையில் 'வடமொழியுணர்ந்தார்க்கன்றித் தமிழியல் விளங்காது என்றும் எழுதினார். வடமொழி தமிழ்ச் சமூகத்திற் செலுத்திய செல்வாக்கினால் பேச்சு மொழியிலும் வடசொற்கள் கலப்பதாயின. அதனைத் தொடர்ந்து எழுத்திலும் பேச்சிலும் மணிப்பிரவாளநடை தோன்றித் தமிழ் மொழியின் நிலையை மேலும் கீழ்மைப் படுத்திற்று. தம் படைப்பில் எந்தளவிற்கு வடசொற்பயன்பாட்டைக் கூட்ட முடியுமோ அந்தளவிற்குத் தமக்குப் பெருமை என்ற மனநிலை தமிழ்ப் புலவரிடம் காணப்பட்டது. இதற்குக் காளமேகமோ அன்றி அருணகிரிநாதரோ விதிவிலக்கன்று. இக்காலத்தில் தமிழ் மொழிக்கு இன்னுமொரு இழிநிலை ஏற்பட்டது. வடசொற்ளைத் தமிழ்நிலைப்படுத்தி எழுதலாம் எனத் தொல்காப்பியர் கூறிய இலக்கண மரபிற்கு மாறாக (எ+டு: த்ரவம் - திரவம்) வடசொற்களின் தமிழ் வடிவத்தை கிரந்த எழுத்துக்களால் எழுதும் ஒரு சிக்கலான நிலையும் ஏற்படுவதாயிற்று. இதனால் தமிழில் ஸ், ஷ், ஹ், ஜ் முதலான கிரந்த எழுத்துக்களும் இடம்பெறலாயின.

18ம் நூற்றாண்டு வரையுள்ள தமிழகத்தில் முஸ்லீம்களின் ஆட்சி, தெலுங்கு மொழியாளராகிய விஜயநகர நாயக்க மன்னர்களின் ஆட்சி, அதனைத் தொடர்ந்து ஐரோப்பியராட்சி என்பன நிலவலாயின. அக்காலப் பகுதியிலே தெலுங்கு, கன்னடம், மராத்தி, இந்துஸ்தானி, அரபு, உருது, பாரசீகம், போர்த்துக்கேயம், பிரஞ்சு, ஆங்லம் முதலான மொழிகள் தமிழ் நாட்டில் தம் செல்வாக்கைப் பல்வேறு வழிகளில்

செலுத்தின. மேலே குறிப்பிட்ட பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்த போதிலும் அவை தமிழைப் பாதிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஏனெனில் அவை தமிழில் இல்லாத புதிய பொருட்பெயர்களாகவே வழங்கின. ஆனால் வடமொழித் திணிப்பாளர், தமிழ் இலக்கணத்தை வடமொழி இலக்கணம் என்றும், வடமொழிக்குத் தமிழ் நிகராகாது: தமிழை அறிய வடமொழியையே கற்கவேண்டும் என்னுங்கருத்துக்களைச் சமூகத்தில் நிலைபெறச் செய்தனர். வீரசோழியம், பிரயோகவிவேகம், இலக்கணக்கொத்து முதலான இலக்கண நூல்களும் சேனாவரையர், சிவஞான முனிவர் முதலான உரைகாரரும் தமிழ்மொழிக்கு இத்தகு இழிநிலையைக் கற்பிதம் செய்தனர்.

தமிழகத்திலும் ஈழத்திலும் ஆங்கிலேயராட்சி நிலவியபோது பிராமணர்களும், உயர் வகுப்பினரும் ஆங்கிலக் கல்வியிலும் அரச பதவிகளிலும் மேம்பட்டு விளங்கினர். இவர்களில் பார்ப்பனர் வடமொழியையே உயர் மொழியாகப் போற்றினர். அதே வேளை ஈழத்தில் சைவசமயக் கல்விப்பாரம்பரியத்தில் வந்தோர் தமிழையும் வடமொழியையும் ஒப்பவே நோக்க ஆங்கிலக் கல்வியாளர் தமிழுக்கு முதன்மை அளிக்கவில்லை.

தமிழகம் வந்த ஐரோப்பிய அறிஞர்களான போப், கால்டுவெல், வின்சுலோ, பெர்சிவல் முதலானவர்கள் தமிழ் மொழி பற்றி ஆராய்ந்து வெளியிட்ட நூல்கள் வாயிலாக மொழி, இனம், வரலாறு பற்றிய உயர்ந்த கருத்துக்களை வெளியிட்டனர். கால்டுவெல் ஐயரின் ''திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்'' (1956) என்ற நூல் தமிழ் மொழியின் சிறப்பை உறுதிப்படுத்தியது. திராவிடர் என்ற சிறப்புப் பெயரிட்டு அழைக்கப் பெற்ற மக்கள், பார்ப்பனர்கள் தங்களிடையே வந்து வாழத் தொடங்குவதற்கு முற்பட்ட காலத்திலேயே நாகரீக வாழ்வில் அடியிட்டிருந்தனர் என்பதில் சிறிதும் ஐயமில்லைஎன்றும் தமிழ் தன்னிடையே இடம் பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர் வாழ்வதோடு அவற்றின் துணையை ஒரு சிறிதும் வேண்டாமல் வளம்பெற்று உயர்தலும் இயலும், என்றும் தெரிவித்த 12 கருத்துக்கள் சமூக - அரசியல் - கல்வி நிலைப்பட்ட தமிழ் எண்ணவியலாளரிடையே தனித் தமிழ் இயக்க உணர்வுகளை விரைவுபடுத்தின.

இக்காலத்தே இந்தியாவில் தோன்றிய விடுதலை இயக்கங்களும் தனித்தமிழ் இயக்த்தினை விரைவுபடுத்தின. பாரத தேசியம் பேசிய பாரதியார் கூட தமிழின மேம்பாட்டையே அழுத்திப் பாடினார்.

19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து படிப்படியாகத் தனித் தமிழ் எண்ணக் கருத்துக்களும் எழுத்துக்களும் தமிழில் இடம்பெறலாயின. இப்பணியினை நடைமுறைப்படுத்தியோரிற் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை *(1855, 1897)* பரிதிமாற்கலைஞர் *(1870, 1903)*, பாம்பன் குமரகுருபரதாச சுவாமிகள் *(1850, 1929)*, மறைமலை அடிகள் *(1976, 1950)* நீலாம்பிகை அம்மையார் *(1903, 1945)* சோமசுந்தர பாரதியார் *(1879, 1959)* இளவளகனார் *(1904, 1921)* சி. இலக்குவனார் *(1910, 1921)* தேவநேயப் பாவாணர், *(1902 - 1981)* முதலியோரது ஆக்கங்களும் செயற்பாடுகளும் குறிப்பிடத்தக்கவை. இந்நிலையில் *1916* இல் 'தனித்தமிழ் இயக்கம்' அமைப்பு அடிப்படையில் தொடங்கப்பட்டது.

ஈழத்திலே மறைமலை அடிகளின் வருகை மூன்று தடவை இடம் பெற்றிருக்கின்றது. அத்துடன் தமிழகத்திலிடம்பெற்ற தனித்தமிழ் இயக்க செயற்பாடுகளைப் பின்பற்றி அதனை ஈழத்தில் முன்னின்று நடாத்தியவர்களில் தா. அழகசுந்தரதேசிகர் *(1873 - 1941)*, விபுலாநந்த அடிகள் *(1892 1947)*, சு. நவநீதக்கிருஷ்ண பாரதியார்

(1889 - 1954) எம் பி தாம்பரனார் 1898 - 1972), பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை (1903 - 1968) முதலியோர் தனித்தமிழ் இயக்கச் சார்பாளர்கள் எனலாம். தனித் தமிழ் இயக்கத்தை உணர்வு முறையிலும். செயற்பாட்டு அடிப்படையிலும் கொண்டு நடாத்திய இருபெருந் தலைவர்கள் மறை மலை அடிகளும், பாவாணருமாவர். இவர்களது செயற்பாடுகளின் குறிக்கோள்களாகப் பின்வரும் பொருட்கூறுகள் அமைந் திருந்தன.

1. பிறமொழிச் சொற்களை இயன்ற வரை எழுத்திலும் பேச்சிலும் தவிர்த்தல்;
2. பிறமொழிச் சொற்களுக்கு நிகரான பழந்தமிழ்ச் சொற்களைக் கண்டு பிடித்து வழங்கல்,
3. பிறமொழிச் சொற்களுக்குத் தமிழில் புதுச்சொல்லாக்கம்.
4. தவிர்க்க முடியாதவிடத்து பிறமொழிச் சொற்களை தமிழ் மொழியின் இயல்புக்கமைய வழங்குதல்.
5. பிறமொழிகளிலுள்ள அறிவியல் நூல்களைத் தூய தமிழில் மொழி பெயர்த்தல்.
6. ஆட்பெயர், இடப்பெயர், பொருட் பெயர் முதலியவற்றுக்குத் தூய தமிழ்ப்பெயரிடுதல்.
7. ஆக்க இலக்கியகாரரும் தனித்தமிழில் எழுதவேண்டும்.
8. தனித்தமிழ் இயக்கத்தை மக்கள் இயக்கமாக மாற்றுதல்.

இத்தகு உயர்ந்த நோக்கங்களுடைய தாகத் தனித்தமிழ் இயக்கம் தமிழகத்தில் அரைநூற்றாண்டு காலமாக நடைபெற்று வந்தபோதிலும், சமூக அரசியற் காரணிகளால் அம்முயற்சி அங்கு வெற்றிபெற வில்லை என்பதையும், மாறாகத் தமிழக எழுத்தும் பேச்சும் தனித்தமிழ் என்ற நேர் கோட்டினின்றும் மாறுபட்டு திசைமாறிப் போயிருப்பதையும் கண்கூடாகக்காணலாம்.

## மொழித் தூய்மையாக்கமும் சிக்கல்களும்;

காலம் காலமாகத் தமிழில் கலந்து கொண்ட வடமொழிச் சொற்களை அகற்றி விட்டு, அவற்றுக்குப் பதிலாகத் தூய தமிழ்ச் சொற்களை ஆக்கிக் கொள்வதில் பெரும் இடர்பாடுண்டு எனச் சலிப்போருமுளர். அதுபோன்ற அறிவியலின் பேறாக் வழங்கிவரும் பிறமொழிச் சொற்களுக்கு எவ்வாறு தமிழிச் சொல்லாக்கம் காண முடியும் என எங்குவாருமுளர். 'தமிழ் இலக்சிக்கன்' என்ற பெயரிலுள்ள ஏழு பெருந்தொகுதிகளிலும் ஆயிரத்துக்கும் மேற் பட்ட பிறமொழிச் சொற்கள் இருப்பதை அறிவோம். அவற்றுக்குரிய தமிழ்ச் சொற்களைப் பழந்தமிழ் இலக்கியங்களினூடாகக் கண்டுபிடித்தோம், இச் சொற்களை எழுத்திலும் பேச்சிலும் கொண்டுவர வேண்டிய பொறுப்பு எழுத்தாளருக்கும் மக்களுக்கும் உரியது ஆகும் பழந்தமிழ் இலக்கிய நூலார் தமிழ்ச் சொற்களைக் கைவிட்டு வடசொற் களையே விரும்பிக் கையாண்டு வந்தமையால் ஏற்பட்ட வரலாற்றுத் தவறுகளின் விளைவே வடசொல் மேலாண்மை தமிழில் ஏற்படுவதற்குரிய முதற் காரணமாகும்,

நமது மொழியில் வழங்கிவரும் உருது, பாரசீகம், ஐரோப்பிய மொழிகள் ஆகிய மொழிச் சொற்களுக்குத் தமிழ்ச் சொல் லாக்கம் செய்வதில் இடர்பாடுகளுண்டு. அறிவியல் தந்த பிறமொழிச் சொற்களைத் தமிழில், கலைச் சொல்லாக்கம் செய்து கொள்ள வேண்டும். அவ்வாறு கலைச் சொல்லாக்கம் செய்யமுடியாதவிடத்து பிற மொழிச் சொற்களைத் தேவை கருதி அப் படியே தமிழில் வழங்குதல் தவறன்று. அறிவியல் சார்ந்த சொற்களைத் தமிழாக்கம்

செய்யலாம்' என்பதற்கு 1936 இல் சென்னையில் விபுலாநந்தர் தலைமையில் நடைபெற்ற கலைச் சொல்லாக்க மாநாடும்; 1938 இல் வெளிவந்த 'தமிழ்க் கலைச் சொற்கள்'' என்ற நூலும், பின்னாளில் ஈழத்தில் வெளிவந்துள்ள கலைச் சொற்றொகுதிகளும் சான்றாகின்றன. இதுவரை வெளிவந்த கலைச் சொற்றொகுதிகளில் வடமொழி மேலாண்மை இருத்தலைச் சுட்டிக் காட்டுவதன் மூலம், இனிமேல் நடைபெறும் கலைச் சொல்லாக்கம் தூய தமிழில் அமையவேண்டும்' என்பதை வலியுறுத்த வேண்டி உள்ளது. தமிழில் வழங்கும் எல்லாப் பிறமொழிச் சொற்களுக்கும் தமிழில் கலைச் சொல்லாக்கம் செய்தல் முடியாது என்று கூறுவதை நிறுத்திவிட்டு, அதற்குரிய புலமையை நாம் வளர்த்துக் கொள்ளவில்லை என்பதை ஒப்புக்கொண்டு, எமது மொழியை வளம்படுத்த இத்துறை வல்லார் முன்வர வேண்டும்.

## மொழிபெயர்ப்பு;

தமிழ்மொழி பல துறைகளிலும் வளம் பெற வேண்டுமாயின் வேற்று மொழிகளிலுள்ள நல்ல நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்க வேண்டும். ஒரு மொழியிலுள்ள ஆக்கங்களை இன்னொரு மொழியில் மொழிபெயர்க்கும்போது இரு மொழிகளினதும் இலக்கண மரபுகளோடு பண்பாட்டுப் பின்னணிகளையும் கருத்திற் கொள்ள வேண்டும். தமிழில் வழங்கிய வடசொற்களுக்கு இலக்கணம் கூறவந்த நன்னூலார் தற்பவம், தற்சமம் என்னும் இரு சொற்களைக் கையாண்டார். வடமொழிச் சொற்களைத் தமிழில் எழுதக் கூடியதாக இருந்தால் அதனைத் தற்பவம் என்றும், அவ்வாறு தமிழ் எழுத்தில் எழுத முடியாத சொற்களைத் தமிழ்ப்படுத்தி எழுதின் தற்சமம் என்றார். இதனை 'ஒலிபெயர்ப்பு' (Transliteration) எனலாம். பிறமொழிச் சொற்களுக்குத் தமிழில் கலைச் சொல் ஆக்கமுடியாதபோது, அச்சொற்களை ஒலிபெயர்ப்பு அடிப்படையில் வழங்குதல் தவறில்லை. விஞ்ஞான வளர்ச்சியும் தொழில்நுட்ப வளர்ச்சியின் உற்பத்திப் பெருக்கமும் பிறமொழிகளிற் புதுப்புதுச் சொற்களின் தோற்றத்தையும் பெருக்கியுள்ளன. இத்தகைய சொற்களை தமிழில் மொழிபெயர்க்கும் போது, தவிர்க்க முடியாதவிடத்து ஒலிபெயர்ப்பாக முதலில் மொழிபெயர்த்து வழங்கலாம். அச் சொற்கள் மக்களிடையே பழக்கப்பட்ட பின்னர் அவற்றுக்குத் தனித் தமிழ்ச்சொல்லாக்கம் காலப் போக்கில் ஏற்படுத்திக்கொள்வதும் ஒரு முறையாகலாம். மொழிபெயர்ப்புத் தொடர்பாக விபுலாநந்த அடிகளார் கூறும் கருத்தும் ஒரேவழி ஈண்டுப் பொருந்துகிறது.

> *''தமிழில் மொழிபெயர்ப்பு நூலெழுத முன்வருபவர் சிலர் நிரம்பிய தமிழறிவின்மையால் ஆங்கில மக்களும் தமிழ் மக்களும் ஒருங்கு வெறுக்கத்தக்க பயற்றுப் பச்சரிசி நடையில் (பைந்தமிழும் வெள்ளையர் ஆங்கிலமும் சரிக்குச் சரி கலந்த நடையைப் பயற்றுப் பச்சரிசி நடையென்றாம். மணிப்பிரவாளம் என்றாற்போல) நூலெழுதி முடிக்கின்றார்கள். இவ்வாறெழுந்த நூல்களால் விளையும் பயன் ஒன்றுமில்லை. ஒரோ ஒருவழி அயனாட்டுச் சொற்களைச்சேர்த்துக் கொள்வதனாற் குற்றமில்லை' முடிந்த நூல் தமிழ்மணங் கமழ்வதாக விருத்தல் வேண்டும். அல்லாவிடில் நின்று நிலவாது.''* [14]

பிறமொழிகளிலுள்ள ஆக்க இலக்கியங்களை தமிழில் மொழிபெயர்க்கும்போது குறிப்பாக பெயர்ச் சொற்கள், இடப்பெயர்கள், பொருட்பெயர்கள் பண்பாட்டு விழுமியச் சொற்கள் முதலியவற்றைத் தனித்தமிழில் மொழிபெயர்த்தலில் இடர்ப்பாடு உண்டு. ஒரு பண்பாட்டுச் சூழலை வெளிப்படுத்தும் இலக்கியத்தை இன்னொரு பண்பாட்டுச்சூழலைக் கொண்ட மொழிக்குக்

கொண்டு வரும்போதே இந்த இடர் பாடு ஏற்படுகிறது; அறிவியல் நூல்களை மொழிபெயர்க்கும்போது இதற்குத் தடை இல்லை.[15]

## தனித் தமிழ் வழக்குகள்

எழுத்து வழக்கு, பேச்சு வழக்கு ஆகிய இரண்டிலும் எழுத்து வழக்கில் தனித்தமிழ் நடையைப் பேணும் வாய்ப்பு மிகுதியாகும். ஏனெனில், ஒருவர் தாம் எழுதியதை மீண்டும் திருத்திக்கொள்ள வாய்ப்பு உண்டு. ஆனால் பேச்சு வழக்கில் இவ் வாய்ப்புக்கு இடமில்லை. உரையாடுவோர் தம் கருத்துக் களையும் உணர்வுகளையும் மற்றவருக்கு உடனுக்குடன் வெளிப்படுத்தும்போது, தூய தமிழில் பேசவேண்டும் என்ற உணர்விருந்த போதிலும் அது முழுமையாகக் கைகூடுவ தில்லை. அன்றியும் உரையாடுவோரின் கல்வித்தகமை, மொழியறிவு, வாழ்க்கை நிலைமை, சூழல் என்பவற்றுக் கேற்ப ஒருவரது பேச்சு மொழியும் மாறுபடுதல் இயல்பே. பொதுவாகப் படித்தோர், நகர வாழ்க்கையினர் என்னும் உயர்நிலைப்பட் டோர் தம் பேச்சில் ஆங்கிலச் சொற்களை யும், வடமொழிச் சொற்களையும் மிகுதி யாகச் சேர்த்துக் கொள்ளுந் தன்மையு முண்டு. ஆங்கிலமே தெரியாத கிராமப் புறத்து மக்கள் தாம் பேசும் சொற்கள் ஆங்கில மொழிச் சொல் என்றே புரியாது தம் பேச்சில் சில ஆங்கிலச் சொற்களை யும் சேர்த்துக் கொள்கின்றனர். (எ+டு: றேடியோ, பேப்பர், றோட் மார்க்கட் ) இன்னுஞ் சிலர் ஆங்கில ஆர்வமும் போலிச் சமூக உயர் நோக்கமுங்கொண்டவர்ளாக உறவுமுறைப் பெயர்கள் சிலவற்றுக்கு ஆங்கி லச் சொற்களையே பயன்படுத்துகின்றனர். (எ+டு: மம்மி, டடா, டடி, அங்கிள், அன்டி). ஆனால் தமிழ்நாட்டுப் பேச்சு நடையுடன் ஒப்பிடும்போது ஈழத்தில் தமிழ்ப்பேச்சில் பிறமொழிக் கலப்பு குறை வென்றே கூறவேண்டும். இப்போது இங்கே தனித்தமிழ் உணர்வு பொதுமக்களிடம் பரவத் தொடங்கிவிட்டது. என்பதற்குத் தனித்தமிழில் தம் பிள்ளைகளுக்குப் பெயர் சூட்டும் மனப்போக்குக் காண்பிக்கின்றது.

வாழ்வியலில் இடம்பெற்ற நிகழ்வுகள் வடமொழிப் பெயராலே வழங்கின, ஆனால் இன்று ஈழத்தவரால் பொதுவாக 'பூப்பு நீராட்டு விழா, திருமணவிழா, புதுமனை 'குடிபுகு விழா' அடிக்கல் நாட்டுவிழா, ஏடு தொடங்குதல், குடமுழுக்கு முதலான தனித்தமிழ் வழக்குகளே பெரிதும் கையா ளப்பட்டு வருகின்றன. மேலும் தலைவர் (அக்கிராசனர்), செயலர் (காரியதரிசி), பொருளாளர் (பொக்கிஷாதிபதி), உறுப் பினர் (அங்கத்தவர்) போன்ற இன்னோ ரன்ன தூய தமிழ்ச் சொற்கள் வழக்கிலி ருந்து வந்த வடமொழிச் சொற்களை மறக் கப்பண்ணிவிட்டன.

அண்மைக் காலங்களில் சொற்பொழிவு மேடைகளில் (சமயம் தவிர்ந்த) தனித் தமிழில் பேச முற்படுவதும், புதுப்புதுச் சொற்களைப் பேச்சாளர்கள் தம்பேச்சில் மக்களுக்கு அறிமுகப்படுத்தும் போக்கும் நல்லதோர் எதிர்காலத்தைக் குறித்துக் காட்டுகின்றன.

தனித்தமிழ் வழக்கைப் பொறுத்தவரை யில் மக்கள் தொடர்பு நிலைப்பட்ட நாளி தழ்கள், வானொலி, தொலைக்காட்சி என் பனவற்றின் பணி மிகவும் ஆற்றல் மிக்க தாகும். யாழ்ப்பாணத்தில் வெளிவந்து கொண்டிருக்கும் நாளிதழ்கள் இதுவரை காலமும் தாம் பயன்படுத்தி வந்த பிறமொ ழிச் சொற்களைக் கைவிட்டுப் பதிலாகத் தூயதமிழ்ச் சொல் வழக்குகளைக் கையாண்டு, அவற்றைப் பொதுமக்களுக்கு அறிமுகப்படுத்தும் பெரிய பணியில் ஈடுபட் டுள்ளன. நாளிதழ்களும் ஆக்க இலக்கியங் களும் தனித்தமிழ் வழக்கை மக்களுக்கு அறிமுகப்படுத்தி, பயிற்சிக்குக் கொண்டு

வரும் செயற்பாட்டில் ஆற்றல் மிக்கவை யாகும். இம் முயற்சியில் இலக்கியகாரரும் படிப்படியாக ஈடுபடுவார்களேயானால் ஈழத்தில் எழுத்திலும் பேச்சிலும் தனித் தமிழ் வழக்கை நிலைநாட்டுவதோடு, தமிழ் வழங்கும் நல்லுலகத்திற்கே வழிகாட்டும் நாடாகவும் எமது நாடு அமையும் என்பது உறுதி. □

## அடிக்குறிப்பு

1. க. தெய்வசுந்தரம், 'மொழியும் வளர்ச்சியும்', புலமை, யூன், 1980, பக். 49
2. கா. சிவத்தம்பி, 'இலக்கியமும் கருத்து நிலையும், சென்னை, 1982, பக். 59
3. *J. A. Cuddon, A Dictionary of Literary Terms, Delhi, 1985, P. 542*
4. *E. Annamalai (Ed), Lenguage Movements in India, Mysore, 1979, P. 38*
5. *A.C. Bough, A History of English Language, Madras, 1970, P. 394*
6. *K.M. George, A survey of Malayalam Literature, 1968 P. 42.*
7. *R. Mugali, History of Kannada Literature, New Delhi, 1978, P. 4.*
8. *K. Kailasapathy, The Tamil Plurist Movement, Social Scientist May, 1979 P. 46.*
9. மு. வரதராசன், மொழி வரலாறு, சென்னை, 1975, பக். 109.
10. தி. வை. சொக்கப்பா "நமது பண்பாடுசமஸ்கிருத மயமாக்கப்பட்டமை" "சமஸ்கிருத ஆதிக்கம்" பெரியார் திறந்த பல்கலைக் கழக வெளியீடு, 1985 பக்கம் 19
11. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு- மக்களும் பண்பாடும், சென்னை, 1981. பக்'
12. வீரசோழியம், நூற்பா 60 உரை பார்க்க.
13. இ. கால்டுவெல், திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம் (மொழிபெயர்ப்பு கா. கோவிந்தன்) சென்னை 1977, பக். 68—70
14. அருள் செல்வநாயகம் (பதிப்பு) விபுலாநந்த ஆய்வு, சென்னை, 1964 பக். 36—37.
15. கா. சிவத்தம்பி 1982, பக். 63—64.

□

## நம்முன்னோர் கண்ட காலம்

"காலம், காட்டி மறைத்த கோலங்கள் கோடிகோடி" என்பர். காலம், வரலாற்றையும், நாகரீகத்தையும், வளர்ச்சிகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இந்தக் காலத்தை நம்முன்னோர்கள் 'சிறுபொழுது' 'பெரும்பொழுது' என இருபிரிவுகளாக வகுத்துள்ளனர்.

### சிறுபொழுது ஆறு

காலை (மு. ப. 06 . 00 — மு. ப. 10 . 00)
நண்பகல் (மு. ப. 10 . 00 — பி. ப. 02 . 00)
எற்பாடு (பி. ப. 02 . 00 — பி. ப. 06 . 00)
மாலை (பி. ப. 06 . 00 — இரவு 10 . 00)
இடையாமம்(இரவு10 . 00 — இரவு 02 . 00)
வைகறை (இரவு 02 . 00 — காலை 06 00)

### பெரும்பொழுது ஆறு

முன்பனி (மார்கழி — தை))
பின்பனி (மாசி — பங்குனி)
இளவேனில் (சித்திரை — வைகாசி)
முதுவேனில் (ஆனி — ஆடி)
கார் (ஆவணி — புரட்டாதி)
கூதிர் (ஐப்பசி — கார்த்திகை)

கட்டித் தயிரினால்
முட்டி நிறைககின்ற
பட்டித்திடல் எங்கள் பூமி — அதைத்
தட்டிப பறித்திடில்
ஒட்டி இருக்குமோ
இந்த உயிர சொல்லுஞ் சாமி!

தங்க நிலாவிலே
எங்கள் நிலாவெளிப்
பொங்குங் கடல் எழில் மின்னும் — திரை
எங்கும் அலைவந்து
தங்கு தடையின்றி
சங்க இசைநலம் பின்னும்!

வெள்ளி...... வெளிவந்து
அல்லி மலர்வதைத்
தள்ளி யிருந்தங்கு பார்க்கும் — அந்தச்
'சல்லி' மணலினில்
கள்ளி படர்வதை
எள்ளிச் சிறுபுல்லும் வேர்க்கும்.

கோணை நகரினில்
ஆனை குடிவந்தால்
வீணே கிடந்திடலாமோ? — புலி
ஆணை கிடைத்தும் நீ
துணாய்க் கிடக்கின்றாய்
காணப் புறப்பட்டு வாடா 'ஈழம்.



## மானத் தமிழனோடா?

மு. வே. யோ. வாஞ்சிநாதன்

**எதிர்ப்பக்க ஓவியம்**

ஓவியர் மாற்கு

பாட்டோடு நீண்ட பயணம் புறப்பட்டான்
மாட்டோடு வண்டி சிதற மனிசன் போய்
குற்றுயிராய் வீழ்ந்தான்; கொடும்பாவி ஏவிய 'ஷெல்'
பட்டொருவன் வாழ்வு பறிபோயிற்றொரு கணத்தில்'

# வன்னிவள நாட்டின் பண்பாட்டுக் கோலங்கள்



க. பார்த்திபன்

வடதமிழீழத்தின் தென்பாகத்தில் முல்லைத்தீவு, வவுனியா மன்னார் மாவட்டங்களை உள்ளடக்கியதான பகுதி வன்னிவள நாடாகும். செந்நெல் விளையும் செழுமையான விளைநிலங்களும் சிறு குளங்களும், பாட்டுப்பபாடுகின்ற காக்கை குருவிகள் பல்லின மிருகங்கள் வாழுகின்ற அடர்ந்த காடுகளும் நிறைந்த வளங்கொழிக்கும் மண்ணாக வன்னிமண் விளங்குகின்றது. அகன்ற கடல் வளமும் இங்கு உணடு. ஆக முல்லை, மருதம் நெய்தல் ஆகிய முவகை நிலங்களும், அவற்றிற்காய பணபுகளும் இங்கே உண்டு.

இலங்கையின் ஆரம்ப வரலாற்றிலிருந்து வன்னிமண் தனித்துவமும் சிறப்பும் வாய்ந்ததாக இருந்திருக்கின்றது. இந்நிலத்தில் தலைவணங்காத் தமிழன் அன்று முதல் இன்று வரை இருந்துவாழுகின்றான். வன்னியில் பல மன்னர் எதிரியைக் கலங்க வைக்கும் செங்கோல் ஆட்சி புரிந்து வந்திருக்கின்றனர். வன்னியின் இறுதி மன்னன் பண்டாரவன்னியன், தமிழ்ப் பகுதிகளில் வன்னி தவிர்ந்த மற்றைய அரசுகள் எல்லாம் வீழ்ந்த பின்பும் அந்நியரான ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் வரை இங்கு ஆட்சி புரிந்து (1803 ம் ஆண்டு) இறுதிவரை அவர்களுக்கு மண்டியிடாது மண்ணின் மானத்தைக் காக்கப் போராடி மண்ணுக்காகவே மடிந்து இம்மண்ணுக்கு அழிக்க முடியாத பெருமையைத் தேடித் தந்துள்ளான்.

இம்மண்ணின் மூதாதையரான வீரத்தமிழ் மறவர்கள் விதைத்த விதைகள் இன்னும் துளிர் விட்டுக் கொண்டே இருக்கின்றன. தமிழீழப் போராட்டத்தில் வன்னி தனது காத்திரமான பங்களிப்பைச் செய்து வருகின்றது. எல்லைப்பிரதேசத்தில் இருப்பதுடன், இயற்கையான காப்பரண்களையும் கொண்டிருப்பதானால் தமிழீழப் போராட்டத்தில் இந்நிலம் முக்கியம் பெறுகின்றது.

இங்குள்ள வளங்களுக்கேற்ப இம்மக்களின் தொழில் முறைகள் கூடுதலாக வேளாண்மை சார்ந்தே இருந்து வருகின்றன. ஆங்காங்கே இருக்கும் சிறுகுளங்களும் அவற்றை அடுத்துள்ள வயல் நிலங்களும், தாராளமான நிலப்பரப்பும் வேளாண்மைத் தொழிலைச் சாதகமாக்கின. அதனால் அதுவும் அதுசார்ந்த தொழில்களான மாடுவளர்ப்பு, வேட்டையாடுதல், தேன் எடுத்தல் ஆகியன ஆரம்ப காலத்திலிருந்து மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளன. கடல் வளத்தை அண்மைக்காலத்திலேயே பெரிய அளவில் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். எனினும் முன்னரும் குறிப்பிடக்கூடிய அளவில் இல்லாமல் சிறு அளவில் பயன்படுத்தி வந்திருக்கின்றனர்.

வன்னி மக்களின் வாழ்க்கை முறை முற்றுமுழுதாகத் தனித்துவமான கிராமிய பண்பினதாயும், கிராமியக் கலைகளையும், நாட்டார் வளக்கியலையும் ஆரம்பத்திலிருந்து வளர்த்து வந்த பண்பாட்டினைக் கொண்டதாயும் இருந்து வந்துள்ளது. மிகப் பிற்பட்ட காலத்திலேயே இப்பகுதிகளில் அபிவிருத்தியைக் காண இயலுகின்றது. ஆடிப்பாடி வேலை செய்து கூடி உண்டு குடித்து மகிழும் வன்னி மக்களின் தன்னிறைவான பண்பாடுகள் காலப்போக்கில் பல்வேறு மாற்றங்களினாலும் அழிந்தொழிந்து கொண்டிருக்கின்றது தனித்துவமாக வாழ்ந்த மக்கள் இன்று தனித்துவத்தை இழந்து வேறு பிரதேசங்களில் தங்கியிருக்கும் நிலையையும் வன்னிப் பண்பாட்டைக் கீழ்த்தரமாக எண்ணிப் புறக்கணிக்கும் நிலையையும் காண முடிகின்றது.

வன்னியின் பண்பாட்டுக் கோலங்கள் எத்தகையன அவற்றின்திறன் எவை என்பதைத் தொடர்ந்து அவதானிப்பது அவசியமானது. பிரதேச வேறுபாடுகளுக்கிணங்கவும், தொழில், சமூக வேறுபாடுகளுக்கிணங்கவும் பண்பாடுகள் வேறுபட்டமைந்திருக்கின்றன. இந்த வகையில் வன்னியின் பண்பாடுகள் தனித்துவமானதாக இருந்து வந்திருக்கின்றன. சிறு குளங்களும், காடுகளும் நிறைந்திருந்த வன்னிவள நாட்டில் மக்களின் வாழ்க்கை முறை, வேளாண்மையுடன் ஒட்டியதாகவே காணப்பட்டது. ஆங்காங்கே சிறு குளங்களுடனும், பொருத்தமான நிலப்பரப்புகளுடனும் சார்ந்தே சில குடிகளைக் கொண்ட சமூகங்களாக மக்கள் வாழ்ந்து வந்தனர். வேளாண்மையும் அத்துடன் இணைந்ததான மாடுவளர்ப்பு வேட்டையாடுதல், தேன் எடுத்தல் ஆகியன இம்மக்களின் தொழில் முறைகளாக இருந்தமையினால் பண்பாடும் இவற்றிற்கேற்பவே அமைந்திருந்தன. இவ்வாறு குழுக்களாக வாழ்ந்த குடிகளில் கிராமிய அம்சங்கள் மேம்பட்டிருந்ததுடன் சந்தோசமானதும், தன்னிறைவானதுமான வாழ்க்கை இருந்திருக்கின்றது.

தங்கள் தேவைகளுக்காக உழைத்து வன்னி மக்கள் தம் வாழ்க்கையை வனப்பாக மேற்கொண்டு வந்துள்ளார்கள். காலையிலும், மதியத்திலும், மாலையிலும் உரலில் குத்திய அரிசிச் சோறு உண்பது அவர்களின் முக்கியமான உணவு முறையாக இருந்துள்ளது. வன்னிவள நாட்டில் உணவுக்கு என்றும் குறையிருந்ததில்லை. கடுமையான உடல் உழைப்பிற்கும், திடகாத்திரமான தேகத்திற்கும், நோய் எதிர்ப்புக்கும் ஏற்ற உணவு வகைகள் இம்மக்களால் சுவைக்கப்பட்டன. முதல் நாள் இரவில் சோற்றில் தண்ணீர் ஊற்றி வைத்து அடுத்தநாள் காலையில் அதனைத் தயிர், மோருடன் கலந்து கரையல் குடிப்பார்கள். இன்றேல் பழைய சோறு குழைத்து உண்பார்கள். ஒருவர் வேலைத்தலத்திற்குச் சோற்றுப் பெட்டியில் (பனை ஓலையினால் பின்னப்பட்ட பாத்திரம்) எடுத்துச் செல்லும் சோற்றின் பாரத்தைப் பார்த்தே அவரைத் தொழிலுக்கு வாரத்துக்கு (பங்குக்கு) சேர்த்துக் கொள்ளும் மரபும் இருந்து வந்துள்ளது. சோற்றுக்கு இதமாகக் கறிசமைப்பதற்கு இறைச்சியும், இறைச்சி வத்தலும் அடுப்படி முகடுகளில் குறைவில்லாது தொங்கிக் கொண்டிருக்கும். நெல்லரிசியை உரலில் மாவாக்கி அழகாக எண்ணைப்பிட்டு, களி, பிடிப்பிட்டு நெல் குற்றும் போது தவிடு எடுத்து அதிலும் ஒரு இதமான தவிட்டுப்பிட்டு, குரக்கன், வரகு, சாமை, இறுங்கு முதலான சிறு தானியங்களை அரைத்து மாவாக்கி அவற்றில் நினைக்க வாயூறும் நல்ல பிட்டும் சமைத்து உண்பார்கள். தினை மாவைத் தேனில் உருட்டி உண்பார்கள். தேனுக்குள் இறைச்சியை அவிய வைத்து ருசித்து உண்பார்கள். மாடுகள் பெருமளவில் வளர்க்கப்பட்டதனால் பால், தயிர், நெய் என்பவற்றுக்குச் குறைவில்லை. பாலில் பாற்புக்கை பாற்கஞ்சி சமைப்பார்கள். முசுட்டை, விடத்தல் ஆகிய இலைகளைப் பயன்படுத்தி சுவையாக பிட்டு அவிப்பார்கள். வட்டுக்கத்தரி, தூதுவளை, பசளி, தடிச்சல் ஆகியன இம்மக்களால் விரும்பி சமைக்கப்பட்ட ஊட்டம் நிறைந்த மரக்கறி வகைகளாக இருந்தன. கற்பகதருவான பனையை நன்றாகப் பயன்படுத்தினர். பனம் பழத்தினை வேலை செய்து களைக்கும்

சந்தர்ப்பத்தில் 'காடி' வைத்து சுவையாகச் காய்ச்சிட்டார்கள். பனம்பழக் களியை எடுத்து பாலில்வடித்தல், எண்ணையில் வடித்தல் எனப் பலகார வகைகள் செய்தனர். வன்னியிலே பேர் பெற்ற ஒடியற் கூழ் சுவையாகச் சமைத்து கூடிச் குடிப்பார்கள். ஒடியல் மாவில் பிட்டு அவித்துச் சோற்றுடன் கலந்து உண்பார்கள். நீண்ட ஆயுளையும், வீரத்தையும் கொடுத்த வன்னி மக்களைப் புகழுடன் வாழ வைத்த இந்த உணவு வகைகளைப் பெற்றுக் கொள்வதற்கு தொழில்கள் புரியப்பட்ட வகையும் தனித்துவமானது

நெற் பயிர்ச் செய்கை சிறு குளங்களை அடுத்தும், மானாவாரியாகவும் மேற்கொள்ளப்பட்டதுடன், சேனைப்பயிற் செய்கையாக ஏனைய தானியங்களின் உற்பத்தி இடம்பெற்றிருக்கின்றன. அதிக விளைவைப் பெறக்கூடிய வகையில் புதிய காடு வெட்டிப்பயன்படுத்தி இரண்டு வருடங்களுக்கு மட்டும் அந்நிலத்தில் பயிரிட்டுப் பயன்பெற்று தொடர்ந்து அந்நிலத்தைக் கைவிட்டு மீண்டும் புதிய காடு வெட்டிப் பயிரிடும் நடவடிக்கை சேனைப் பயிர்ச்செய்கையாகும்.

வேளாண்மை நடவடிக்கைகள் ஆரம்பித்து அறுவடை பெறப்படுவது வரையிலான காலத்தின் செயற்பாடுகள் அனைத்தும் ஆடிப்பாடி வேலை செய்தால் அலுப்பிருக்காது' என்பதற்கமைய பாட்டுடனும் ஆட்டமுடனும் அமைந்து காணப்படுகின்றன. இவை இம்மக்களிடையேயான ஒற்றுமையுணர்வையும், ஒன்றிணைவையும் வெளிக்காட்டி நிற்கின்றன.

நெல் விதைப்பதற்குப் பொருத்தமான நெல்லை 'முளை கட்டிப் பார்த்தல்' மூலம் தெரிவு செய்து நாள் பார்த்து வயலுக்கு விதை நெல்லை எடுத்துச்சென்று விதைப்பர். சாரைப்பாம்பு குறுக்கிட்டாலோ, வெறுங் குடத்துடன் மகளிர் முன்வந்திட்டாலோ, வாழ்விழந்த விதவை முற்பட்டாலோ, தும்மினாலோ அது அபசகுனமெனக் கருதுவர். பிள்ளையாருக்குத் தேங்காய் உடைத்து ஆரம்பமாகும் நெல் விதைக்கும் நடவடிக்கையின் போது, இம் மக்களின் பொதுவான பண்பாடாகிய ''சேர்ந்து செய்தல்'' அடிப்படையில் பலருடைய எருமைக்கடாக்கள், எருத்துமாடுகள் ஒருவருடைய வயலில் ஒன்று சேர்ந்து உழும். இவ்வாறு ஒருவருடைய மாடுகள் போதாதவிடத்தோ அல்லது உதவிக்கு மாடுகள் கிடைக்காத விடத்தோ ''வியக்கழை'' (கூலி) க்கு உழவு மாடுகள் அமர்த்தப்படும். விபக்கழைக்கு மாடுகள் வழங்கும் போது மாடுகளுக்கு ஓய்வு கிடைக்கும் என்பதற்காக வெற்றிலை அதிகமாகப் போடுபவர்களுக்கு சந்தர்ப்பம்விரும்பி வழங்கப்படும்.

பயிர்கள் பக்குவமாக இருப்பதற்கும் நோய்களினதும், மிருகங்களினதும், அழிவுகளிலிருந்து பாதுகாக்கப்படுவதற்குமாக நம்பிக்கையான தெய்வத்திற்கு நேர்த்தி வைத்துக் கொள்ளப்படும். பயிர்களுக்கு நோய் வந்துவிட்டால் தெய்வத்துக்கு பொங்கி தீர்த்தமெடுத்து புதூர் நாகதம்பிரான் ஆலயத்தில் பெறப்பட்ட 'மருந்து' அதனுடன் கலந்து பயிர்களுக்குத் தெளித்துவிட்டு வயலுக்குப் போகும் வழியான 'கடப்புக்கு' முள் மரம்

வெட்டிப் போட்டு பின்; மூன்று நாட்களுக்கு வயலுக்குள் போகமாட்டார்கள். இம்மூன்று நாட்களுக்குள் அந்த நோய் குணமடைந்துவிடும் என்ற நம்பிக்கை இருந்தது. இத்துடன் 'முக்காலி' (மூன்று தடிகள் சேர்த்துக் கட்டிய அமைப்பு) கட்டி அதில் தேங்காய் ஒன்று நேர்ந்து வைத்து பின் அந்தத் தேங்காயையும் கொண்டு அமுது செய்து 'காத்த வன்னித் தெய்வத்திற்குப்' படைத்துத் திருப்திப்படுவார்கள். இவ்வாறு தேங்காய் நேர்ந்து வைத்து அமுது சமைக்கும் வரைக்கும் பெண்கள் வயலுக்குள் செல்ல முடியாது. சமைத்த அமுது மாதவிலக்கு வரும் மகளிர் சாப்பிடுதல் கூடாது என்று இவ்விடயம் பெருமதிப்புடன் கையாளப்பட்டது. வயலுக்குள் வரும் மிருகங்களை வேட்டையாடுவதன் மூலம் மிருகங்களிடமிருந்து பயிர்கள் பாதுகாக்கப்பட்டன. வயலுக்குள் மரத்தில் ஏற்றுப் போட்டு அதன் மேல் ஏறியிருந்து ஆனைக்காவல் பார்ப்பர் காவலின் போது ஆறாமீன் மேல்வெள்ளி, இடையங்கால், செட்டிநடி கெடுத்தான் போன்ற வெள்ளிகளின் துணையுடன் நேரம் கணித்துக் கொள்ளப்படும். ஒரு இரவினை இரண்டு சாமங்களாகப் பிரித்து முற்சாமம், பிற்சாமம் என இருவர் முறைப்படி காவல் காத்துக் கொள்வர்.

விளைவு நிலையை எய்திவிட்ட அருவி (பயிர்கள்) 'பரத்தை' மூலம் வெட்டி சூடு வைக்கப்படும். பலர் சேர்ந்து ஒருவருடைய வயல் அருவியை ஆடல், பாடல், களிப்புடன் வெட்டிக் கொள்வதனையே 'பரத்தை' என்று சொல்வார்கள். விரைவாக உரியவருக்கு ஆனந்தமளித்து அரிவியை வெட்டி முடிப்பதற்கு சிந்து, பள்ளு என தாளத்துடன் கூடிய பாடல்கள் பாடப்பட்டு வந்தன. இரசனையுடனும், ஆழ்ந்த கருத்துக்களுடனும் கூடிய இப்பாடல்.

## குருவிப்பள்ளு

*சீருலாவிய காவேரி நாட்டில்*
*சிறக்குஞ் செஞ்நெல் உறந்தின் எண்ணி*
*காருலாவு தினையன் குருவி*
*கரித்த தூக்கணையன் கிளிக் கூட்டம்*
*சேருமாமயில் பட்சி சிறந்து*
*திருந்தி நெஞ்சில் நினைத்து வருமாம்.*

இவ்வாறு பரத்தை வெட்டு நிறைவெய்திய மாலையில் வயலின் உரிமையாளர் தேர்ந்தெடுக்கப்பட்ட கதிர்க்கட்டினை தலையில் வைத்து ஆலாத்தி, கும்மி, குடமூதலுடன் வீட்டுக்கு அழைத்து வரப்படுவார். ஆலாத்தி என்பது வாழ்த்தும் வகையில் மஞ்சள், தீபம் முதலியவற்றினால் உரிமையாளரைச் சுற்றி எடுத்தலாகும்.

**ஆலாத்தும் போது பாடப்படும் பாட்டின் சில வரிகள்:**

*தரு: தெந்தென்னனோ தெனனோ*
*தெனதான் தெந்தனனோ.*

*பாட்டு: ஆல் போல் தழைத்து அறுகது போல் வேரோடி*
*மூங்கில் போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருங்கோ*

**கும்மி குடமூதல் பாட்டின் சில வரிகள்:**

*தரு: தான்னன்ன தானன்னத் தானானே — தன்ன*
*தானன்ன தானன்ன தானானே.*

*பாட்டு: சர்க்கரை மோதகம் தேங்காயும் கொண்டு*
*சன்னதி முன்பாகத் தான்படைத்து*
*முக்குறுனிப் பிள்ளை யாரைவேண்டி*
*முழங்கிச் சோபனம் கொட்டுங்கடி (தானன்ன ...*

சூடு அடித்தல் சோழகக் காற்றின் பின் ஆரம்பமாகும். சூடு அடிக்கும் போது களத்திற்கு நடுவே கட்டை இறுக்கி ஏழு மாடுகள் ஒன்றாகப் பிணைக்கப்படும். கட்டை அருகே அனுபவமிக்க சிறந்த 'கட்டையடி நடையன்,' அல்லது 'பெருநடையன்' என்று (நடையன் - மாடு) அழைக்கப்படும் மாடு தெரிவு செய்து கட்டப்படும். கட்டையிலிருந்து ஏழாவது மாடு வாட்டி நடையன் என்று அழைக்கப்பட்டு பொருத்தமான மாடுகள் தொடுக்கப்பட்டு கதிர்கள் மிதிக்கப்படும். சாய்க்கப்படும் போது மாடுகள் போடும் போல் (சாணம்) இனை பொலிக்கொடியினால் (வைக்கோல்) போலன் (மாடு சாய்த்து சூடு அடிப்பவன்) எந்திக் கொள்வான். இதற்காக விழிப்புடன் கூடிய போலன் தேர்ந்தெடுக்கப்படுவான். இங்கு அடிக்கும் போது நெல்லைக் 'கூரன்' எனவும் நெற்களின் கூட்டம் 'பொலி' எனவும் அழைக்கப்படும். பொலி எடுப்பதற்கு 'வேலைகாரன்தடி' (பொருத்தமான வளைவுள்ள தடி) உபயோகிக்கப்படும்.

**சூடு அடிக்கும் போது பாடப்படும் பாட்டின் சில வரிகள்:**

*பொலி பொலி பொலியன் பொலியப்பா பொலி*
*காலாலும் பொலி வாலாலும் பொலி பொலியப்பா பொலி*
*இந்த நடை நடந்தால் நாளைக்கும் இந்நேரம் செல்லுமப்பா*
*ஊன்றி மிதியனப்பா உங்களுடைய உறுதியுள்ள காலாலே*
*வெள்ளி வெளிச்சமப்பா அங்கே வெண்சாவல் கூவுதப்பா*
*அன்ன நடையழகும் உங்களுடைய அலங்கார வால்வீச்சும்*
*சங்கே முழங்குதப்பா உங்களுடைய சங்கரனார் கோயிலிலே.*

இவ்வாறு பொலியினைத் தூத்துவதற்கு காற்றின் திசையறிந்து இரு முக்காலிகள் கட்டப்படும். இம்முக்காலிகளின் மேல் போலர் ஏறி நின்று கடகம், குல்லம் (சுளகு) மூலமாக நெல்லை தூற்றுவர். இச்சந்தர்ப்பத்தில் கடகம், குல்லம் கவிழ்தல் அபசகுனமாகக் கொள்ளப்படும். சூடு அடிக்கும் போது போலர்கள் மாமிசம் சாப்பிடுதல் ஆகாது. இவர்கள் களத்தின் தெய்வத்தன்மை கெட்டுவிடும் என்பதற்காக சூடு அடிப்பு முடியும் வரைக்கும் வீட்டுக்குள் செல்ல மாட்டார்கள். இதேபோல் பெண்கள் களத்திற்குள் செல்லுதலாகாது. சூடு அடித்தல் சில நாட்களுக்கு தொடரும், ஆகையினால் ஒவ்வொரு நாளும் பெற்றுக் கொள்ளப்படும் நெல் 'பட்டடை' கட்டி (நெல் போடுவதற்காக களத்தில் தயாரிக்கப்படுவது) அதற்குள் பிள்ளையார் தெய்வம் பொலிக்கொடியினால் தயார் செய்து வைத்துப் பின் அதற்குள் நெல் போடப்பட்டு சேகரிக்கப்படும். சூடு அடிப்பு முடிந்ததும் மாட்டு வண்டிலில் நெல் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டு வீட்டில் நெல் இட்டுப் பாதுகாப்பாக வைப்பதற்கென அமைக்கப்பட்டிருக்கும் 'கொம்பரை' (வரிச்சுகளாலும், கொடியாலும் பின்னப்பட்டிருக்கும்) அல்லது வீட்டிற்குள் பரண்மேல் இதற்கெனப் பெரிய அளவில் பனை ஓலையினால் அல்லது பிரம்பினால் இழைக்கப்பட்டிருக்கும் 'கூடை' யில் இட்டு வைக்கப்படும். இவ்வாறு கூடையிலும், கொம்பரையிலும் இடப்படும் நெல் அடுத்த முறை புதிய நெல் வரும் வரைக்கும் இருந்து கொண்டிருக்கும். வேளாண்மையில் ஒருவருக்கு ஒருவர் கடன் கொடுக்கும் போது கடன் பெறுபவர் வெற்றிலை போடுவதைப் பார்த்து எவ்வளவுக் கெவ்வளவு ஒரு வெற்றிலையை சிறிதாகக் கிழித்துப் போடுகின்றாரோ அவ்வளவுக்கு அவருக்குக் கடன் வழங்கலாமெனக் கணிப்பிட்டுக் கொள்வது இன்னொரு சிறப்பான அம்சமாகும்.

வேட்டையாடுவதற்கும் தேன் எடுப்பதற்கும் இங்கு அடர்ந்த பெரும் காடுகள் சாதகமாக இருந்தன. காட்டில் வாழும் மான், மரை, பன்றி, உடும்பு போன்றவற்றினை பயிற்றப்பட்ட வேட்டை நாய்களுடனும், ஆயுதங்களுடனும் 'தாவாடியாக' ப் போய் நின்று வேட்டையாடி வருவர். 'தாவாடி' என்பது 4—10 பேர் வரையில் குழுவாக வேண்டியவற்றுடன் காட்டிற்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்து வேட்டையாடி வருவதனைக் குறிக்கும். வேட்டையாடுவதன் மூலம் கொண்டு வரப்படும் இறைச்சிகள் உறவினர் அயலவர்களுக்கு இலவசமாக வழங்கி மீதி வத்தல் போடப்பட்டு சில நாட்களுக்கு பாதுகாத்து வைத்துப் பயன்படுத்தப்படும். இறைச்சி வகைகளைக் கருக்கல், பொரியல், வேட்டை என பல்வேறு வகையில் சுவையாகப் பதப்படுத்தி உண்டனர்.

பருவ காலத்தில் இம்மக்கள் காட்டிற்குள் சென்று மரங்களில் இருக்கும் தேனைத் தறித்து எடுத்துக் கொள்வர். தேனை எடுத்து வருவதற்கு சுரைக்காயில் குடையப்பட்டுத் தயாரிக்கப்பட்ட 'சுரைக்குடுவை'யைப் பயன்படுத்தினர். இக்குடுவையில் தேனைப் பிழிந்து எடுத்து வருவதுடன் தேன்

வளைதகளை மரக்குழைகளைப் பயன்படுத்தி 'வேடுகட்டி' (ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கிப் பாதுகாப்பாகக் கட்டுதல்) காவு தடியில் இருபக்கமும் கட்டித் தோள்மீது அதனை வைத்து எடுத்து வருவர்.

வன்னிவள நாட்டு மக்களின் உணவு வகைகளையும் அவை பெற்றுக் கொள்ளப்படும் வழிவகைகளையும் அறிந்து கொண்ட நாம் அவர்களின் சமய வழிபாட்டு முறைகளையும், பெருவிழாக்களையும் கொண்டாட்டங் களையும் அவதானிப்போம். இயற்கைக்குப் பயந்தும், இயற்கையின் மூலம் பெறப்படும் நன்மைகளினை நினைந்து நன்றியுணர்வுடனும் இயற்கை வழி பாடு செய்யப்பட்டது. சூரியன், பாம்பு, மரம், நிலம் ஆகியவற்றை வழி பட்டமைக்குச் சான்றுகள் உள. தைப்பொங்கல் கொண்டாட்டமும், வன்னியின் புகழ் பெற்ற புதூர் நாகதம்பிரான் ஆலய வழிபாடும் இங்கு சிறப்பாக இடம் பெற்றுள்ளன. இத்துடன் வற்றாப்பளைக் கண்ணகை அம்மன், கற்கிடங்கு அம்மன், வன்னிவிளாங்குளம் அம்மன் ஆகிய கோயில் களின் மேல் வைத்து தொடர்ந்து கொண்டிருக்கும் நம்பிக்கையினைக் கொண்டு பத்தினி வழிபாட்டின் வரலாற்றுச் சிறப்பினை இப்பகுதிகளில் நாம் அறிந்து கொள்ள முடியும். இப்பகுதி மக்கள் தெய்வந்திற்கு நேர்த்தி வைத்து தூக்குக் காவடி, காவடி, பாற்செம்பு, அங்கப்பிரதிஷ்னை அடிய ழிந்தல் போன்ற வடிவங்களில் நேர்த்திக் கடன்களைத் நீர்த்துக் கொள் வர். தைப்பூச தினத்தில் புதிர் (புதிய நெல்) சாப்பிடுதல் பிதிர்களுக்குப் படைத்தல் ஆகியன சிறப்பாக நடைபெற்றன.

சித்திரைப் புத்தாண்டு, வேளாண்மை அறுவடை முடிவுற்ற காலத்தி லும், வேளாண்மையின் மூலம் பெற்றுக் கொள்ளப்பட்ட விளைவினை அனுபவிக்கும் சிறப்பான காலத்திலும் வருவதனால் இப்பகுதிகளில் இப்புத் தாண்டுக் கொண்டாட்டம் மிகச் சிறப்பாக இருக்கும். புத்தாண்டுக்குரிய முன் ஆயத்தங்கள் முன்னரே செய்து வீடுகள் சாணத்தினால் மெழுகி, அரியதரம், முறுக்கு போன்ற பலகாரங்கள் சுட்டு (தயாரித்து) ப் புத்தாடை அணிந்து பொங்கல் பொங்கி நல்ல முறையில் கொண்டாடப்படும். இத் தினத்தில் உறவினர். சுற்றத்தார் வீடுகளுக்குச் சென்று வருஷம் கழித்து உறவைப்பலப்படுத்திச் சந்தோஷத்தினைப் பகிர்ந்து கொள்வதுடன் கை விஷேசமும் பொருத்தமானவர்களிடம் பெற்றுக் கொள்வர். இக்காலத்தில் வார் ஓட்டம், கிளித்தட்டு, மகுடி, போர்த்தேங்காய் உடைத்தல் போன்ற பல வீர விளையாட்டுக்களும் விளையாடப்பட்டு வந்தன. புத்தாண்டில் ஒரு சிறப்பான அம்சமாக இக்காலத்தில் ஊஞ்சல் கட்டி ஆடுதலைக் குறிப் பிட முடியும். ஒவ்வொரு வீடுகளிலும் பெருமரக் கொப்புக்களில் ஊஞ்சல் கட்டி ஆண்கள் பகலிலும், பெண்கள் இரவிலுமாகப் பாடலுன் இனிமை யாக ஆடி வந்தனர்.

பாட்டு: திருவளர்ச் செல்வ நல்ல சன்னிதி வாழும் எங்கள்
தேவசிகாமணி ஆகிய முருகனைத் தேடி ஊஞ்சல் இசை பாட.
(தூண தூண தணனே......)

*கரிய மதயானை தும்பி முகவனேயுந்தன்*
*கழலிணைத் துணையிரு பதமலர் அருள்புரி*
*கந்தர் ஊஞ்சல் இசை பாட*

*(தனதன தனனே......)*

*வாருமடி பெண்டுகளே நாங்கள் இருபேரும்*
*வந்த சிவராத்திரியை இந்த நடையேற்று*
*கடற்கரையில் நடைபரவி நடக்க முடியாது*
*கந்தனது கண்ணுறக்கம் பார்க்க முடியாது.*

கோலாட்டம் இன்னொரு சிறப்பான அம்சமாகும். புத்தாண்டு தினத்திலிருந்து ஒவ்வொரு வீடுகளுக்கும் குழுக்களாகச் சென்று கோலாட்டம் அடித்து மகிழ்வது மரபாக இருந்து வந்தது. வன்னி கிராமிய பண்புகளுக்கும், கலைகளுக்கும் பெயர் பெற்ற நிலம். கிராமியக் கலைகளை வளர்த்த சிறப்பு இந்நிலத்திற்கு உண்டு. சித்திரை தொடக்கம் ஆவணி வரையான காலம் இங்கு ஓய்வு காலமாகவே காணப்பட்டது. இக்காலத்தில் கிராமியக் கலைகள் பேணப்பட்டு, வளர்க்கப்பட்டு வந்தன.

திருவிழாக்கள் சிறப்பாகச் செய்யப்படும். இரவிரவாக வன்னியின் பெருமைமிக்க நாட்டுக் கூத்துக்கள் ஆடப்படும். கோவலன், வள்ளி திருமணம் காத்தவராயன், காணன்கூத்து ஆகிய நாட்டுக் கூத்துக்களுக்குப் பரம்பரை பரம்பரையாக மரபு வழி அண்ணாவிமார்கள் இருந்து வந்தனர். வெள்ளு டுப்புப் போடப்பட்டு (வெள்ளோட்டம் பார்க்கப்பட்டு) வட்டக்களரி அமைத்து தீப்பந்த வெளிச்சத்தில் உடுக்கு மத்தளம் அடித்து, விடியும் வரை இரவிரவாக ஆடப்படும். இவ்வாறான நாட்டுக்கூத்துக்களில் ஆண்கள் மட்டுமே கலந்து கொள்வர். மக்களும் நித்திரை செய்யாது இரசனையுடன் விடியும் வரை பார்த்து இன்புறுவர். நாட்டுக் கூத்துக்கள் தெய்வத்திற்கு நேர்த்திக் கடனைத் தீர்த்துக் கொள்வதற்கும் மழை வேண்டியும் ஆடப்படுவதும் உண்டு. பெண்கள் சிறுவர்கள் விடுகதை கூறல், உபகதை கூறுதல் ஆகிய கலைகளைப் பொழுது போக்காகக் கொண்டிருந்தனர். இன்னும் பல நாட்டார் பாடல்களும் பாடப்பட்டு வந்திருக்கின்றன. தாலாட்டு, ஒப்பாரி, காதற் பாடல்கள் இவற்றில் முக்கியமானவையாகும்.

கரையோரப்பிரதேச மக்களுக்கு நெல் கொண்டு சென்று கொடுத்து கருவாடு பெற்றுக் கொள்ளுதல், முருங்கைக்காய் கொடுத்து கருவாடு. தேங்காய் பெற்றுக்கொள்ளுதல், தேன் நெய் கொடுத்து ஆயுதங்கள் பெற்றுக்கொள்ளுதல் ஆகிய பண்டமாற்று நடவடிக்கைகளும் இருந்து வந்துள்ளன. கடந்த காலங்களில் இம்மக்கள் ஒன்றரை சத காசினை ஒரு 'துட்டு' என்றும் நான்கு துட்டுக்களை (6 சதம்) ஒரு 'பணம்' என்றும், அழைத்து அதற்

கேற்பவே கையாண்டு வந்தனர். ஆண்கள் தலை வளர்த்து குடுமி கட்டிக் கொள்ளுதலும். காதுகளுக்கு கடுக்கன் அணிந்து கொள்ளுதலும் மற்று மொரு பண்பாட்டு அம்சமாக இருந்து வந்துள்ளன.

யாழ்ப்பாணத்துடன் ஏற்பட்ட தொடர்பு இப்பிரதேசத்தில் தென்னிந்திய மக்களின் வருகையுட்பட காலத்துக்குக் காலம் அன்னியர்களின் வருகை அன்னிய ஆட்சி வணிகத் தொடர்புகள் மற்றும் நவீன அறிமுகங்களும் வன்னியின் தனித்துவப் பண்பாடுகளை மாற்றங்களுக்கு உள்ளாக்கத் தொடங்கின. கிராமியத் தன்மைகள் மாறத் தொடங்கின. வன்னி மக்களின் அப்போதிருந்த குதூகலமும், செல்வமும் மருவி வருகின்றன. பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவலகலா வகையினாலே எனினும் கிராமியக் கலைகளும், நாட்டுக் கூத்துக்களும் தொடர்ந்து வளர்க்கப்படுவதும், பேணப்படுவதும் வன்னி மக்கள் உட்பட அனைத்து தமிழ் மக்களினதும் கடமையாகும். ஆனால் இவை முக்கியத்துவம் கொடுத்துத் திட்டமிட்டு வளர்க்கப்படுதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆதலால் கிராமிய விழுமியங்களான கிராமியக் கலைகளையும், நாட்டுக் கூத்துக்களையும் அழிந்து விடாமல் வளர்த்து வருதற்கு தமிழ் மக்கள் அனைவரும் கங்கணம் கட்டிக் கொள்வோம்.

□ □ □ □

**புலிக்கொடியேற்றம்**

பழங்காலச் சோழர் குலப் பெருமையெல்லாம் தன் பெருமையாக்கிக் கொண்டவன் கரிகால் சோழன் என்னும் திருமாவளவன். அடலேறு போன்ற அவ்வீரன் வட நாட்டின் மேற் படையெடுத்தான்; தடுப்பார் எவருமின்றி, இமயமலையை அடுத்தான்; விண்ணளாவிய அம் மலையை அண்ணாந்து நோக்கினான்; தன்வேகம் தடுத்தாண்ட அவ் விலங்கலின் மீது சோழ நாட்டு வேங்கைக் கொடியை ஏற்றினான், அவன் பெருமையைச் சிலப்பதிகாரம் பாடிற்று.

வெற்றி வீரனாகத் தமிழ் நாட்டை நோக்கித் திரும்பி வரும்பொழுது திருமாவளவனை வச்சிர நாட்டு மன்னன் வரவேற்று முத்துப் பந்தலைத் திறையாக அளித்தான். மகதநாட்டரசன் தடுத்துப் போர்புரிந்து தோற்றான்; எட்டுத் திசையும் புகழ் பெற்ற வளவனுக்குப் பட்டிமண்டபத்தைத் திறையாக இட்டு வணங்கினான். அவந்தி நாட்டு அரசன் முன்னமே நண்பனாதலின், மனம் உவந்த தமிழ் மன்னனை வரவேற்றுத் தோரண வாயில் ஒன்று பரிசாகத் தந்தான். பொன்னாலும் மணியாலும் அன்னார் மூவரும் புனைந்து அளித்த அரும் பரிசுகள் பூம்புகார் நகரின் சித்திர மாளிகையில் சிறந்த காட்சிப் பொருள்களாக அமைந்தன. அவற்றைக் கண்டு விம்மிதம் உற்றனர் வீரர் எல்லாம்.

— ''தமிழர் வீரம்'' ரா.பி. சேதுப்பிள்ளை.

உருவகம்

எங்குதான் ஆனந்தம் இல்லை!

ஆகாய வெளியிலும் மண்ணிலும் நீரிலும், எங்குதான் இன்ப அலைகளின் வீச்சுக்கள் இல்லை!

கரையிலே நின்று கடலின் அலைகளைப் பார்ப்பவனுக்கு அதன்வெளி மோதலும் புரளலும் தெரியலாம். எட்ட நின்று அவன் இன்பத்தை நுகர முயலலாம். ஆனால் முழுமை இன்னும் ஆழத்தில் உள்ளது!

இவ்விதம் அகன்று ஆழ்ந்த அந்தக் கடலிலே — அதன் அடித்தளநீரிலே- அங்குள்ள தரையின் பச்சைத் தாவரங்களில் பட்டும் படாமலும் புரண்டு விளையாடிக் கொண்டிருந்த அந்தச் சிறுமீன் தன் முழுவாழ்வைக் கண்டு கொண்டிருந்தது.

# பட்டறிவு



நாக. பத்மநாதன்

அந்த அடித்தள நீரிலே வீழ்ந்த வெயிலின் கதிர்கள் தெரிந்த ஒளி யாகி நின்ற போது —

இன்ப அழகு எங்குதான் இல்லை என்பது மேலும் புலனாயிற்று!

ஆனால் பொழுது எதையும் மாற்றவும் மறைக்கவும் — மறைந்ததைப் புதுவடிவில் ஆக்கவும் — தயங்குவதில்லை

மீனின் இன்பக் களிப்பு அங்கு ஓர் எதிர் ஓசை எழுந்த போது இடை நிறுத்தம் பெற்றது. துள்ளி விளையாடிய உல்லாச மீன் ஒரு கணம் அசை யாமல் நின்றது. அதன் புலன்கள் தூண்டப்பட்டன; இதயம் அடித்துக் கொண்டது. ஆமாம் —

ஒரு பெரிய மீன் வருகிறது. தன்னை விழுங்க வருகிறது, என்ன அநீதி! கொடுமை!

ஆனால் ஆபத்தின் அறிவிப்பு அச்சுறுத்தலோடு நிற்பதில்லை. அது விழிப்பையும் தருகிறது. வேகத்தைப் புகுத்தி விடுகிறது. அந்தச் சிறிய மீன் இப்போது எங்கே?

கடலின் அடித்தளத் தரையிலும் குகை போன்ற கற்பாறைகள் உள.

அவ்வித குகை ஒன்றின் மிக ஒடுங்கிய வாயிலின் உள்ளே சிறுமீன் விரைந்து விட்டது; என்ன விரைவு! எவ்வளவு பாதுகாப்பு! அங்கும் நிரம் பிய கடல நீர்தான்!

மீண்டும் ஆறுதல். நேரம் செல்லச் செல்லக் களிப்பு! அதனுள் அசைந்து புரண்டு நீச்சல்!

நேரம் செல்கிறது.
பெரிய மீன் போய்விட்டது.

தப்பினேன் என்ற களிப்போடு தான் நுழைந்த உள்வாயில் வழியே சிறு மீன் வெளியில் வரும்போது —

அங்கு எதிர்பாராத இன்னொன்று! என்ன?
எதுவும் அறியாத குஞ்சுமீன் ஒன்று உள்ளே நுழைய வருகிறது!
சிறு மீனின் அகன்ற வாய் அந்தக் குஞ்சு மீனை வரவேற்கிறது. வாயின் உள்ளே குஞ்சுமீன்!
—ஆனால ஏனோ?

தனது திறந்த வாயை மூடாது சிறுமீன் அப்படியே நிற்கிறது! அதன் விரிவுச்சூள் வந்த குஞ்சு திணறி அடித்துக்கொண்டு வெளியே ஓடுகிறது!

அதன் பின்னரே சிறு மீனின் வாய் அமைதியாய் மூடுகிறது. தான் உண் டதிலும் கூடிய இன்பம் உள்ளே பிறக்கிறது! தப்பிய குஞ்சைப் பார்த்த கண்கள் புது ஒளி பெறுகின்றன! அதில் களிப்பு மட்டுமல்ல, கனிவுங்கூட! சூழல் எங்கும் அதே ஒளி! ◻◻

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழியவே !
வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண் மொழி — வாழியவே !

— பாரதியார்

## எம் சிந்தை கவர்ந்த விழா முத்தமிழ் விழா

தமிழே வாழ்க தாயே வாழ்க!
அமிழ்தே வாழ்க அன்பே வாழ்க!
கமழக் கமழக் கனிந்த கனியே
அமைந்த வாழ்வின் அழகே வாழ்க!

— பாரதிதாசன்

# முத்தமிழ் விழா சிறக்க வாழ்த்துகின்றோம்

## எதிர்ப்பக்க ஓவியம்

ஓவியர் ஞானகுரு

வேழம் விழுந்திட வேலை எறிந்தவன்
வீரன் பழந்தமிழன்! — தமிழ்
ஈழம் நிமிர்ந்திட 'தாங்கி' தகர்த்தவன்
எங்கள் இளந்தமிழன்!

# எம்தாயைப் போற்றுவோம்

தா. இராமலிங்கம்



எம் தாயைப் போற்றுவோம்
எம் தாயைப் போற்றுவோம்
எம் தாயின் மகிமையைப்
பாடி மகிழுவோம்.

ஆன உணவு குடிதண்ணீர் இன்றியே
கிள்ளித் தெளித்திடும் எருவினை உட்கொண்டு
தன்னை ஒறுத்தவள் எம்மை வளர்க்கிறாள்.
கரற் என்ன பீற் என்ன
கோவா கிழங்கென்ன
தன் சதையைப் பிழிந்தவள்
திரட்டித் தருகிறாள்.

உழுந்தென்ன எள்ளென்ன
கௌபீ பயறென்ன
தன் ஊனை உருக்கியே
உருட்டித் தருகிறாள்.

நெற்பயிர் யாவும்
நிறைமணி தந்திட
பல்லைக் கடித்துத்தன்
பலமெல்லாம் சேர்க்கிறாள்.

ஓசோன் கவசத்தில்
ஓட்டை விழுந்ததினால்
கொடுங்கதிர்கள் உட்புகுந்து
சுட்டெரிக்க
வானம் முகில் வற்றி
வாய் வரண்டு கிடக்கின்றாள்.

மாரியிலே மிஞ்சி வரும்
மழை வெள்ளத்தை
தேக்கி நீர் சேகரிக்கும்
துரவு குளம் யாவினையும்
தூர விட்டு
கடல் நீரைக் குடியென்று
விட்டு விட்டோம்.
உவர் நீரைக் குடித்து அவள்
உயிர் வாழ்கின்றாள்.

எம் தாயைப் பாருங்கள்
எம் தாயைப் போற்றுங்கள்
எம் தாயின் மகிமையைப் பாடி மகிழுங்கள். □□



# ஈழத்தில் தமிழர் கலைப் பாரம்பரியம்

## வெண்கலப் படிமங்கள் பற்றிய ஒரு வரலாற்று நோக்கு

செல்லையா கிருஷ்ணராசா

**பிரச்சினைக்கான அறிமுகம் :**

ஈழம் தனித்துவமான பண்பாட்டுத் தோற்றப்பாட்டிற்குரிய பகைப்புலமாக நெடுங்காலமாகவே விளங்கி வந்திருக்கின்றது. பண்பாட்டு வருகைகளுக்கு மத்தியிலும் ஈழத்துக்குரிய பண்பாட்டு மரபு ஒன்று

வளர்ச்சி பெற்று வந்துள்ளமையை சான்றுகள் வெளிப்படுத்தி நிற்கின்றன. இருந்தும் ஈழப்பண்பாடு என்பது தீவகப் பண்புக்குரியதாக, சமுத்திரவியல் வழிவந்த செல்வாக்கினைப் பிரதிபலிப்பதாக அமைந்ததாகக் கொள்ளலாம். ஈழத்து மக்களது வாழ்வு பலநிலைகளிலும், பலமுனைகளிலும் மிகவும் அண்மித்த நிலையில் சமுத்திரவியல் வளங்களுடனும், ஜீவனோபாயத்துடனும் தவிர்க்க முடியாதபடி இணைக்கப்பட்டிருந்தது. இச்சூழலே இங்கு தனித்துவமான கலைமரபுகள் வளர்ச்சி பெறுவதற்கும் காரணமாக அமைந்தது.

ஈழத்தில் கலைமரபுகளின் தோற்றமும் வளர்ச்சியுமானது காலஓட்டத்தில் இந்தியத் துணைக் கண்டத்தில், சிறப்பாக மிகவும் அண்மித்த தரைப் பரப்பான தென்னிந்தியத் தீபகற்பத்தில் ஏற்பட்டுக்கொண்ட மாற்றங்களுடன் பக்கம் பக்கமாக இணைந்துக் கொண்டுமிருந்தது. இதனால் இங்கு தனித்துவமான வகையில் ஏற்கனவே வடிவமைத்துக் கொண்டிருந்த கலைமரபுகள் மேலும் வெளியே இருந்து ஏற்பட்டிருந்த மாற்றங்களின் தாக்கங்களினால் கலப்புற வேண்டிய நிலையை எய்தியது. இப்பண்பாட்டுக் கலப்பானது *(Cultural Fusion)* ஒரு வரையறுக்கப்பட்ட (தீவுப்) பரப்பிற்குள்ளோ அல்லது குறித்த இன - மதவடிப்படையிலோ தனித்தனியான முறையில் ஏற்பட்டிருக்கவில்லை. அந்த வகையில் குறிப்பிட்ட பண்பாட்டு வடிவமானது (இன்னொரு நிலையில்) அதே மையத்தில் பிறிதொரு பண்பாட்டு மரபினால் கலப்புறச் செய்யப்பட்டு, முன்னையது கைவிடப்பட்டு அல்லது அதனுடைய பிரதான பண்பாட்டு விழுமியங்களை உள்வாங்கிய நிலையில் பிந்தியபண்பாட்டு வடிவங்கள் செல்வாக்குச் செலுத்திய தன்மையையே காணமுடிகிறது. ஈழத்தின் பல மையங்களில் வெளிப்பட்டிருக்கும் பண்பாட்டு எச்சங்களை ஆதாரம் காட்டி இக்கருதுகோளினை நன்கு நிறுவமுடியும். பெருநிலப்பரப்பொன்றினைக் கொண்டிராத, தீவக நிலைக்குரிய செயற்பாடுகளே இதற்குரிய அடிப்படைக் காரணமாகின்றன. இவையே இத்தீவில் ஓர் இனத்தினருக்குரிய அல்லது மதத்தினருக்குரிய பண்பாட்டுவடிவங்கள் ஒரே மையத்தில் தொடர்ச்சியாகக் கிடைக்கப் பெறாமைக்குரிய காரணமும் ஆகின்றன. இந்த தமிழ் - சிங்களப் பண்பாட்டுக் கலைக்கூறுகளை வேறுபடுத்திப் பார்க்க முடியாதவாறு மத்தியகாலம் வரைக்குமாவது இந்து - பௌத்தக் கலைமரபுகள் இரண்டும் ஒன்றில் ஒன்று கலந்தும் அல்லது ஒன்றுவிட்டு மற்றொன்றுமாக வளர்ச்சிபெற்றுச் சென்றுள்ள தன்மையைக் காண முடிகிறது. இத்தீவின் எவ்விடத்தினைப் பண்பாட்டு ஆய்வுக்கு எடுத்துக் கொண்டாலும் இப் பொதுத்தன்மையைப் பேதமின்றிக் கண்டு கொள்ள முடிகிறது. இது தாயகக் கோட்பாட்டு நோக்கில் ஓர் இனத்தின் பண்பாட்டு வெளிப்பாடுகளை ஆராயப் புகும் கலை ஆர்வலர்க்கும் ஆய்வாளர்களுக்கும் பிரதானமான சவாலாகவும் அமைகின்றது. இதுவே ஈழத்துப் பண்பாட்டுப் பரப்பில் தமிழரின் தொடர்ச்சியான கலைமரபினை இனங்காணும் நோக்கில் மேற் கொள்ளப்படும் முயற்சிகளுக்கும் பிரதானமான தடைக்கல்லாகின்றது. இவ்வாய்வுக் கட்டுரையில் ஈழத்தில் வெண்கலப் படிமங்கள் ஊடாக அறியப்படும் 'தமிழர் கலைமரபு' பற்றிய பிரச்சினை எடுத்து நோக்கப்படுகின்றது.

## ஈழத்துக் கலைமரபு பற்றிய சர்ச்சைகள்

ஈழத்து வரலாற்று எழுத்தியலில் புதிய முன்னேற்றங்கள் ஏற்பட்டுக் கொள்கின்ற இக்காலகட்டத்தில், அதன் கலைவரலாறு தொடர்பாகவும் புதிய நோக்குகளும், புதிய அணுகுமுறைகளும் உருவாகிக் கொண்டு வருவதனை அவதானிக்க முடிகிறது. இத்தீவில் ஆதிகாலச் சமூகம் உருவாக்கியிருந்த கலைமரபுகள் பற்றி ஆராய்ந்த கலைவர

லாற்று ஆசிரியர்கள் இரண்டு நிலைகளில் நின்று தமது முடிபுகளை முன்வைத்துள்ளனர். முதலாவது பிரிவினர் ஈழத்துக் கலை மரபின் தோற்றமுட்பட, கலையம்சங்கள் பலவும் வடஇந்தியாவுடன் இத்தீவு கொண்டிருந்த உறவுகளின் அடிப்படையில் இங்கு கொண்டுவரப்பட்டு, வளர்த்தெடுக்கப்பட்டன எனவும் இரண்டாவது பிரிவினர் மிக அண்மித்ததாக அமைந்த தென்னிந்தியாவுடன் ஈழம் கொண்டிருந்த பன்முனைப்பட்ட உறவுநிலைகளினாலேயே இத்தீவின் கலை மரபுகள் உருவாக்கபபட்டன எனவும் வாதிடுகின்றனர். வடஇந்தியாவுடனான தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டே ஈழத்துக் கலையூற்றுக்கள் மடைதிறந்தன என வாதிடுவோர்களுள் **பரணவிதான** மிக முக்கியமானவராக உள்ளார். இவர் ஈழத்துக் கலைவளர்ச்சியை வட இந்திய ஆரியவர்த்கத்துடன் தொடர்புபடுத்தி ஈழத்துக் கலையூற்றுக்கள் ஆரியமயமாக்கலுடனேயே வளர்த்தெடுக்கப்பட்டன என வாதிடுகின்றார். **கொட்கும்புர** போன்ற வரலாற்று ஆசிரியர்கள் ஈழத்துக் கலையூற்றுக்களானவை தென்னிந்தியாவூடாகவே வந்தடையப்பட்ட காரணத்தினால் தென்னிந்தியச் செல்வாக்கிற்குட்பட்டவையான கலை மரபுகளே இங்கு வளர்ச்சி பெற்றன எனக்குறிப்பிடுகின்றனர். குறிப்பாக ஆந்திரக் கலை மரபுகளின் ஊடாகவே ஈழத்துக் கலையூற்றுக்கள் மெருகூட்டப்பட்டு புத்தூக்கம் பெற்றன என்பது இவர்களது வாதமாகும்.

ஆனால் மிகவும் அண்மைக் காலத்தில் ஈழத்துக்கேயுரிய தனித்துவமான கலைமரபுகளின் அடியாகத் தோற்றம்பெற்று பெருவளர்ச்சி கண்ட கலைப் பாரம்பரியத்தினை அடையாளம் கண்டு கொண்ட வகையில் 'சேனக **பண்டாரநாயக்கா** போன்ற கலைத்துறை ஆர்வம் மிக்க ஆய்வாளர்கள் சமூகமானிட வியல் நோக்கில் ஈழத்துக்கலை வளர்ச்சி பற்றி ஆராய்ந்து வருவது குறிப்பிடத் தக்கதாகும். சேனக பண்டாரநாயக்கா ஈழத்துக் கலைவளர்ச்சியை இத்தீவுக்கேயுரித்தான, தனித்துவமான ஒரம்சமாக எடுத்துக்காட்டி அயல்நாடான இந்தியா எவ்விதத்திலும் இங்கு கலைமரபு உருவாவதற்கு அடியிட்டுக் கொடுக்கவில்லை என வாதிடுகின்றார். இம்மூன்று பிரிவினருமே "சிங்களக் கலை மரபு" என்ற ஒன்றினை தனித்துவமாக இனங்காணவேண்டி தத்தமது வாதங்களைக் கொண்டு சென்றிருப்பதனைக் காணலாம்.

இந்நிலையில் பௌத்தமதச் செல்வாக்கிற்குட்பட்ட கலைவடிவங்கள் யாவும் "சிங்களக் கலைமரபு" எனப்பெயரிடப்பட்டு, ஈழத்தில் பௌத்த சிங்களக் கலை மரபு மட்டுமே தோற்றம் பெற்று வளர்ச்சியடைந்திருந்தது என எடுத்துக்காட்ட முற்பட்டுள்ளனர். மிகவும் அருமையாகவே பௌத்த மதத் தொடர்பற்ற கலைவடிவங்களைப் பௌராணிக நிலைக்குரியதாகத் திரித்துக் காட்டவும் முயன்றுள்ளனர். இந்து மதச் செல்வாக்கின் நிலைகளைக் கலைமரபுகள் வெளிப்படுத்தி நிற்கின்ற தன்மைகள் பெருமளவுக்கு மறைக்கப்பட்டோ அல்லது அதிமுக்கியத்துவம் கொடுக்காது பின்தள்ளி வைக்கப்படுவதன் மூலமோ ஈழத்துத் தமிழர் கலைப் பாரம்பரியம்" அல்லது 'திராவிடர் கலை மரபு' என்பது இத்தீவின் பண்பாட்டு வரலாற்றில் தனித்துவத்தினை ஏற்படுத்த முடியாது எனக்கருதப்பட்டபோதும் இவ்வாறான பண்பாட்டு ஆய்வுச்சிக்கல்கள் மத்தியிலும் ஈழத் தமிழர் வளர்த்தெடுத்த கலை மரபுகளுள் ஒரு பகுதியான வெண்கலப்படிமக் கலைமரபு பற்றிக் கிடைக்கப்பெற்ற சான்றாதாரங்களுடன் இங்கே ஆராய வேண்டிய அவசியம் இப்பொழுது உணரப்பட்டுள்ளது.

## வெண்கலப் படிமங்கள் கிடைத்த மையங்கள்:

இலங்கையில் கடந்த நூற்றண்டின் இறுதியில் தொடக்கி வைக்கப்பட்ட மேலாய்வு

களின்தும், அகழ்வாய்வுகளினதும் விளைவாகவும், தற்செயலாக வெளிவந்த கலைக் கருவூலங்கள் காரணமாகவும், தனிப்பட்டோர்களது அரும் பொருட் சேகரிப்பு முயற்சி காரணமாகவும் ஓரளவிற்காவது ஈழத்தில் தமிழர் பங்களிப்பினை வெளிப்படுத்தக் கூடியளவிற்கு வெண்கலப் படிமங்கள் கிடைக்கப்பெற்றும், கிடைத்த வண்ணமும் உள்ளன. இத்தகைய வெண்கலப் படிமங்கள் பெருமளவிற்கு இந்து விக்கிரஹவியற் கோட்பாட்டு நெறிமுறையின் கண் நின்று உருவாக்கப்பட்டவையாகவே காணப்படுவது குறிப்பிடத்தக்கது. எண்ணிக்கையின் அடிப்படையில் அதிகமாகக் கிடைத்த வண்ணம் இருப்பவை பார்வதியின் வெண்கலச் சிற்பங்களாகும். இதுவரையில் 20க்கும் மேற்பட்டவை இத்தொகுதியிற் கிடைத்துள்ளன. இதற்கடுத்த நிலையில் குறிப்பிடத்தக்களவில் கிடைத்திருக்கும் வெண்கலச் சிற்பங்கள் சிவனது நடராச வடிவங்களாகும். கிடைத்துள்ள 07 நடராச வெண்கலங்களுள் 05 மட்டும் திருவாசியுடன் காணப்படுகின்றன. நடராச படிமங்களைவிட சிவனது படிமங்களும், சோமாஸ்கந்த மூர்த்திக்குரிய படிமங்களும் இத்தீவில் கிடைத்திருப்பது தமிழர் வளர்த்தெடுத்த படிமக் கலை மரபுக்கு மேலும் சான்று சேர்ப்பதாகவுள்ளன. இவை அனைத்துக்கும் மேலாக சைவ நாயன்மார்களது வெண்கலப்படிமங்கள் 08 உம், 03 விநாயகர் படிமங்களும், காரைக்காலம்மையாரது படிமம் ஒன்றுமாக கிடைத்துள்ள மாதிரிகள் ஈழத்துக்கேயுரித்தான வெண்கலப் படிமக் கலையின் தனித்துவமான கூறுகளை அடையாளம் காண்பதற்கு வழிவகுப்பதாகவுள்ளன. மிக அண்மையில் கிடைத்துள்ள வெண்கலப் படிமமான சிவனது இன்னொரு வடிவம் அர்த்தநாரீசுவரர் சிலையானது ஈழத்தமிழர் கைவண்ணத்திலிருந்து உருவானது என்பதனைத் தென்னிலங்கை ஆய்வாளர்களே ஏற்றுக்கொண்டுமுள்ளனர். இவை அனைத்துக்கும் மேலாக நிற்கின்ற தோற்றத்துடன் கிடைத்துள்ள ஸ்ரீ விஷ்ணுவின் வெண்கலப் படிமங்கள் ஈழத்துக்கேயுரிய அலங்காரக் கூறுகளினால் ஆனவை என்பதனையும் இவ்வறிஞர் உலகம் ஏற்றுக் கொண்டுள்ளது. இவ்வாறு 65 க்கும் மேற்பட்ட எண்ணிக்கையில் கிடைத்துள்ள இந்து வெண்கலப் படிமங்களுள் செம்பாகத்திற்கும் மேற்பட்டவை ஈழத்துத் தமிழ் மரபின் தோற்ற முறையைச் சுட்டி நிற்கின்றன.

மேலே குறிப்பிடப்பட்ட வெண்கலப் படிமங்கள்யாவும் கிடைத்துள்ள மையங்களாகப் பின்வருவன காணப்படுகின்றன. 'ஜனநாதமங்களம்' என்ற தமிழ்ப் பெயரால் புராதன காலத்தில் அழைக்கப்பட்ட பொலனறுவையில் இருந்தே மிகக் கூடுதலான வெண்கலப்படிமங்கள் அகழ்வாய்வுகளின் மூலம் பெற்றுக்கொள்ளப்பட்டன. இப்பண்பாட்டு மையத்திலிருந்து ஐந்து சிவன் கோவிலும், ஏழு விஷ்ணு கோவில்களும் ஒரு காளிகோவிலும் அகழ்வாய்வின் அடிப்படையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அடுத்த நிலையில் காலத்தால் முற்பட்ட வெண்கலப்படிமங்களைக் கொண்டிருந்த மையமாக அனுராதபுரம் விளங்குகின்றது. இங்கிருந்தும் இந்துக் கோவில்கள் பலவற்றின் அழிபாடுகள் தொல்லியல் அகழ்வின் பொழுது வெளிக் கொணரப்பட்டன. தற்பொழுது பதவியா என்றழைக்கப்படும் ஸ்ரீ பதிக்கிராமத்திலிருந்து பல பார்வதி வெண்கலச் சிற்பங்கள் வெளிக் கொணரப்பட்டன. ஸ்ரீ பார்வதிபுரம் எனவும் பதவியா அழைக்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது. இங்கிருந்தே நந்திச் சின்னம் (சேதுவடிவம்) பொறித்த செம்பினாலான முத்திரைச் சாசனம் கண்டுபிடிக்கப்பட்டது. இது தமிழர் பாரம்பரிய வரலாற்றுக்கு ஒரு திறவுகோல் எனலாம். திருகோணமலையில் இருந்து தற்செயலாகக் கிடைக்கப்பெற்ற தங்கம் கலந்த வெண்கல விக்கிரஹங்கள்

ஈழத்தமிழர் படிமக்கலைகோர் உரைகல் என லாம். திருக்கேதீஷ்வரத்திலிருந்தும் யாழ்ப் பாணத்திலிருந்தும் பெற்றுக்கொள்ளப்பட்ட வெண்கலப்படிமங்கள் வார்ப்புக்கலையின் பிராந்திய வேறுபாடுகளை அல்லது பிராந் தியத்திற்குரிய தனித்துவமான பண்புகளை விளக்கி நிற்கின்றன. தற்பொழுது கலாசார முக்கோணத்திட்டத்தின் கீழ் யூனெஸ்கோ வின் உதவியுடன் மேற்கொள்ளப்பட்டு வரும் பண்பாட்டு ஆய்வுகளின்போது குறிப்பிடத் தக்களவிலான இந்து வெண்கலச் சிற்பங்கள் கிடைத்து வருகின்றன. முழுக்க முழுக்க இந்துப்பண்பாட்டுச் சூழலின் அடியாகவே அவை கிடைத்து வருகின்றன. கண்டி, அனுராதபுரம், பொலனறுவை ஆகிய மூன்று மையங்களையும் இணைக்கும் ஒரு முக்கோ ணப் பரப்பிற்குள்ளேயே இவ்வாய்வுத்திட் டம் மேற்கொள்ளப்பட்டுவருவது குறிப்பிடத் தக்கது.

## பார்வதி வெண்கலப் படிமங்கள்காட்டும் ஈழத்துக் கலைமரபு:

ஈழத்துத் தமிழர் கலைமரபொன்றினை மிகவும் இலகுவாக அடையாளம் காணத் தக்க வகையில் எமக்குக் கிடைத்துள்ள மிகச்சிறந்த சான்றாதாரங்களாக பார்வதி வெண்கலப்படிமங்கள் விளங்குகின்றன. கொழும்பில் உள்ள தேசிய அரும்பொருட் காட்சிச்சாலையிலும் அனுராதபுரத்திலுள்ள தேசிய நூதனசாலையிலும் பொலனறுவை யில் உள்ள கலாசார முக்கோணத்திட்ட அலுவலகத்திலும் பாதுகாத்து வைக்கப் பட்டிருக்கும் இப்பார்வதி வெண்கலப்படி மங்கள் இதுவரையில் நுண்கலை நின்ற ஆய்வுநெறிமுறைக்குட்படுத்தப்படாத நிலை யில் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன.

20 க்கும் மேற்பட்ட பார்வதி வெண் கலப்படிமங்களில் இரண்டு படிமங்கள் மாத் திரம் இருக்கின்ற நிலையில் உருவாக்கப் பட்டுள்ளனவாகும். மிகுதியானவை நிற்கின்ற நிலையில் சமபங்க, திரிபங்க நிலைகளுக்குட் படுத்தப்பட்ட முறையில் உருவாக்கப்பட் டுள்ளன. நிற்கின்ற பார்வதி வெண்கலப் படிமங்கள் யாவும் முழுமையாக மலர்ந்த தாமரைப்பீடத்தின் மீது உருவாக்கப்பட் டுள்ளன. தென்னிந்திய கலைவரலாற்றா சிரியர்கள் உட்பட இதுவரைக்கும் ஈழத்திற் கிடைத்த நடராச வெண்கலப்படிமங்களைப் பற்றியே பெருமளவுக்குத்தமது குறிப்புக் களையும், வர்ணனைகளையும் கொடுத் தனரேயொழிய பார்வதி வெண்கலப்படிமங் களைப் பற்றிய விரிவான ஆய்வில் ஈடுபட்ட தாகத் தெரியவில்லை. குறிப்பிட்ட பிராந் தியத்தின் பண்பாட்டு வெளிப்பாட்டினைப் ''பெண்மை'' எவ்வாறு வெளிக்கொணரத் தக்க ஊடகமாக விளங்குகின்றதோ அதனை யொப்ப இத்தாய்த் தெய்வ உருவங்களும் குறிப்பிட்ட இனத்தினதும், மதத்தினதும் இயல்பான கலைமரபுகளை வெளிக்கொண ரும் ஊடகமாக விளங்குகின்றன எனலாம். அந்தவகையில் ஈழத்தின் புராதன காலப் பண்பாட்டு வளர்ச்சியில் பார்வதி வெண் கலப்படிமங்கள் பிரதான பங்கினைப் பெற் றிருந்தன என்றால் அக்கூற்று மிகையா காது.

ஈழத்தில் உருவாக்கி, செம்மைப்படுத் தப்பட்ட நிலையில் எமக்குக் கிடைக்கப் பெற்ற ஒரு படிமமாகப் பார்வதிசிலை இல: 1 (CMR No 13. 104. 286) காணப்படுகிறது. இப்படிமத்தின் கலையம்சங்கள் முழுவதுமே ஈழத்து சிற்பியின் கைவண்ணத்தினூடாக வடிவமைக்கப்பட்டது என்பதில் கலை ஆய்வாளர் எவருக்குமே சந்தேகம் இருக்க முடியாது. தாமரை ஆசனத்தின் மீது நிற்கும் நிலையில் அமைக்கப்பட்ட இப்படி மமானது 51.2 சென்ரிமீற்றர் உயரத்தி னைக் கொண்டதாக, தலையில் கரண்ட மகுடத்தினையும், கழுத்தில் கடி சூத்திரம் உட்பட ஆபரண அடுக்குகளைத் தாங்கியும் வடிவமைக்கப்பட்டுள்ளது. வலதுகரமானது நீலத்தாமரை மொட்டொன்றினைத் தாங்கி

நிற்க, இடதுகரமானது கடஹஸ்த நிலையில் கீழே தொங்கவிடப்பட்ட நிலையில் காட்டப்பட்டுள்ளது. மேகலையுடன் கூடிய இடையலங்கார ஆபரணங்களுடன் இணைக்கப்பட்டுள்ள ஆடையமைப்பானது கீழே கணுக்கால்வரைக்கும் காட்டப்பட்டுள்ளது. இப்படிமத்தின் சிற்ப அமைதியை நன்கு அவதானித்த இந்திய சிற்பக்கலை வல்லுனரான கங்கூலி என்பவர் தென்னிந்திய படிமக்கலை மரபில் இருந்து இது முற்றிலும் வேறான படிமக்கலை மரபொன்றினூடாக வடிவம் பெற்றிருக்கவேண்டும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இப்படிமத்தின் 'திரிபங்க' நிலையானது (அசைவுநிலை) வலது பக்கமாக வலது பாதமும் வலது இடையும் முறையே மடிக்கப்பட்டும், வளைக்கப்பட்டும் எடுத்துக்காட்டப்பட்டிருப்பது அதனைத் தென்னிந்திய சிற்ப மரபு லக்ஷணங்களிலிருந்து வேறுபடுத்தி தனித்துவப்படுத்தியுள்ளது. தென்னிந்தியத் திரிபங்க நிலையானது படிமத்தின் இடது பக்கமாகவே அமைந்திருப்பது பொதுவழக்காகும். இப்படிமத்தின் இன்னொரு புனிதத்துவமான அம்சமாக விளங்குவது வலது கரத்தில் காணப்படுகின்ற தாமரை மொட்டின் நிலையானது வலது மார்பக மணிக்கு மேலே உயர்ந்திருப்பது என்பதாகும். சிற்ப லக்ஷணங்களின்படி பார்வதியின் உருவ அமைதியில் வலதுகரத்தினால் தாங்கப்பட்டுள்ள தாமரை மொட்டானது மார்பகத்திற்கு மட்டமாக அல்லது கீழேயே அமைதல் வேண்டும் என்பதாகும்.

பொதுவாகக் குறிப்பிடுவதாயின் இவ் வெண்கலப்படிமத்தின் வெளிப்பாடானது ஈழத்திற்கேயுரிய சிற்பியின் கைத்தேர்ச்சியூடாக வடிவமைக்கப்பட்டது என்பதே உண்மை. இப்பார்வதி சிலையின் தலையிற் காணப்படும் முடியின் அமைப்பானது பிற்காலத்தில் தமிழர் நாட்டுக்கூத்து மரபில் பின்பற்றப்பட்ட வடமோடிக்குரிய 'கரண்ட' வடிவத்தில் இடம் பெற்றிருப்பது அப்படிமத்தின் வடிவமைப்புக்குரிய பாணியை தெளிவுபத்டுதுவதாக உள்ளது. கலாயோகி ஆனந்த குமாரசுவாமி அவர்கள் இப்படிமத்தின் காலத்தினை கி.பி 10 ம் 13 ம் நூற்றாண்டுகட்கிடைப்பட்டது என வரையறை செய்கின்றார்.

ஈழத்துக் கலைஞனின் கைவண்ணத்தில் தோற்றப்பொலிவுடன் உருவான மற்றொரு பார்வதி வெண்கலப்படிமமானது இலக்கம் 8 *(CRM No 13. 296. 285)* ஆகும். மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு கலைமரபில் உருவாக்கப்பட்டு, இருக்கின்ற நிலையில் *(Sitting Postuere)* வெளிப்படுத்தப்பட்ட இப்பார்வதி வெண்கலப் படிமானது 41 சென்ரி மீற்றர் உயரத்தினையுடையதாக, (தாமரை யாசனத்தினை இழந்த நிலையில்) பொலனறுவையில் இருந்து மீட்டெடுக்கப்பட்டது. இப்படிமத்திலும் பார்வதி சிலை இலக்கம் 1 இனது குணவியல்புகளைப் போன்றே பல தனித்துவமான கலையம்சங்களைக் காணமுடிகின்றது.

சுகாசன நிலையில் அமைக்கப்பட்ட இப்படிமத்தின் இடதுபாதமானது கீழ் நோக்கியவாறு தொங்க விடப்பட்டும், வலது பாதமானது மடிக்கப்பட்ட நிலையிலும் வலது கரம் தாமரைமொட்டு ஒன்றினைத் தாங்கிய நிலையிலும் இடதுகரம் வரத ஹஸ்த நிலையிலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. தாமரைமொட்டானது வலதுபக்க மார்பக மணிக்குமேல் உயர்த்தப்பட்டுக்காட்டப்பட்டுள்ளது. இந்நிலையானது மரபு ரீதியான சிற்பலக்ஷணங்களை மீறிய தன்மையைக் காட்டி நின்றாலும் கூட, சுதேசக்கலை மரபு ஒன்றின் பிரசவிப்பாகவே வெளிப்படுத்தப்பட்ட தன்மையினை உறுதிப்படுத்தி நிற்கின்றது எனக் குறிப்பிடலாம். இதனை அவதானித்த இந்தியச் சிற்பவியல் ஆய்வாளர், கங்கூலி என்பவர் இச் சிற்பப்

படிமத்தினைப்பற்றி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

*''......ஓரளவுக்கொத்த இன்னொரு பார்வதி சிலையுடன் இச்சிலையை ஒப்பிட்டு நோக்குவோமேயானால், அவற்றின் உருவ அமைதிக்கும், மெருகூட்டலுக்கும், ஆடையாபரணங்களது வரைவுகளுக்கு மிடையே காணப்படும் பாரியவேறுபாடு என்பன எல்லாவற்றையும் கொண்ட இலங்கையின் உதாரணங்களானவை தென்னிந்திய விதிமுறைகளுக்கு அவ்வுலோகச்சிற்பியானவன் வழிப்படுத்தவன் அல்லன் என்பதைத் தெளிவாக்குகின்றன.''*

கங்கூலினது இக்கருதுகோளனது திட்டவட்டமாக ஈழத்துக்கேயுரிய படிமக்கலைப் பாரம்பரியத்தினை *(Bronze Casting School of Art of Ceylon)* நிறுவுவதாகவே அமைகின்றது. ஈழத்துக்கலைமரபின் பிரதான அம்சங்களைக் கொண்டிருக்கும் இப்படிமத்தின் சிரசிலே கூம்பு வடிவமாக *(Cornical)* அமைந்த முடி ஒன்றும், காதுகளில் அமைந்துள்ள ஆபரணங்கள் இரண்டும், கழுத்திலே அணியப்பெற்ற மாலைகள் மூன்றுமாக இணைந்து, இப்பார்வதிசிலையின் தனித்துவமான பிறப்பினை சுதேசக்கலை மரபுக்குரியதாக்கியுள்ளது. கலாயோகி ஆனந்த குமாரசுவாமி அவர்கள் இச்சிலையை கி. பி. 10ம் 13ம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டது என வரையறுத்துள்ளார். இவ்வகையில் ஈழத்தமிழர் படிமக்கலை வரலாற்றில் பார்வதிசிலைகள் இல 08 உம் முக்கியமான வரலாற்று மூலாதாரமாகின்றன.

திருகோணமலையில் வடக்குக்கடற்கரை வீதியில் தற்செயலாகக்கிடைத்த பெரும் கலைக்கருவூலங்களுள் இரண்டு பார்வதி வெண்கலப்படிமங்களும் உள்ளடங்கியிருந்தன. ஈழத்துத் தமிழர் படிமக்கலை வரலாற்றிற்குத் திருகோணமலையிற் கிடைத்த இவ் வெண்கலப்படிமங்கள் மிகமிக முக்கியத்துவம் வாய்ந்தனவாக விளங்குகின்றன பார்வதிசிலைகள் இலக்கம் 11, 12 *(Find No. 1950. Tri.)* என அடையாள மிடப்பட்ட இப்படிமங்களுள் முதலாவது இருக்கின்ற நிலையிலும், இரண்டாவது நிற்கின்ற நிலையிலும் முறையே 47.6 சென்ரிமீற்றர், 50 சென்ரிமீற்றர் உயரங்களையுடையதாய் அமைக்கப்பட்டதனைக் காணலாம்.

ஈழத்திற்கேயுரிய — காலத்தால் முந்திய தனித்துவமான தமிழர் படிமக்கலை மரபு ஒன்று திருகோணமலை மாவட்டத்தில் தோற்றம் பெற்று வளர்ச்சியடைந்திருந்தமைக்கு இவை சிறப்பான சான்றுகளாகும். வரதமுத்திரையுடன் கூடிய இருக்கின்ற நிலையில் உள்ள பார்வதியின் வலது கரத்திலே நீலோற்பல மலர் மொட்டு காணப்படுகின்றது. சுகாசன நிலையில் அமைந்த இச்சிலையின் வலது பாதத்தின் பெருவிரல் சாய்வாக கீழே தொங்கிக் கொண்டிருக்கும் இடது பாதத்தின் முழங்காலினை மெல்லத் தொட்டபடி காணப்படுவது அதன் பழமைத்தன்மையை எடுத்துக்காட்டுகின்ற இயல்பெனலாம்.

நிற்கின்ற நிலையில் அமைந்த பார்வதியின் சிறப்பியல்புகள் பல இந்திய, ஐரோப்பிய சிற்பக்கலை ஆய்வாளர்களை ஒருங்கே ஈர்த்துள்ளது. இச்சிலையின் விசேட அம்சம் என்னவெனில் திருவாசி அல்லது பிரபா மண்டலத்தினுள் தாமரையாசனத்தின் மீது உருவாக்கப்பட்ட ஒரேயொரு வடிவம் இதுவாகும். துரதிஷ்டவசமாக அத்திருவாசியின் மேற்பாகம் எமக்குக் கிடைக்காமற் போயிற்று ''மீனாட்சி'' என்று வர்ணிக்குமளவிற்கு எடுத்த எடுப்பில் ஒரு மீனைப் போன்ற தோற்றத்தில், உண்மையான திரிபங்க நிலையில், பெண்மையின் இலட்சியப் பிம்பம் பிரதிபலிக்கும்படி வடிவமைக்கப்பட்ட இப்படிமம் *H. Zimmer* என்ற

மேலைத்தேயக் கலைப்புலவரை ஒருங்கே ஈர்த்துள்ளது. ஈழத்து சமுத்திரவியல் வழி வந்த குணவியல்புகள் இலகுவிலே இலங்கும் படி வடிவமைக்கப்பட்ட ஒரு படிமமாகவே இதனைக் கொள்ள வேண்டும். ஈழத்துத் தமிழர் படிமக்கலை வரலாற்றில் இப்பார்வதி படிமமானது தனித்துவமான உள்ளூர் கலைமரபின் வளர்ச்சிக்கு ஓர் உதாரணமாகத் திகழ்கின்றது. கிருஷ்ண ஐயர் என்பவரது கருத்துப்படி இப்படிமமானது கி.பி. 11 ம் நூற்றாண்டுக்குரியது என்பதாகும். ஆனால் இப்படிமத்தினை கி.பி. 10 ம் நூற்றாண்டுக்கு முற்பட்டது எனக் கொள்ள இடமுண்டு.

## சிவநடராச வெண்கலப்படிமங்கள் காட்டும் ஈழத் தமிழர் கலைமரபு:

சிவனது ஒரு வடிவமான நடராச வடிவங்களுடைய வெண்கலப்படிமங்கள் முழுவதுமே பொலனறுவை என்ற மையத்திலிருந்து மாத்திரம் பெற்றுக் கொள்ளப்பட்டமை இங்கு மனங் கொள்ளத்தக்கது. இதுவரையில் எல்லாமாக 07 நடராச வெண்கலப்படிமங்கள் பெற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. பொலனறுவையின் சைவக் கோயில்களில் இடம்பெற்றிருந்த இப்படிமங்கள் பின்னர் பொலனறுவை வீழ்ச்சியடைந்த காலத்தில் கோயில்களில் புதைக்கப்பட்டும் வேறிடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டும் நீண்டகாலமாக மறைந்திருந்தன. கடந்த நூற்றாண்டின் முடிவிலும் இந்நூற்றாண்டின் நடுப்பகுதிலும் பொலனறுவையில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வுகளின் விளைவாகவே இந்த சிற்பப்படிமங்கள் வெளிக் கொணரப்பட்டன. இவ்வாறு வெளிக்கொணரப்பட்ட கலைக்கருவூலங்களானவை ஈழத்து சுதேச வெண்கலப்பாரம்பரியத்தின் தனித்துவமான இயல்புகளை தெளிவாகப் பிரதிபலிப்பவையாக விளங்குகின்றன. பேராசிரியர் இந்திரபாலா என்ற கலையாய்வாளர் பொலனறுவையிற்கிடைத்த நடராசர் படிமங்களைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

> *'' .....தமிழ் நாட்டிற்போல, இலங்கையிலும் நமக்குக்கிடைத்துள்ள சைவ உலோகச் சிற்பங்களுள் மிகச் சிறந்தவையாய் இருப்பவை நடராசர் சிலைகளே. இங்கு கிடைத்த இரண்டு நடராசர் சிலைகளைப் போன்று சிறந்தவையாய் தமிழ் நாட்டிலும் கூட அதிக சிலைகள் கிடைக்கவில்லை எனக் கலாவிமர்சகர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். தஞ்சாவூரிலே கிடைத்துத் தற்பொழுது சென்னை அரும் பொருளகத்தில் (Museum) வைக்கப்பட்டுள்ள நடராசர் சிலையும் பொலனறுவையிலே கிடைத்துக் கொழும்பு அரும் பொருளகத்தில் வைக்கப்பட்டுள்ள முதலாவது (N. 01) நடராசர் சிலையும் நடராசர் சிலைகளுள் வைத்தெண்ணத்தக்கவை .....''*

பொதுவாக நடராஜர் சிலை இல. 1 (CMR No 13. 89. 283) நடராஜர் சிலை இல. 2 (CMR No 13. 89. 283), நடராஜர் சிலை இல. 5 நடராஜர் சிலை இல. 6 என்பன அவ்வவற்றின் தனித்துவமான கலைவெளிப்பாட்டினைப் பிரதிபலிக்கும் வகையில் ஈழத்து தமிழர்களது வெண்கலப் படிமக்கலையின் வளர்ச்சி நிலையை உறுதி செய்வனவாக அமைந்துள்ளன. நீள்சதுர முகவெட்டுத் தோற்றப்பொலிவுடன் விளங்கும் நடராஜர் சிலை இல. 1 உம், விரித்த பின்னற்சடையுடன் திருவாசியின்றி ரிஷப குண்டலத்துடன் விளங்கும் நடராஜர் சிலை இல 2 உம் ஈழத்துத்துக்கேயுரிய உருவாக்கத்தினைப் பிரதிபலித்து நிற்கின்றன சி. சிவராமமூர்த்தி என்ற கலாவிமர்சகரது கருத்துப்படி தமிழ்நாட்டில் எங்குமே கிடைத்திருக்காத வகையில் தேவாரங்களில் பாடப்பட்ட வருணனைகளுக்கமைய ஈழத்தில் நடராஜர் சிலை இல. 2 கிடைத்துள்ளது என்பதாகும். நாகபாம்பினை ஆபர

ணங்களாக அணியப்பெற்ற தோற்றப்பாடுடைய இப்படிமத்தினைப் பற்றி சிவராம மூர்த்தி தனது தென்னிந்திய வெண்கல உருவங் ள் என்ற நூலில் விபரித்துள்ளார். இச்சிற்பத்தின் சடையானது தென்னிந்திய சிற்பங்களில் பொதுவாகக் காணப்படுவது போலல்லாது திரிந்து முறுகி, பின்னி அமைந்துள்ளது. தேவாரங்களின் ''புரிபுன் சடையீர்'' போன்று வர்ணிக்கப்பட்ட தற்கேற்ப நடராஜர் சிலை இல 2 அமைந்துள்ளமையை சிவராம மூர்த்தி அவதானித்துள்ளார்.

1960ல் பொலனறுவையிலுள்ள ஐந்தாம் சிவதேவாலயத்திற்குப் பின்புறமாகவுள்ள ஓர் இடத்திலிருந்து பெற்றுக் கொள்ளப்பட்ட திருவாசியுடனான நடராஜரே இதுவரைக்கும் பெற்றுக்கொள்ளப்பட்டவற்றுள் இருந்து உயரத்தாற் கூடியதாகவும், அதிவிசேடமான சிற்பக்கலைப் பரிமாணங்களையுடையதாகவும் காணப்படுகிறது. சிலை இல. 6 என அடையாளமிடப்பட்ட இப்படிமம் 146-8 சென்ரி மீற்றர் உயரமுடையதாகவுள்ள்ளது. தமிழ் நட்டிலோ அல்லது ஈழத்தின் பிற இடங்களிலோ இதனைப் பொறுத்த நடராஜர் படிமம் கிடைக்கப் பெற்றிருக்கவில்லை.

விரித்த ஜடையின்றி ஜடாமகுடத்துடன் காணப்படும் இப்படிமம் அபய முத்திரையிற் காட்சி கொடுக்கும் முன் வலக்கரத்தில் ஐந்து தலை நாகபாம்பொன்றினைத் தாங்கியுள்ளது. அது மட்டுமன்றி திருவாசியைக் கொண்டுள்ள பீடத்தின் முன்புறத்தில் வாத்தியக்காரர்களைக் கொண்ட நால்வருடைய உருவங்கள் மிக லாவகமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. தாளம், சங்கு, குழல், மத்தளம் ஆகிய வாத்தியக் கருவிகளை அவர்கள் மீட்டிக் கொண்டிருக்கிறார்கள். உலோகத்தாலான நடராஜர் சிற்பங்களில் இத்தகைய வாத்தியக் கலைஞர்களுடைய உருவங்கள் இடம் பெறுவது வழக்கமில்லை என முதன்முதலாக கொடகும்புர என்பவர் எடுத்துக் காட்டியுள்ளார். தென்னிந்திய உலோகச் சிலைகளை ஆராய்ந்த சிவராமமூர்த்தி கூட இப்படிமத்தின் தனித்துவமான சிற்பப் பெறுமானங்களை விரிவாக விளக்கியுள்ளார். இப்படிமத்தினை உருவாக்கிக் கொடுத்த ஈழத்துச் சிற்பி தேவாரங்களில் விபரிக்கப்பட்டுள்ள வர்ணனைகளுக்கமைய அதனை உருவாக்கியிருப்பதும், குறிப்பாக திருஞானசம்பந்தருடைய தேவாரப் பதிகத்தினை நினைவூட்டு முகமாக ஐந்துதலை நாக பாம்பினை வலது கரத்தில் வடித்திருப்பதும் ஈழத்துத் தனித்துவமான படிமக்கலை வளர்ச்சியையே எடுத்துக்காட்டுகின்றது எனலாம்.

பேராசிரியர் இந்திரபாலா அவர்கள் இப்படிமக்கலை மரபின் தோற்றம், வளர்ச்சி தொடர்பாகக் குறிப்பிடும்பொழுது இவற்றை அமைத்தவர்கள் பௌத்த சிற்பங்களை அமைப்பதில் தேர்ச்சி பெற்றிருந்த சிங்களச் சிற்பிகளே என்று சி. எச். கொடகும்புர கூறுவது ஏற்கக்கூடியதாய் இல்லை என்று விபரித்துள்ளார். அந்த வகையில் இலங்கையில் வளர்ந்த இந்து வெண்கலச் சிற்ப மரபை (ஈழத்) தமிழர் தம் சிற்பமரபின் (ஓர்) அம்சமாகவே கருத வேண்டும் என்றும் தனது முடிவினைக் குறித்துள்ளார்.

## முடிவுரைக்கான முன்வைப்புக்கள்

ஈழத்து இந்து வெண்கலப்படிமக்கலை வரலாற்றிற்கு இன்னும் பல்வேறு வகையான படிமங்கள் சான்று சேர்க்க உதவுகின்றன. அவற்றுள் திருகோணமலையிலிருந்தும், திருக்கேதீஷ்வரத்திலிருந்தும் (மாந்தையிலிருந்தும்) கிடைக்கப்பெற்ற சோமாஸ்கந்த மூர்த்தங்கள் மிகப் பிரதானமானவையாகும். திருக்கேதீஷ்வரத்தில் கிடைத்தவை கி. பி. 8ம் நூற்றாண்டுக்

குரிய கலைமரபுகளைக் கொண்டுள்ளன. இவற்றினையும் விட சைவநாயன்மார் வெண்கலப் படிமங்களுள் சுந்தரருடைய படிமங்கள் ஈழத்தமிழர் வெண்கலப் படிமக்கலையில் அழகியல் ரீதியாக அவர்கள் ஈட்டிக் கொண்டிருந்த சாதனையின் வெளிப்பாடாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. ஈழத்துச் சுந்தரருடைய வெண்கலப்படிமங்களையொத்த வேறு எவையும் தமிழகத்திலும் இதுவரையில் கிடைக்கப்பெற்றிருக்கவில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கதாக உள்ளது. மேலும் இங்கு கிடைக்கப்பெற்ற அர்த்த நாரீசுவரர் வெண்கலப்படிமம், காரைக் காலம்மையாருடைய பேயுருக்கொண்ட தோற்றத்தினையுடைய வெண்கலப்படிமம் என்பன ஈழத்துப் படிமக்கலை வரலாற்றிற்கு மேலும் மெருகூட்டுபவையாக உள்ளன. மாங்கனிக்குப் பதிலாக கையிலே மோதகத்துடன் தனது இருக்கையில் காட்சியளிக்கும் விநாயகருடைய வெண்கலப்படிமம் ஈழத்தின் அழகியற் கோட்பாட்டினை வெளியுலகிற்குப் பறைசாற்றுகின்றது எனலாம்.

இறுதியாக ஈழத்தில் இது வரையில் கண்டுபிடிக்கப்பெற்று வெளிக்கொணரப் பட்ட இந்து வெண்கலப்படிமக்கலை மரபு தொடர்பாக பின்வரும் கருதுகோள்களினை நாம் மனதிற்கொள்ளலாம். அவை ஒரு வேளையில் ஈழத்தமிழர் வளர்த்தெடுத்த பண்பாட்டு மரபினை உறுதி செய்வதற்கு உதவக் கூடும். அவையாவன:

அ) ஈழத்தில் கண்டு பிடிக்கப்பட்ட இந்து வெண்கலங்களில் பெரும் பாலானவை உள்ளூர் வேறுபாடுகளைக் கொண்டவை (பிராந்திய தனித்துவம் வாய்ந்தவை)

ஆ) கண்டுபிடிக்கப்பட்ட பல வெண்கலப் படிமங்கள் முடித்துச் கொடுக்கப்படாதவை (*unfinished*)

இ) ஈழத்துக்கேயுரிய பிராந்திய வரிவடிவங்களுடனான வெண்கலப்படிமங்கள்.

ஈ) பௌத்த சிற்பக்கலைச் சாயல்களுடனான இந்து வெண்கலப்படிமங்கள்.

உ) மரபுரீதியான சிற்ப லக்ஷணங்கள் மீறப்பட்ட நிலையில் படைக்கப்பட்ட வெண்கலப்படிமங்கள்.

ஊ) வணிக கணங்களுடைய பெயர்கள் பொறிக்கப்பட்ட வெண்கலப் படிமங்கள்.

மேற்கூறப்பட்ட ஆறு குணாதிசயங்களையும் நிறுவக்கூடிய வெண்கலப்படிமங்கள் ஈழத்திலிருந்து இதுவரையில் பெற்றுக் கொள்ளப்பட்டதன் அடிப்படையில் திட்டவட்டமாக ஈழத்தமிழர் வளர்த்தெடுத்த கலைப்பாரம்பரியத்தின் ஓரங்கமாகவே இவ் வெண்கலப்படிமக்கலையும் வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பதனை உறுதிப்படுத்தலாம்.

**இவ்வாய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள்:**


1. **S. Krishnaraiah;** 1983 *Saiva Bronzes in SriLanka (10—12 th C. A. D.) Unpublished Thesis. Uni. of Mysore for M. A. Degree 1983.)*
2. **A. K. Coomarasamy;** 1914 *Bronzes From Ceyclonhie - fly in the Colomlo Museum·*
3. **Leelananda Prematilleke** 1986 *SriLankan Bronses (Buddhist and Hindu) Published by the National Museum. Colombo.*

| | | |
|---|---|---|
| 4. கா. இந்திரபாலா; | 1986 | 'இலங்கையிற் கிடைத்த சிவனின் உலோகச் சிலைகள்' பூர்வகலா இரண்டாவது இதழ், (வெளியிடப்படவில்லை) யாழ்ப்பாணத் தொல்லியற் கழகச் சஞ்சிகை யாழ்ப்பாணம். |
| 5. செ. கிருஷ்ணராசா; | 1992 | கலாநிதிப்பட்டத்திற்கான ஆய்வுக்குறிப்புக்கள், புகைப் படங்கள், முதலானவை. |

□ □ □ □

## நடுகல்

வீரருக்கு நாட்டுதற்கேற்ற கல்லை முதலில் தேர்ந்தெடுப்பர்; எடுத்த கல்லைப் புனித நீராட்டுவர்; வீரனுடைய பீடும் பேரும் அதில் எழுதுவர்; உரிய இடத்தில் அதனை நாட்டுவர்; மாலையும் மயிற் பீலியும் சூட்டுவர்.

இவ்வாறு நட்ட கல்லை தெய்வமாகக் கொண்டு வணங்குதல் உண்டு.

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்"

— தொல்காப்பியம், புறத்திணை, 5.

இவ்வாறு தொல்காப்பியத்தில் கூறப்பட்ட நடுகல் போர்க்களத்தில் அரிய வீரச்செயல் புரிந்த வீரமறவர்களுக்கு மட்டுமே நாட்டப்பட்டது. இன்று எமது தேசிய விடுதலைப் போராட்டத்தில் வீரச்சாவடைந்த மாவீரர் ஒவ்வொருவருக்கும் மாவீரர் துயிலும் இல்லத்தில் நடுகல் நாட்டப்படுகிறது.

அன்று வீரமறவர்களுக்கு அளித்த கௌரவத்திற்கு இலக்கியம் சாட்சியாகிறது. இன்று நாட்டப்படும் நடுகல் ஒவ்வொன்றும் நாளைய வரலாற்றிலும் இலக்கியத்திலும் சான்றாக வாழும். □□

*செந்தமிழ் நாடெனும் போதினிலே — இன்பத்*
*தேன் வந்து பாயுது காதினிலே — எங்கள்*
*தந்தையர் நாடென்ற பேச்சினிலே — ஒரு*
*சக்தி பிறக்குது மூச்சினிலே*

— பாரதியார்

# இன்பத்தமிழுக்கு இனியவிழா

## எதிர்ப்பக்க ஓவியம்
**ஓவியர் ராஜன்**

*கொடி பறக்குது கோட்டையில்!*
*கொடி பறக்குது கோட்டையில்!*
*அடிமை என்றதோர் பழி அகன்றது*
*கொடி பறக்குது கோட்டையில்!*

*தலை நிமிர்ந்தது தமிழினம்!*
*தலை நிமிர்ந்தது தமிழினம்!*
*நிலை குலைந்து நம் பகைவர் ஓடினர்*
*தலை நிமிர்ந்தது தமிழினம்!*

# தென் தமிழீழத்து மக்களின் வாழ்வியல்

எம். இ. யோகேந்திரம்

நீண்ட கால வரலாற்றையுடைய இனத்தின் மனிதத்தன்மையை அறிந்து கொள்ள அவ்வினம் தொடர்பாகக் கிடைத்திருக்கின்ற பல்வேறு சான்றுகளில் அவ்வினத்திற்கான இலக்கியங்களும் கலைப் படைப்புகளும் அவர்களுக்கே உரியதான பண்புக்கோலங்களும் மூலவாய்களாக உதவும். இவைகளே இனத்தின் ஆதாரமாயும், அவ்வினத்திற்கு எழுச்சி கொடுக்கும் சக்தியாகவும் அமைவதை உலகின் மானுட வரலாறு உணர்த்தும். வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட வகையில் தென்தமிழீழத்தில் வாழ்ந்து வருகின்ற தமிழ் மக்களினது கலை கலாசாரப் பண்புகளை நாம் நோக்கும் பொழுது இம் மக்களினது நீண்ட பாரம்பரியக் கலைவடிவங்களும் ஏனைய மக்களினின்றும் வேறுபட்டுள்ள கலைப்பண்புகளும், சீர்கொண்ட தமிழ் வாழ்வு நெறிகளும் இவர்களினது முதுசொங்களாக இருந்து வருவது யாவருக்கும் தெற்றெனப் புலப்படும்.

இம் மக்களின் வாழிடமாகிய நிலத்தின் தொன்மை, மக்களின் தன்மை ஆகியன இவர்களாற் பேணப்படும் கலை கலாச்சாரம் வாழ்வினிடையே தனியானதோர் சிறப்பைத் தோற்றுவித்துள்ளது எனலாம். இம் மக்கள் தாம் பேசும் மொழி, தாம் பேணும் சமய வாழ்வு கலாச்சாரம் ஆகிய பண்புகளில் தனித்துவமான தன்மைகொண்டவாயுள்ளனர். ஆயினும் ஏனைய உலகத் தமிழ் மக்களின் தேசியப் பண்புகளுடன் ஒன்றியும், விதந்தும் வாழும் தகமை கொண்டவர்களாயும் இருத்தல் யாவரும் ஏற்றுக் கொள்ளும் பாங்குடைய வாழ்வு இவர்களுடையது.



"சீனட்டி நெல்லரிசும்
சிவந்த இறால் ஆணமதும்
பொத்துவில் ஊரும்
பொருந்துனதோ உந்தனுக்கு"

ஓரினத்தின் தொன்மையான வரலாற்றையும், சீர்மையையும் தெரிந்து கொள்வதற்கு உரிய மூலவாய்களாக "மரபு வழக்கு, அயல் நாட்டார் குறிப்பு, தொல் பொருட்சான்று, நாட்டார் இலக்கியம், நாட்டு மொழி" ஆகியவை பயன்படுகின்றன. தென்தமிழீழத்தின் சிறப்பு இயற்கை வளமாக கடலும், வயலும், மலையும், ஆழியும் விளங்குவதை தென் தமிழீழத்தின் கவிஞர் நீலாவணன் அவர்கள் தன் பாவில்;

*"வயல்களில் பொலிமலை, ஆழியின் மீன்கள்*
*வளர்செழுத் தெங்கும் உதிர்வதுந் தங்கம்*
*அயல்விருந்தோம்பும் அன்பினில் அன்னை*
*அரசியல் பல்கலை அறிஞர்க்கும் அம்மை*
*சோதிடம் மருந்து மந்திரம் கூத்து*
*சுவைக் கவி, வசந்தன் குரவையும் ஏத்தும்"*

என்று பாடியுள்ளமை நோக்கத்தக்கது. இத்தகு வனப்பு நிறை பிரதேசத்தில் இன்று சூழவிருப்பது ஸ்ரீலங்கா பேரினவாத அரசின் குடியேற்றங்களே. இக் குடியமர்த்தல்களின் மூலம் இம்மக்களுக்கே உரித்தாகிய சீரான கலை பண்பாட்டு விழுமியங்கள் சிதைந்து வருகின்றன என்பது குறிப்பிடத் தக்க விடயமாகும்.

கொக்கிளாய் முதல் குமணை வரை தொடர்ந்திருக்கின்ற தென் தமிழீழ மக்களின் பண்பாட்டின் முதிர்ச்சியை அழித்துவிடுவதற்காகச் ஸ்ரீலங்கா பேரினவாத அரசும், அவ்வரசின் நோக்கை நிறைவேற்றலில் அக்கறை காட்டும் அதிகாரிகளும் 'தனி ஒருமனிதன் தான்கவர எண்ணும் காணி நிலத்தின் உறுதியையும் (ஆவணம்) அகப்புறச் சான்றுகளையும் அழித்தும் திரிபு படுத்தியும் வருதல் போன்று இப் பிரதேசத்தின்பால் விளங்கும் கிராமங்களின் பெயர்களைத் திரித்தும் வரலாற்றுச் சாதனங்களை அழித்தும்' திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களை இராணுவ ஆட்சியின் மேற்பார்வையில் நிகழ்த்தியும் வருகின்றனர். இதனால் பண்பட்ட இவ்வூர்களில் மக்கள் தம் நிலையும், கலையும் குலைந்து அன்றாட வாழ்வை அவலத்தினூடே கழித்து வருகின்றனர் என்பதை இக்காலம் காட்டுகிறது.

தமிழீழத்தின் தேசிய வளங்களான இம் மண்ணும் மக்களும் சுயாட்சியின் பாற்பட்டு வாழ்ந்தது நீண்டகால வரலாறு. நீண்டகாலம் தொட்டு இம் மக்கள் இங்கு கூடிவாழ்ந்த வாழ்வை உற்றுநோக்கும் போது இவர்களின் நீண்டகாலப் பண்பு என எவராலும் விதந்துரைக்கப்படுகின்ற பழக்கங்கள் யாவும் இன்றும் அப்பகுதிக் கிராம மக்களிடையே அழியாது பரந்திருப்பதைக் காணலாம். இம்மக்களின் அன்றாட நிகழ்வுகள் அனைத்திலுமாகவும், காலாதி காலமாய் நிகழும் வாழ்வின் முக்கிய நிகழ்வுகளினூடேயும் இக்கலையுணர்வு மிக்க பண்பியல் வாழ்வு சித்திரிக்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியதொன்று.

ஐந்து வித நிலங்களுக்கென்ற பண்புகளும் காலமாற்றத்தினாலும் (நிலங்களுக்கென்று) பழுது படாது இம் மக்களிடம் இன்றும் இருப்பதை இம்மக்களைத் தரிசிப்பவர்களும், இவர்களுடன் வாழ்பவர்களும் உணர்வார்கள். முல்லை, மருதம், பாலை; நெய்தல், குறிஞ்சிக்கென புலவர்களாற் பாடப்பட்ட சங்க காலத் தமிழ் மக்கள் வாழ்வுமுறையை மக்கள் இக்காலத்திலும் சில கிராமங்களில் பேணி வருதலும். இவ்விழுமியங்கள் காக்கப்பட்டு வருதலும் வியக்கத்தக்கவையாம். இற்றைக்கு நான்கு நூற்றாண்டுகளுக்கும் மேலாக இம்மக்களிடையே பிறந்து வளர்ந்து போற்றப்பட்டு வரும் நாட்டு இலக்கியங்கள் இம்மக்களின் வாழ்வு முறைப் பேணல்களைப் பாட்டால் உரைக்கும் சாதனமாகும்.

''பாட்டினைக் கலந்த பொருள் வழிப் பாட்டினியல் பண்ணத்தியல்பே'' என்ற தொல்காப்பியர் மொழியின் பாற்பட்டதான இப்பெருமை சேர் நாட்டிலக்கியங்களின் மூலம் இப்பிரதேச மக்களின் வாழ்வை, அவற்றின் செழுமையை எவரும் காணலாம்; உணரலாம்.

தமிழர்களும், இஸ்லாமியர்களும், பேசும் தமிழ் மொழிக் கவிதைகளிலும் வசந்தன், கரகாட்டம், காவடிச் சிந்துகள், ஊஞ்சல் பேசல்கள், கூத்துகொம்பு மகுடியாகிய மகிழ்வு நிகழ்வுகளில் பாடப்படும் பாடல்கள் யாவற்றிலும், இம்மக்களின் பாரம்பரியம், பண்பாடு, கலை உணர்வுகளின் அகங்கள் விளங்கும். இம்மக்கள் பெற்ற இன்பதுன்ப உணர்வும் துலங்கும்.

**நாட்டிலக்கியங்களின்**
**நற்பண்புகள்**

பல நூற்றாண்டு காலமாக மக்கள் வாழ்வில் ஏற்பட்ட சமூக மாற்றங்களையும் விஞ்சிப் பொலிவோடு விளங்கும் இலக்கிய வளமும், உரமும் பெற்றுள்ள பல கவிதைகள் இம் மக்களின் ஆன்ற காதல் வாழ்வு, தொழில் முறை, பட்டதுயர் உணர்வுகள். அவ்வக்காலத்தைய ஆட்சி நிலைகள் இவைகளைப் பற்றிக் கூறும் அகப்புறச் சான்றாக விளங்குவதாய் மக்களிடத்தே உயிரோடு இன்று வாழுகின்றன. காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்ட இல்வாழ்வை வாழவிழைகின்ற உணர்வும், இல்வாழ்வைப் பிறர் உணரா வண்ணம் தாம் தொடர எண்ணுதலும். அதற்குண்டாகும் இடர் பற்றியும் அவ்விடரையும் தாண்டித் தாம் வாழவிழையும் எண்ணங்களைத் தொட்டுக் காட்டும் இக்கவிகள் பொத்துவில், திருக்கோவில், அக்கரைப்பற்று, மருதமுனை, வந்தாறுமூலை, சித்தாண்டி, கிரான் ஆகிய இடங்களில் வாழும் மக்களிடையே எங்கும் இன்றும் பரவிக்கிடப்பதையுணரலாம். இங்குள்ளவர்களிடையே வாழும் பாமர மக்கள் கூட இக்கவி உணர்வால் கவரப்படுவதைக் காணல் இயலும்.

*''கோளாவில் மாடு வந்து*
*கூரையை இழுக்கு தென்று*
*ஏசாதகா - ராத்தா - நம்மட*
*எருது வந்து போகுதுகா*

*சீனட்டி நெல்லரிசும்*
*சிவந்த இறால் ஆணமதும்*
*பொத்துவில் ஊரும்*
*பொருந்துனதோ உந்தனுக்கு*

*நிலத்துக்கு கீழால*
*நீர்மூழ்கிக் கப்பல் வந்து*
*நாட்டுக் குடிசனத்தை - யப்பான்*
*நாசமாக்கிப் போட்டாண்டி*

*மண்ணைக் குமிச்சு வெச்சு*
*மாங்கொட்டை நாட்டிவைத்து*
*தேங்காய் உருவேற்றி - உன்னைத்*
*தேடிவர வைச்சிடுவேன்.''*

என்ற நாட்டுக் கவிகளிற் களவியற் காதற் சுவை, உணவுப் பண்பு, வரலாற்றுச் சேதி, தம் அவா நிறைவேறத் தாம் கையாளும் தேசமந்திர உத்திமுறை ஆகிய மட்டக்களப்பு மக்கட் பண்புகள் புலப்படுதல் போன்று சிங்களக் குடியேற்றத்தின் மூலம் நடைபெறும் சீர்கேடும்

*''சாராயக் காரா - இந்தத்*
*தவறணையின் சிங்களவா*
*நீதந்த சாராயம் - என்*
*நினைவு தடுமாறுதடா''*

என்ற இக்கவிமூலம் காட்டப்படுகிறது. இதே போன்ற வேறுபாடல்களை மட்டக்களப்பு கிராம மக்களிடையே வாழும் வயது முதிர்ந்தவர்களிடையே இன்றும் கேட்கலாம். எனினும் பரவும் சிங்களக் குடியேற்றங்களும், தமிழ் மக்களிடையே நிகழ்த்தப்படும் கொடூர வன்முறைகளும் கலைஞர்களைப் பலிகொள்ளச் செய்வதும் அதனால் இக்கலைமுறையும், பழந் தலைமுறையும் ஒழிந்து படுதலும், இன்றைய நாளாந்த வாழ்வுமுறையாகி விட்டது.

### தாய்மார் தாலாட்டும் பாடல்கள்

தாலாட்டுக் கேட்டுத் தூங்கும் பருவம், சாய்ந்தாடும் பருவம், சப்பாணிகொட்டி மகவு விளையாடும் பருவம் எனக் குழந்தையின் பருவங்களில் தாய்மார்பாடும் பாடல்களில் வரும் நாயகிகளாக நெல்லுக்குற்றும் காளியம்மாவும், வயலில் கதிர் பொறுக்கும் பொன்னம்மாவும், குறிசொல்லும் காரணியும் இருப்பதுடன் இக் கவிகளைப் படைக்கும், படைத்த படைப்பாளிகளாக இவர்களே விளங்குவதும் கண்கூடு.

''ஆராரோ ஆரிவரோ
ஆரடித்து நீயழுதாய்''

என்று குழந்தையைத் தாலாட்ட மழலை அசைந்து விளையாடும் போது,

''ஆனையாடுதாம் பிள்ளை
ஆனையாடுதாம்
என்னானை இது பொன்னானை
எங்கள் குலத்துக் கரசானை''

எனக் குலத்தை ஆளும் தன்மையைத் தன் மகவு பெறுதல் தேவையென்ற தன் உள்வேட்கையை நான் எடுத்து இயம்புவதும், மழலை மெதுவாய் வளருகையில்,

''சப்பாணி கொட்டுதாம் சப்பாணி
செப்பம் நிறைந்தொரு கையால
முத்து வாரிய கையால — நல்லா
முழுங்கக் கொட்டுதாம் சப்பாணி''

என்று முத்துவாரிய தன் தேச வளத்தின் தன்மையைச் சுட்டிப் பாடுவதும், மழலையானது கைவீசிக் கால் அடி எடுத்து நடக்கத் தொடங்கையில்,

''கைவீசம்மா கைவீசு
கடைக்குப் போகலாம் கைவீசு
முட்டாய் வாங்கலாம் கைவீசு
மெதுவாய் தின்னலாம் கைவீசு''

என்று சிறப்பூட்டுவதும் தென்தமிழீழத்தின் எங்கும் நடைபெறுவதாகும். இப்படி இருவயதிற்குள் நான்கு பண்பாடலுடன் குழந்தையானது இயைந்து வாழும் பேறுபெற்று இருப்பது இம் மண்ணுக்குரிய தன்மையாகும்.

குழந்தை வளர்ந்து புறச் சூழலில் வாழும் சிறுவர்களுடன் இசைந்து விளையாடுகின்றபோது பாடுகின்ற பாடல்களாகவும், பெற்ற தாயார் பாடும் பாடலாகவும் வழக்கிலிருந்து வருகின்ற பாடல்கள் பலவற்றிலும் எம் தமிழீழத் தேசியத்தின் கலைவடிவங்களும், பண்புகளும் சிறப்புப் பெற்றிலங்குவதைக் காணலாம். குழந்தை அயல் சிறுவர்களுடன் விளையாடுகின்றபோது.

''ஆக்காண்டி ஆக்காண்டி எங்கே போய் முட்டையிட்டாய்
கல்லைத் துளைத்துக் கடலோரம் முட்டையிட்டேன்
இட்டது நூறுமுட்டை பொரித்தது மூணுகுஞ்சு
பொரித்த இளம் குஞ்சைப் புல்லறுத்துக் காப்பாற்ற
பவளமலை சுத்திப் பாவி நான் பறந்து வந்தேன்''

''நானழுத கண்ணீரும் என்குஞ்சழுத கண்ணீரும்
வாய்க்கால் நிறைந்து வழிந்தோடிப் போகுதுகா
இஞ்சிக்கும் பாய்ஞ்சு இலாமிச்சை வேருக்கும்
மஞ்சள் மரத்தோடும் மாறிமாறிப் பாயுதுகா''

என்று பாடும் கவிகளில் ஒரு ஏழைக் குடியான விவசாயியின் வீட்டு முற்றத்தில் நிற்கின்ற பயிராக இஞ்சி, இலாமிச்சை, மஞ்சள் ஆகியவை சுட்டிக் காட்டப்படுவதுமன்றி, இவைகள் கிராமிய வைத்தியத்துடன் இணைந்ததும், உடல் ஆரோக்கியத்திற்கு ஏற்றதுமாகிய மூலகப் பொருட்கள் என்ற முக்கியத்துவத்தையும் உணரலாம். வாய்வு வியாதியை அகற்றவல்ல இஞ்சியை உணவுடன் சேர்க்கவும், சிரசில் நாள்தோறும் வைக்கும் தேங்காய் எண்ணெயுடன் இலாமிச்சை வேரையும் சேர்த்து இட்டு வைக்கும் பழக்கத்தையும் பெருக்கிக் கொள்ளவும் தேக அழகை நிலைப்படுத்தி வளப்படுத்த மஞ்சள் பெண்களுக்கென்று இருப்பதைக் குறிப்பிட்டுச் சொல்லவும் மக்கள் நினைவில் என்றும் நிலைத்துள்ள இம்மூலகங்களின் முக்கியம், பங்கு இவைகள் பற்றி குறிப்பிட்டதை இக்கவியில் அறியலாம். மேலும் ஒரு ஏழையின் சுயநிலையையும், பலகாரியங்களை எண்ணினாலும் சிலவற்றையே முடிக்கும் அவனின் வறுமை இயல்பையும், வறுமையின் உருவம் கண்ணீர் என்பதைச் சுட்டிக் காட்டும் தன்மையை கொண்டதான இட்டது நூறு முட்டை பொரித்தது மூணுகுஞ்சு என்றும், நான் அழுத கண்ணீரும் என் குஞ்சு அழுத கண்ணீரும் வாய்க்கால் நிறையும் என்றும் குறிப்பிடும் கவிதையால் உணரலாம். இத்தகைய நாட்டுப் பாடல்கள் மூலம் தென் தமிழீழத்துக் குடியானவன் வறுமை வாழ்வு சித்திரிக்கப்படுகின்றது.

## ஊஞ்சல் பாடல் பொலிப் பாடல்; பொலிவு

இதைவிடச் சிறுபிள்ளைகள் விளையாட்டு வேளைகளில் பாடுகின்ற ஊஞ்சல் பாடல்கள், கிட்டி விளையாட்டுப் பாடல்கள், ஆகியன நம் நெஞ்சை அள்ளுவன, இம்மக்களின் செழுமை வழக்கையும் சொல்லுவன.

''கொக்குப் பறக்குது கொக்குப்பறக்குது
கோயிலின் வாசலிலே
எட்டுச் சலங்கையும் கட்டிப் பறக்குது
எங்கட வாசலிலே'' —

— என்றும்,

''அழகழகு முத்தழகு பலகைகளைச் சேர்த்து
அம்புக்கு இரண்டம்பு கால்வாங்கி நாட்டி
நாட்டியரே! தோழியரே நாம் ஏழுபேரும்
வந்த சிவராத்திரிக்கு சிந்துகவி பாட''

— என்றும்,

''ஆலையிலே சோலையிலே ஆலம்பாடிய சந்தையிலே
கிட்டிப்புள்ளும் பம்பரமும் கிறுகியடிக்கப் பாலாறு, பாலாறு''

— என்றும்,

''ஒட்டோடடைப் புளியமரம் உடைந்துடைந்து தகர
ஒரு சிண்ணிச் சந்தனம் வேருத்து வழிந்தோட''

— என்றும் பாடும்,

ஊஞ்சற் பாடல்கள் கேட்போரின் நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பாடல்களாகும். இவற்றின் மூலம் தென் தமிழீழத்துத் தமிழழகு புலப்படுகின்றது. சித்திரை வருடப் பிறப்பும், சிவராத்திரி தினமும், தீபாவளியும் ஊஞ்சல் கட்டி விளையாடும் காலமாக இருப்பதையும், இவர்கள் வாழ்வு முறைகள் சமய நெறியோடு இணைந்தும், பிணைந்தும் இருத்தலையும் உணரக்கூடியதாய் இருந்திருக்கின்றமை வியக்கற்பாலது.

தனிமனித வாழ்வுடன் இணைந்த கவிதைகள் போன்று கூட்டுத்தொழில் முறையினோடு தொடர்புபட்ட பாடல்களான ஏற்றப்பாட்டு, உழவுப் பாட்டு, நடுகைப்பாட்டு. அருவிவெட்டுப் பாடல், வண்டில்பாட்டு, கடற் பாட்டு, நெல்லுக்குற்றல், சூடுவைத்தல், பொலிதூற்றல் ஆகிய இன்னோரன்ன தொழிற் பாட்டுக்களில் எல்லாம் இம்மண்ணின் மணம் புரியும். இம்மக்கள் வாழ்வு தெரியும், மருதநிலப் பண்பும், முல்லை நில மக்களின் செயல்வடிவங்களும், மருத மண்ணின் மாண்பும் மலர்ந்து விரியும். இவ்வினம் தனக்கென்று பாதுகாத்து வைத்திருக்கின்ற தனித்துவப் பாரம்பரியம், மொழியுணர்வு, அறிவு சமயாசாரங்கள், நம்பிக்கை உணர்வுகள் இவைகளில் இவர்களுக்கிருக்கும் தனியான சிறப்புக்கள் இக்கவிதைகளில் துலக்கமாகத் தெரியும்.

தென்தமிழீழத்திலுள்ள கிராமங்களில், பெரும்பாலான கிராமங்களில் பேணப்படும் இப்பாடல்களில் குடில், பரண், பாசறை அமைத்தலாகிய முல்லைநிலப் பண்புகள் பரவிக்கிடக்கின்றன. இங்குள்ள ஐவகையான நிலங்களிலும் பூக்கும் மருதம் பூவும், கார்த்திகைப் பூவும் (காந்தள்) குடைப்பூ என்ற கோடைப்பூவும், இலவம்பூ, முள்முருக்கம்பூவும் கொன்றைப்பூவும் இன்றும் வழிபாட்டுக்குரியனவாக மக்களினால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. வேளாண் தொழிலுக்கென்று தேர்ந்து எடுக்கப்படும் உதவியாளர்கள் முறையே 'செய்கைக்காரன், முல்லைக்காரன்' என அழைக்கப்பட்டு பகுக்கப்பட்டு வருதலும், இவர்களைக் கொண்டு தொழில் இயற்றுபவர் போடியார் எனச் சுட்டப்பட்டு வருதலும் இங்குள்ள மரபாகும். இவ்வாறு தொழில் ரீதியாகப் பிணைக்கப்பட்ட இம்மூவரும் ஒருவருக்கொருவர் நெருங்கிய உறவினராகவே இருப்பது எங்கும் அதிகமாய் காணக்கூடிய விடயம். இவர்களின் பொருளாதார ஏற்ற இறக்க நிலையுடன் இவ்வுயர்வு தாழ்வு தொடர்புபட்டு விளங்கும். இவ்வகையிலான தொழில் பகுப்பு நிலையையும் சாதீயத்தின் முன்மாதிரிக் கட்டமைப்பினையும் தகர்த்துப் பேதமற்ற சமூகவாழ்வு முறைமையைப் பேணும் அடித்தளமான உறுதிமிக்க சமூக அமைப்பைத் தென்தமிழீழ நாட்டிலக்கியங்கள் சுட்டிக்காட்டும். இதுதவிர, தம் தொழில் முறைமையைச் சமய ஆசாரத்துடன் இணைத்துச் செய்யும் வழக்கமும் இம்மக்களிடையே உண்டு என்பதற்குச் சான்றாசு

நாட்டிலக்கியங்கள் விளங்குவதை தம்பிலுவில் மழைக்காவியம், கண்ணகி வழிபாட்டுக் காவியங்கள் உணர்த்தும்.

''பொலி பொலி தாயே பொலி தம்பிரானே பொலி
பூமி பொலி பூமாதேவீத்தாயே பொலி''......

— என்ற வரியாலும்,

''வாட்டி வலமாகப் பொலி
நாலு மூலைச் சக்கரமாம் பொலிதன்மாதாயே
நடுவே சிதம்பரமாம் பொலி பொலி.... .''

என்னும் தொடராலும் தென்தமிழீழ மக்கள் எருமைகளின் உதவியுடன் சூடு அடித்ததையும் அவ்வெருமைகளுக்கு உழவர் மத்தியில் இருந்த கௌரவத்தையும் சுட்டிக்காட்டியுமுள்ளார்கள். நாட்டுப் புலவர்கள் இங்குள்ள மக்கள் அருவிவெட்டி, அவ்வருவியை (வேளாண்மை) ஒன்றாக அழகு பெறக்குவித்துவைத்தலைச் சூடுவைத்தல் என்று கூறுவார்கள். இப்படியாகச் சூடுகளை வைத்திட்ட பின்னர் அவற்றை (இற்றைக்கு இருபது வருட காலத்திற்கு முன்னர்) களத்தில் எருமைகள் மூலமாகவும், தற்போதுள்ள காலத்தில் அதிகமான இடங்களில் உழவு இயந்திரத்தின் உதவியுடனும் அடித்து நெல்மணிகளைக் குவிப்பர். பின்னர் குவித்துள்ள நெல் மணிகளைத் தத்தம் வசதிக்கு ஏற்றவாறு சேமித்துவைப்பது இங்குள்ள விவசாயிகளின் வழக்கமாகும். இதில் கூடிய புலாபலனான நெல்லைப் பெறுவதற்கு தெய்வவழிபாடு செய்வதும், சூடுஅடிக்கும் இடத்தில் (களத்தில்) மந்திர உச்சாடனம் செய்த யந்திரங்களைத் புதைத்து (இது ஒரு உலோகத் தட்டில் அமையும்) விடுவதும் இன்றும் இவ்விவசாயிகளிடம் காணக்கூடிய நம்பிக்கையுடனான பழக்கமாக இருக்கின்றது. இத்தகைய மந்திரக்கிரியைகள் மூலம் கூடிய பலன் தமக்குக் கிட்டும் என்பது இவர்களின் எதிர்பார்ப்புமாகும். இவைகளை உணர்த்தி நிற்பதே பொலிப்பாடல். இப்பாடலில் வரும் பச்சைப் பெருமாள், கறுப்பன், பாளை முகவன், பன்றிக்கூரன், வெள்ளைவாலன், முத்துச்சம்பா, சீனட்டி ஆகியவை இன்றில்லாது போய் விட்டன. இந்நெல்லினம் இம்மண்ணைவிட்டும், மக்களைவிட்டும் போனது, ஆயினும் நெஞ்சைவிட்டு நீங்காதுள்ளது.

## நாட்டுக்கூத்துச் சிறப்பு:

இதுவரை தொழில் முறையுடன் கூடிய கிராமியப் பாடல்களின் தன்மையை அறிந்தோம். இதைவிட பொதுவான வாழ்வினோடு தொடர்புபட்ட நாட்டிலக்கியம் கூறுகின்ற செய்தியை ஊன்றிக்கவனிப்போமாகில்: கொம்பு விளையாட்டு, நாட்டுக்கூத்து, மகுடி, கரகம், காவடியாட்டம், கும்மிகோலாட்டம் ஆகியவைகளின் மூலம் அம் மக்கள் வாழ்வை நுகருதல் இயலும் என்ற உண்மை புலனாகும். திருக்கோயில், தம்பிலுவில், களுதாவளை, மண்டூர், செட்டிபாளையம், தேற்றாத்தீவு, எருவில், வந்தாறு

மூலை, சித்தாண்டி, கதிரவெளி ஆகிய கிராமங்களில் இக்கூத்தின் முறைகள் இன்றும் பேணப்பட்டு வருதலும் இவ்விடத்துக் கூறப்பாடத கிராமங்களிலும், பொதுவாக தென்தமிழீழத்தில் மட்டக்களப்பு, பொத்துவில், அம்பாறை ஆகிய மாவட்டங்களில் எல்லாம் இக்கூத்துமுறை கூட்டியாடுதல் வழக்காக வருதலும் கொம்பும், குரவையும், மகுடியும், வைந்தன் எனப்படும் வசந்தன் கோலாட்டம், கரகம், கும்மி எனப் பல்வேறு கலைவடிவங்கள் இங்கு வளர்ந்தும், விளைந்தும் வருதலும் கண்கூடு. இக்கூத்து முறைகளில் பயிற்சி பெற்றவர்கள் அண்ணாவிமார் என்று மக்களினால் கௌரவத்துடன் அழைக்கப்படுதலும், அவர்களினால் சிறப்பிக்கப்படுதலும் இங்கு வருடம்தோறும் நடைபெறும் விழாக்களில் நிகழும் நிகழ்வாகும்.

கூத்துவகைகளை மிகத் துலக்கமாகக் குறித்துரைக்கும் நாட்டிலக்கியங்கள் மட்டக்களப்பின் சொத்தாக விளங்குவதை. தமிழ் கூறும் நல்லுலகம் எடுத்துரைக்கும். வடமோடி, தென்மோடியென இருவகைப்பட்டு இலங்கும் இக்கூத்துக்களின் போது (விலாசம் பெரிது, பேணப்படாதது) மத்தளம், சல்லரி, சதங்கை ஆகியவையே பெரிதும் பயன்படுத்தப்படும். குறிப்பாகத் தென்தமிழீழத்தின் கலைக் களரிகளில் வீணையும், யாழும் பெறும் முக்கியத்துவத்தைவிட உடுக்கு, குழல், பறை, தம்பட்டம், சதங்கை, மகுடி, மத்தளம், சல்லரி இவைகள் பெறும் இடங்கள் முதன்மையானவை, தொன்மையானவை. இத்தகு வாத்தியங்களின் பின் பலத்தில் அண்ணாவிமாரும், பக்கப்பாடல் பாடுவோரும் சேர்ந்து வர்ணமெட்டும், துள்ளல் ஓசையும் கொண்ட வாளபீமன், அனுவுருத்திரன், அலங்காரரூபன் ஆகிய தென்மோடிக் கூத்துக்களைத் தரும்போது, ஆடாத மனமும், ஆடும், பாடாத வாயும் பாடும், சுவைதேடி மக்கள் வெள்ளம் கூடும். இந்தச் சிறந்த வாழ்வு சென்ற பத்து வருடங்களாக இம்மக்களில் இருந்து விடுபட்டுப் போயிற்று. கூத்தாடிய அவைக்களங்களில் இன்று அரச பயங்கரவாதத்தின் அடாவடித்தனம் தலைவிரித்தாடி வருவதனால் கண்ணீரும் கவலையும், வேதனையுமே கலைஞர்களையும், மக்களையும் சூழ்ந்து நிற்கின்றன. கலையும் சிதைந்து, கலைஞர்கள் வாழ்வும் புதைந்து கலை வளரும் நிலை குறைந்து தென்தமிழீழ மக்கள் இங்கே வாடுகின்ற போதிலும் மக்கள் நெஞ்சங்களில் இக் கவிகளும், கலையுணர்வும் வாழ்ந்து வருவது ஈண்டு குறிக்கற்பாலது.

## மகுடி, கரகம், காவடியாட்டம்

மாசி வேளாண்மை அறுவடைமுடிந்து, சித்திரை வருடப் பிறப்பினோடு மகுடியும் - காவடியாட்டமும் - கரகமும் தென்தமிழீழத்தின் கிராமங்கள் யாவற்றிலும் ஆரம்பமாகும் கலைக்காலங்களாகும். குறிப்பாக மகுடி இரண்டு விதமாக இங்கு வளர்க்கப்பட்டுள்ளது. பாம்பாட்டிகள் மகுடி (ஒரு வகைக்குழல்) ஊதுவர், அதற்கேற்ற வகையில் பாம்பு நெளிந்தாடும். இதைக் காணக் கிராமத்து மக்கள் கூடுவர். அவர்களிடையே பாம்பாட்டி தன்னிடமுள்ள வெள்ளெருக்கு வேரையும், விசக்கல் என்று

அழைக்கப்படும் கல்லையும் பாம்பு விடத்தை அகற்றவல்ல மருந்துகள் என்று விற்பார். இவற்றை மக்கள் பணம்கொடுத்துப் பெறுவார்கள். இங்ஙனமாகப் பாம்பாட்டுபவர்கள் அழிகம்பை என்ற கிராமத்திலேயே (ஆலையடிவேம்பு உதவி அரசாங்க அதிபர் பிரிவு) இப்போதும் உள்ளனர். இன்றைய போர்க்காலச் சூழலிலே இவர்கள் தம் வாழிடத்தை விட்டு புலம் பெயர்ந்து விட்டாலும் மகுடியும், பாம்பும் அதன் ரசனையும் இவர்களுடனேயே உறைந்திருக்கின்றன.

இதற்கடுத்தவிதமான மகுடி வித்தை என்பது. அம்பிளாந்துறை, வந்தாறுமூலை, கிண்ணையடி, மொறக்கொட்டான்சேனை. பள்ளிக்குடியிருப்பு ஆகிய இடங்களில் இன்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன்பு நடைபெற்று வந்த கலை நிகழ்வாகும். வைகுந்த அம்மானையில் வரும் கதையையும், அக் கதாபாத்திரங்களின் நடவடிக்கைகளையும் குறிக்கப்பட்ட சில கலைஞர்கள் கூடி கலை வடிவமுறச் செய்து அவற்றை நிகழ்த்தி வருவர். இதற்கு மத்தளம், சல்லரி, குழல், சதங்கை ஆகியன வாத்தியங்களாகப் பயன்படுத்தப்படும். புராண இதிகாச கதைகளை அவரவர் விரும்பும் வகையில் யாத்து தெருக்கூத்தாக ஆடிவருதலும் இம் மகுடி நிகழ்வின் முடிவில் அம்மனுக்குப் பொங்கலிடுவதும் வழக்காயுள்ளன.

சமய நிகழ்வு போன்று நடத்தப்படும் நிகழ்வாகவே இது நிகழ்வதை நாம் கண்டு களித்திருக்கின்றோம். இம்மகுடி வைபவம் முழுக்க முழுக்க கிராமியக் கிண்டல் நிறைந்த பாணியிலே அமைவது நோக்கத்தக்கதாகும். இது தவிர்ந்து கரகமும், காவடியாட்டமும் வைகாசி முதல் ஆடிமாதம் வரை ஆலயங்களில் திருவிழாக்களில் நடைபெறுகின்ற கலைவடிவமாகும். உள்ளூரில் வதியும் கலைஞர்கள் இதற்கான பாடல்களை யாத்துதத் தமக்கு விளைந்த வகையில் பழகிவருவர். பழகிய கலைவடிவங்களை மக்கள் முன்னால் நிகழ்த்தும் அரங்காக ஆலயங்களில் வரும் திருவிழாக்கள் பயன்படும். சிறுவர்கள், வாலிபர்கள், பெண்கள் அனைவருமே இதில் பங்கு கொள்ளுவார்கள். இன்றும் தென்தமிழீழத்தின் சகல பிரதேசங்களிலும் கோலமழியாது கரகமும், காவடியும் வாழ்கின்றன. போர்க்காலச் சூழலிலும் கூட வசந்தன் கோலாட்டம் தவிர்ந்த கரகமும், காவடியாட்டமும் சைவ சமய ஆலயங்களில் சுவாமி உலாப் போகும் வேளையில் நிகழ்த்தப்பட்டு வருவதைக் காணலாம்.

## கொம்பு விளையாட்டு

வடசேரி, தென்சேரி என்று மக்கள் இரண்டு பிரிவினராகப் பிரிந்து நின்று மழையில்லாத போதும், அம்மை மலிந்துள்ள காலத்திலும் அம்மனுக்கு நேர்த்தி வைத்து மிகுந்த பயபக்தியுடன் வெகு கோலாகலமாகச் செய்யும் மகிழ்ச்சி நிறைந்த வைபவம் கொம்பு விளையாட்டாகும். கண்ணகி கோவலன் ஆகிய இரு கதாபாத்திரங்களின் பாற்பட்டு, கோவலன் பக்கத்து சார்புடை

யார் வடசேரியென்றும், கண்ணகி பக்கத்துச் சார்புடையார் தென்சேரியென்றும் பிரிந்துபட்டு இவ்வைபவத்தைச் செய்வது காலம் காலமாகத் தொடர்வதாகும். தென்தமிழீழத்தின் மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டத்திலுள்ள கிராமங்களிலும், திருகோணமலை மாவட்டத்தில் ஈச்சலம்பற்று. பள்ளிக்குடியிருப்பு (மூதூர் பிரதேசம்) திரியாய், தம்பலகாமம் ஆகிய இடங்களிலும் இற்றைக்கு இருபது வருடங்களுக்கு முன்பு இந்நிகழ்வில் முன்பு இரண்டு மூன்று வருடங்களுக்கொரு முறை நடைபெற்று வந்ததாகிய இவ்வைபவம் தொடங்கிய முதல் நாளில் போர்த் தேங்காய் அடிக்கும் நிகழ்ச்சி அங்கு நடைபெறும். வடசேரி, தென்சேரி (என இரு திறத்தாரும்) ஒருவருக்கொருவர் விட்டுக்கொடா வகையில் தேங்காய் அடித்தாலும், தென்சேரிக்காரரே முதல் நாளிலும் இறுதி நாளிலும் வெல்லுவர் என்ற மரபு முறையைத்தழுவி ஒருவருடன் ஒருவர் ஏற்றவாறு இயைந்து சிறப்புற வைபவத்தைத் தொடங்குவர். இடங்களின் தன்மையை ஒட்டி இந்நிகழ்வு பத்து நாள், ஏழு நாள், ஐந்து நாள் என நடைபெறும்போது ஒவ்வொரு தின இரவிலும் வடசேரி, தென்சேரிக்காரர் கொம்பிழுப்பார்கள்

*''ஆற்றோரம் சிறாம்பி கட்டி*
*அங்கே நின்ற படை பொருது*
*வேர்த்து வாறான் தென்சேரியான்*
*வெள்ளிமடல் கொண்டு வீசுங்கடி'*

என்றவாறான பல பாடல்களைத் தென்சேரி அணி தமைப்புகழ்ந்து பாடிய வண்ணமும், வடசேரியினரைச் சீண்டும் விதத்தில் அங்கநையாண்டி, வசை மொழிகள், இவைகளைக் கூடியபாகம் கூறியவாறும் இருக்கையில்.

*''ஆற்றோரம் போறமயில்*
*ஆண்மயிலோ அது பெண்மயிலோ*
*பார்த்துவாடா வடசேரியான். நல்ல*
*பாலைப்பழம் போல மாலைதாறன்''*

என்று வடசேரியார் தமைப்பற்றி புகழ்ந்தும் தென்சேரியை நையாண்டி செய்வதுமாக;

*''வடசேரியான் கொம்பு எங்கே எங்கே*
*வளமுள்ள தாழைக்கு மேலே மேலே*
*தென்சேரியான் கொம்பு எங்கே எங்கே*
*தெற்கு வைக்கல் போறைக்கு உள்ளே உள்ளே''*

என்றவாறு ஒருவருக்கொருவர் *சீண்டியிழுக்கும்* நையாண்டி *நிகழ்வுகளின்* முடிவில் தென்சேரிக்கே வெற்றிவாய்ப்பு ஏற்படுத்தும் மரபு பேணப்படும் வண்ணம் தென்சேரி வெற்றி பெறும். நாட்டுச் சனங்கள் ஒன்றுகூடி கண்ணகிக்குக் காவியம் பாடி பூசையும், பொங்கலும் செய்து மகிழ்வர்.

கண்ணகித் தேவியின் பக்கம் வெற்றி ஏற்படும்போது மாத்திரமே நோய் பெருகாது. மாரி குன்றாது பெய்யும். மக்கள் நலமுற வாழ்வர் என்ற கருத்துக் காலம்காலமாக இங்கு வேரூன்றியிருப்பதாகும். — ஆனால் இன்று இத்தகு வைபவங்கள் நிகழ்வது இல்லை, மக்கள் மனதில் குடிகொண்டிருந்த மகிழ்ச்சி அலைகளும், நம்பிக்கை நிலைகளும் குலைந்து போயிற்று இந்நிலை என்று மாறும் என்ற மனக்கவலையில் தோய்ந்துள்ளது தென்தமிழீழம்.

## தேவதை வழிபாடு, வாய்மொழிப்பாடல்

தென்தமிழீமெங்கும் சிறப்புத் தெய்வங்களாக விளங்கும் வயிரவர், நாயன்மார், சித்தர்கள் ஆகியோருக்கான வழிபடு காவியங்களும், அகவல்வல்களும், நெஞ்சிலே நிலைத்திடும் கலைவண்ணமாகும் மந்திரச் சொற்றொடர் நிறைந்த வாய்மொழிப் பாடல்கள் பல நூற்றாண்டு காலமாக இம்மக்களினால் ஏற்றிப் போற்றப்பட்டுவருவனவாகும். இப்பாடல்களை (அகவல்) பாடியும் உடுக்கு ஒலி எழுப்பி மந்திரங்கள் சொல்லி ஒருவர் அல்லது இருவர் வழிபடு முறைமைகள் செய்யும் வேளையில் அவ்வொலி கேட்டு உருவேறி பலர் ஆடுதலும், குரவையிடலும், குறிசொல்லுதலும் இங்கு நிகழும் - இந்நிகழ்வைச் சடங்கு என்று இங்கு குறிப்பர். பொதுவாக வைகாசி, ஆனி மாதங்களில் இச்சடங்கு தென்தமிழீழத்து அம்மன் ஆலயங்களில் நடைபெறும். திருமலை மாவட்டத்தில் பாலம்போட்டாறு பத்தினியம்மன் ஆலயத்தில் இந்நிகழ்ச்சி மிகவும் சிறப்புற நடக்கும். இதுதவிர ஏனைய கிராமங்களிலும் மிகச் சாதாரணமாக நடைபெறும்.

*''கொட்டி முழங்கும் உடுக்கைச் சத்தம்*
*பம்பையொடு சதங்கையொலி*
*சட்டிகளில் நிறைந்த தயிர்*
*பாற்சோற்றில் மிதந்துவர*
*மெட்டிகையாம் தாமரையில்*
*வீற்றிருந்த பார்வதியாள்*
*பாலம் போட்டாறறில் வந்தாள்*
*பத்தினியாய் கோலம் கொண்டாள்''*

என்று காவியம் பாடி மக்கள் வைகாசி மாதத்தில் அம்மனுக்கு குளிர்த்தி செய்வது நீண்டகால வழக்கமாகும்.

ஆயினும் திருமலை மாவட்டத்தில் காவியம் பாடும் முறைக்கும், மட்டக்களப்பு அம்பாறை மாவட்டத்தில் காவியம்பாடும் முறைக்கும் சில வேறு வேறுபாடுகள் உண்டு. காவியம் பாடிய புலவர்களும், காவியம் பாடப்பட்ட அதிற்குறிக்கப்பட்ட கிராமங்களும் மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டத்திலேயே இருப்பதும்; இருந்ததும்தான் இதற்குக் காரணமாகும். இதனால் சிலவழிபாடுகள் மட்டக்களப்பில் தேர்ச்சியுற்று விளங்கும். திருமலை மாவட்டத்து காவியங்களில் குளக்கோட்டனின் வரலாறும், குளக்கோட்டன் காலத்தில் பூசிக்கப்பட்ட கண்ணகி வழிபாட்டுத் தலங்களும் அவற்றின் தன்மை

யுமே குறித்துரைக்கப்பட்டிருக்கும் — ஆனால் மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டத்து மக்கள் இவ்வழிபாட்டை இதற்கு முன்னமே ஆரம்பித்தும், சிறப்புடன் வழிபட்டும் வந்துள்ளனர், என்பதும் — கண்ணகி வழிபாட்டை மிகுந்த சிரத்தையுடன் அநுட்டித்து வந்துள்ளமையும், அதற்கான கிரியை முறைகள் தனியானதோர் வழிபடு முறையாகவிருந்ததென்பதும், இச்சடங்குகளை நேரில் பார்ப்பவர்கள் உணர்ந்தும் புரிந்தும் கொள்வர். இப்பிரதேசங்களில் பெரும்பாலும் வயிரவருக்கும், அம்மனுக்கும் வழிபாடு செய்வதும் இரவில் வயிரவருக்குப் பூசையும் மறுநாள் அம்மனுக்கு குளிர்த்தி பாடி வழிபாடு செய்வதும் இங்கு வழக்கம். திருமலை மாவட்டத்தில் பெரும்பகுதிகளில் இவ்வாறு பூசையாற்றும் வழமை இருப்பதில்லை என்பது காண்பவர் புரிந்துகொள்ளக்கூடிய விடயமாகும்.

## ஒப்பாரி, மாரடித்தல் ஆகிய இறுதிக் கிரியைகள்

முழுக்க முழுக்க பெண்களே கலந்துகொள்ளும் நிகழ்வுகளில் தாலாட்டு குரவை கும்மி, ஒப்பாரி மாரடிப்பு ஆகிய முதன்மையானவை. சீனடியும், சிலம்பு விளையாட்டும், மல்யுத்தமும் தென்மோடிக் கூத்தும், மழைக்காவியமும், விடம்தீர்க்கும் மருத்துவமும். எப்படித் தென்தமிழீழ மக்களின் தனித்துவச் சொத்தாகுமோ அவ்வண்ணமே தென்தமிழீழப் பண்பைத் தாலாட்டு, கும்மி, ஒப்பாரி, மாரடித்தல் நீண்டநாளாய் பொருந்தி வருவருகின்றது சேமக்கலமும் துப்பற்படிக்கமும், பாக்கு வெட்டியும் ஆக்கியவர் பெயர் தெரியாத குழந்தைகளான நாட்டுப் பாடலும், வாய் மொழிகளும் இன்றும் தென்தமிழீழப் பாட்டிகளைத் தொட்டுத் தழுவிவரும். இங்கே குறிக்கப்பட்ட பாடல்களைச் செவிவழியாகச் சேகரித்துத் தந்தவர்களும் இவர்களேதான். இத்தகு கௌரவத்திற்குரியவர்களின் பண்பாட்டு முதிர்ச்சியில் விருந்தோம்பலும், வருந்துயர வேளையில் அத்துயரோடு கலந்து ஆறுதல் கூறுதலும் தோய்ந்து இருக்கும் பண்புகள் என்பதற்கு அன்னமிடும் உள்ளத்து வண்ணமிகு எண்ண ஒப்பாரிகள் கட்டியம் கூறுவனவாம்.

மனிதன் பிறக்கிறான், வளர்கிறான் இறக்கிறான். அவன் வாழ்வு காற்றோடு கரையாமல் காக்கும் நடுகல்லாக இருப்பவை இவ்வொப்பாரிகள் தான். வாழ்ந்த வாழ்வின் சிறப்புகளைக் கூறி, பிரிவாற்றாது துயரப்படும் மனதுக்கு ஊட்டம் தரும் மநுக்குலத்து மகத்துவம் இவ்வொப்பாரிகள் தான். கூடவிருப்போரும், அவனின் வாழ்வால் வாழ்ந்தோரும் கூட வாழ்வின் சரிதத்தை மறந்து போனாலும் தனக்கு உப்பிட்ட நன்றியை உயிர் உள்ளவரை நினைத்துக் காலம் காலமாகச் சொல்லி வெதும்பும் மூதாட்டிகளின் பாடல்களில் இலக்கியநயம் நடனமிடும். ஏழை மக்களின் படைப்பானதும் அவர்களூடாகவே மிக அதிகமாக வளர்க்கப்பட்டதும், தென்தமிழீழத்தின் தேசியச் சொத்தானதுமான இக்கலை பண்பாட்டுப் பாரம்பரியங்களில் மிக அதிகமாக இன்று பேணப்படுவது ஒப்பாரிகள் தான். போராட்டச் சூழலில் எங்கும் அழிவுகள் ஏற்பட்டு வரும் இந்நிலையில் எல்லோர் வீட்டிலும் மாறிமாறிக் கேட்கும் இந்த அழுகுரல் ஓசைகள் நெஞ்சைப் பிளக்கும். துயரத்தின் விளிம்புக்கு எம்மை இட்டுச்செல்லும்.

''வானத்து நிலவாக வளருமென்று நானிருந்தேன்
வண்ண நிலவுக்கு வந்தவகை மாயமென்ன
சாய்ந்தாடு மகனே எண்டு சந்தனமாய் வளர்த்தபிள்ளை
ஒய்ந்து கிடக்கக் காரணம் எது தாயே
கும்பத்து மாரியம்மன் கோயிலிலே நான் கிடந்து
என்குலத்துப் பிள்ளை தரவெண்டு வரம்கேட்டு
பெற்ற பிள்ளை கண்மணிகாள், கண்ணுறங்கிப் போனதுகா.
ஐயோ மகனாரே ஆரட்ட நான் போவேன்''

என்று பிள்ளையின் அருமையையும் பெருமையையும் கூறித் தாயும், மாமியும் (பெண்கொடுத்த) அழுவதும், ஈமச்சடங்குகளை மனைவியின் பெற்றோர் கவனிக்கும் மரபும், எட்டுநாள் வரையில் கிராம அல்லது உற்றார் கூடியே உணவு மற்றும் செலவுகளைப் பொறுப்பேற்று நடத்துவதும் இம் மண்ணிலுள்ள மக்கள் மரபாகும். இன்றும் இருக்கும் இவ்வரிய பண்புகளை தமிழீழத் தேசியத்திற்குத் தருவது இக்கலை பண்பாட்டு வாழ்வே. இத்தகு கனிந்த வாழ்வை வாழும் எமது இனம் உயர இக்கலை பண்பு வடிவங்கள் சீராகத் தழைத்து ஓங்கவும் நாம் முயலுவோமாக. □□

□ □ □

## யாழின் வரலாற்றுப் பின்புலம்

சரித்திரக் கால எல்லைக் கெட்டாத காலத்திலே வில்லியாழ் எனப் பெயரிய குழவியாயுதித்து, மழலைச் சொற்பேசி, இடையர் இடைச்சியரை மகிழ்வித்துச் சீறியாழ் என்னும் பேதைப் பருவச் சிறுமியாகி பாணனொடும் பாடினியொடும் நாடெங்குந் திரிந்து ஏழைகளும் இதயங்களில் பெய்த இன்சொற் கூறிப் பின்பு பேரியாழ் என்னும் பெயரோடு பெதும்பைப் பருவமெய்திப் பெரும் பாணரொடு சென்று, குறுநில மன்னரும் முடிமன்னரும் தமிழ்ப் புலவரும் கொடைவள்ளல்களும் கேட்டு வியப்பெய்தும் வண்ணம் நயம்பட உரை பகர்ந்து அதன்பின் மங்கைப் பருவமெய்தி அப்பருவத்திற் கேற்ப புதிய ஆடையும் அணிகலமும் பூண்டு நாடக அரங்கத்திலே திறமை காட்டி மடந்தைப் பருவம் வந்து எய்தலும், திருநீலகண்டப் பெரும்பாணரொடும் மதங்க ஆளாமணியாரோடும் அம்மையப்பர் உறைகின்ற திருக்கோயில்கள் பலவற்றை வலம் வந்து தெய்வ இசையினாலே அன்பருள்ளத்தினை உருக்கி, முத்தமிழ் வித்தகராற் பாராட்டப்பட்டு, அரிவைப் பருவம் எய்தலும், அரசிளங்குமரிகளுக்கு இன்னுயிர்ப் பாங்கியாகி...... நின்ற யாழ் என்னும் மென்மொழி நங்கை.....''

— **விபுலானந்த அடிகள்**
''யாழ். நூலில்''



# பெறுமானம் அல்லது நம்மைப்பற்றிய சுய விமர்சனம்

கல்வயல்
வே. குமாரசாமி

சீனப் பருந்தும் கழுகும்
தமிழீழ வானத்தின் உச்சியிலே வந்து வந்து
வட்டமிடும்.
வானத்தில் வட்டமிட்டுக் குண்டுகளை எச்சமிடும்;
ஈனக் குரல்கள், இடிபாடு, தாக்கங்கள்
தானே வழி அறியாத் தன்மை
உயிர் பறிப்பில் போன கவலைக் கணக்கை
மனம் வரையும்.

சன்னம் வரைந்த சரித்திரத்தைச்
சிங்களமோ இன்னும் புரியாத மாதிரியே பேசும்.

'தமிழரின் துயரம் தீர்க்கத் தலைமையைத் தாரை வார்ப்பேன்'
அமுதமாய் அறிக்கை
அற்ப ஆயுளில் அடக்கமாகும்.

வீரக் கிளையில் இருந்து விழுது விடும்
வாரிசுகள்; எங்கும்
வரலாற்றுப் பேனாமை செங்குருதி ஆக
சில பாடல் புதிது எழுதும்
சன்னம் வரைந்த தழும்பு மரங்கள்

''இதோ என்னடிக்குக் கீழே பார்!
இங்கே விழுந்திறந்து
முன்னோடியான முதிரா இளங்கொடிகள்''
என்று உரைக்கும் மௌன மொழி இரங்கல்;
அர்த்தங்கள்,
பின்னும் புதிய இணைப்புத் தழுவல்கள்

விண்ணில் சுழலும் பருந்தும் கழுகுகளும்
மண்கருக எச்சமிடும் வேளை; மனம் கலங்காப்
பன்னிரண்டு ஆண்டும் நிறையாப் பசுங்குருத்து
முன்நின்று எதிர்க்கும்
அவை முன்னால்
குண்டு எச்சமிடும்.
கீழே நுழைய நிலத்தில் குழிதோண்டிக்
கீரி, மரணாய், கிழப்பூனை யாதொன்றும்
ஊரெல்லைக் குள்ளே வராமல்
உறுதியுடன் போராட
இங்கே புலிக்குட்டிக் கூட்டங்கள்
ஏராளமாக எதிர்பார்த்துக் காத்திருக்கும்.

இந்த நினைப்பே எழாதபடி
ஈழத்தில்;
சந்தை நடக்கும்
சமயத்துக்கேற்றபடி அந்தவிழா, இந்தவிழா
ஆரோ எவருக்கோ பந்தம்
பிடிபபோர் எடுக்கும் அணிவிழா
சொந்தவிழா, சடங்கு, சோடிப்பு
என்றெல்லாம் கொண்டாட்டம்
கூத்து. குதூகலிப்பு நித்தியமும்;
சண்டை ஒரு பக்கம் சலிபபற்றதோா வாழ்வு
உண்டு ஆறிக் கொஞ்சம் உறங்கவே நேரமில்லாத்
தொண்டும், உழைப்பும், துறைதுறையாய் நாமிங்கே
வாழப் புதிய வழிகள்
எமது தமிழ் ஈழம் மகிழும் இனிது
இதற்குரிய
காரணரை யாரும் கருத்தூன்றிப் பார்த்தோமோ? □□



1991-ம் ஆண்டு நடைபெற்ற முத்தமிழ்விழா நிகழ்ச்சிகள்.

தென்மராட்சியில் *10-06-1991*ல் நடந்த முத்தமிழ்விழாவின்போது தமிழீழத்தின் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்கள் மாமனிதர் விருது வழங்கும் நிகழ்ச்சியின்போது நேரில் தோன்றி தமிழீழ மக்களுக்கு வணக்கம் செலுத்தும் காட்சி.



மேற்படி விழாவின் போது தலைவர் மற்றும், விடுதலைப்புலிகளின் மூத்த உறுப்பினர்கள் மேடையில் அமர்ந்திருக்கும்காட்சி.



1991ல் விடுதலைப்புலிகள் கலை பண்பாட்டுக் கழகம் நடாத்திய முத்தமிழ் விழாவின் அலங்காரவளைவுகளில் ஒன்று.



வடமராட்சியில் அமைக்கப்பட்டுள்ளமாவீரர்துயிலும் இல்லத்தின் ஒரு தோற்றம்.

*1991ல் இடம்பெற்ற ஆனை யிறவுப் போரில் ஒரு காட்சி.*



**ஆனையிறவுப் போரில் காயப்பட்ட போராளி ஒருவருக்கு களத்திலே மேற்கொள்ளப்படும் முதலுதவிச் சிகிச்சை.**





விடுதலைப்புலிகள் கலை பண்பாட்டுக் கழகத்தின் தயாரிப்பில் உருவான ''சந்தனக்காடு'' நாடகத்தில் ஒரு காட்சி.

''சந்தனக்காடு'' நாடகத்தின் 60 வது மேடையேற்றத்தின் போது விடுதலைப்புலிகள் மகளிர் படைப் பிரிவின் விசேட தளபதி செல்வி ஜெயந்தியிடம் இருந்து பெண் கலைஞர் திருமதி கலா கருணானந்தசிவம் விருது பெறும் காட்சி.



சேர சோழ பாண்டிய ரெல்லாம்
ஆர வளர்த்த ஆயே வாழ்க!
ஊரும் பேரும் தெரியா தவரும்
பாரோர் அறியச் செய்தாய் வாழ்க!

— பாரதிதாசன்

# தமிழீழத்தில் தமிழுக்கு விழா

## எதிர்ப்பக்க ஓவியம்

ஓவியர் தயா

ஊழிக் கூத்தில் உடல்கள் சிதைந்தன
உருக் குலைந்தது இருதயம்; அஞ்சிப் போய்
ஓலமிட்டன காக்கைகள்; நாய், நரி
ஊளையிட்டன; குருதி பொழிந்தது.



# அதிர்வு

சாந்தன்

காலையில் திறந்த நேரத்திலிருந்து கடையில் வியாபாரமும் அதிகயில்லை.

வழமையிலும் பார்க்கத் தெருவில் போக்குவரத்து அதிகரித்திருந்தது. பயமும் பரபரப்பும் பதட்டமுமாய்ச் சனங்கள்......

வடக்கே வெடிக்கும் குண்டுகளும் வானில் உறுமல்களுமாய் விறகும் பிரச்சனை! கொஞ்ச நாட்கள் நிலவியிருந்த சாதாரண நிலை மாறிவிட்டது...!

சாதாரணம்! எது சாதாரணம்? எது அசாதாரணம்? — பொன்னையனுக்குச் சிரிப்பு வந்தது.

போகிறபோக்கில் மத்தியானத்துடன் கடையைப் பூட்டவேண்டும் போலிருக்கிறது.

இடைக்கிடை மோட்டார் சைக்கிள்களும் போகின்றன — மண்ணெண்ணைப் புகை வந்து மூக்கில் படுகிறது. ஒன்றில் ஆறு பேர் — குஞ்சு குழந்தைகளுடன் சேர்த்து. இதுகளைக் கண்டாலும் ஹெலிக்காரன் அடிப்பானா?

பெரிய பாதையால் போகிற வாகனங்களைக் கலைத்து, ஹெலிகள் வேட்டுக்களைப் பொழிவது வடிவாகக் கேட்கிறது. இது. கொஞ்சம் அடக்கமான பாதை. என்றாலும் ஒதுக்கு என்றும் சொல்லிவிட முடியாது...

அநேகமான சாமான்களை விசாரித்தாவது பார்க்கக் கூடியதாக எட்டுப் பத்துக் கடைகள் இந்த இடத்தில். தொங்கலில் பொன்னையரின் கடை. அயலில் ஐந்தாறு பெரு மரங்கள், தெருவோடு. அந்த மறைவு ஹெலிக்காரன் கண்ணிலிருந்து காப்பாற்றும் என்றொரு நம்பிக்கை......

ஒரு சைக்கிளில் ஒரு இளைஞனும் ஒரு சிறுவனும் வேகமாகப் போகிறார்கள். பின்னால் ஒரு பெரிய பெட்டி, கட்டுச் சரியில்லாததால் வழுகி ஒரு பக்கம் இழுவுண்டு கிடந்தது. விழுமோ? ... கூப்பிட்டுச் சொல்லலாமா? சைக்கிள், கடையைத் தாண்டி விரைவாகப் போய்விட்டது.

சற்றுத்தள்ளி வட்டமிட்டுக் கொண்டிருந்த ஹெலி இப்போ கிட்ட வருவதாகப்படுகிறது ...

திடீரென மோகன் எங்கிருந்தோ அவசரமாய்ச் சைக்கிளில் வந்து கடைப் படியில் கால் தேய ஊன்றி நிறுத்தினான்.

''இங்கதான் வாறான் '' என்றபடி அவதியுடன் சைக்கிளைத் தூக்கி விறாந்தையில் விட்டான்.

தெருவில் போனவர்களும் சடபட வென்று பயந்து ஒதுங்கி
ஹெலி கிட்டிப் பதிவது கேட்கிறது...

பொன்னையர், லாச்சியைப் பூட்டித் திறப்பை எடுத்தார். முக்காலியைப் பின்னால் தள்ளினார். மேசையடியில் புகுந்துகொண்டால் சுட்டாலும் பயமில்லை . 'மேலை வடிவா ஏறி நில்.. சைக்கிளையுந் தள்ளி விடு...''

தெருவில் இரண்டுபேர் அவசர அவசரமாக ஓடி மறைவது தெரிகிறது. எங்கே போகிறார்கள்? ஹெலி, இப்போது வலு கிட்ட.

கண்ணாடி போட்டிருக்கிற ஒரு தடியன், சைக்கிளைத் தெருவின் எதிர்ப்பக்க மதிலோடு சாத்தியதும் சாத்தாததுமாகப் போட்டுவிட்டுக் குதித்து, சில்லுக்கட்டி விட்டிருந்த சேனாதியின் வண்டிலுக்கும் மதிலுக்குமிடையில் அவசரமாய்க் குந்திப் பதுங்குவது தெரிகிறது. இந்த நேரத்தில் காற்சட்டை. சேட்டு ஊத்தை யாவதைப் பார்க்க முடியாதுதான்...

சேனாதி, காலையில் வந்த கையோடு மாடுகளை இந்தக் கடை வரிசைகளுக்குப் பின்னால் தள்ளியிருக்கிற வெறும் வளவுகளுக்குள் மேய விட்டுவிட்டு, வாடிக்கை ஏதும் வரும் வரையில் தேவுவின் தேத்தண்ணிக் கடை வாங்கிலிருப்பது வழமை .

ஹெலி, விலகிப்போவது மாதிரி ஆனால் இப்போது அதென்ன, கூட? இன்னொன்று?

திடீரென ஒரு காக்கிநிற வாகனம் விரைந்துவந்து, சடாரென பிறேக் பிடித்து வண்டிலின் முன்னால் வெட்டியொதுங்கி நின்றது .

பெடியள்!

பொன்னையருக்கு......
எட, எப்பன் முன்னை பின்னையாவது நிப்பாட்டியிருக்கலாம்.

ஹெலி, போகிறதா, வருகிறதா சத்தத்தை வைத்துக் கொண்டு சொல்லமுடியவில்லை. முக்காலியை இன்னும் தள்ளிவிட்டு மேசைக்கடியில் குந்தினார். முன்னால் நின்ற மோகன் பாண் அலுமாரிக்கும், சுவர் றாக்கைக்குமிடையில் பதுங்கியபடி கூரையைப் பார்ப்பது தெரிகிறது...
ஓட்டுக் கூரை.

சத்தம் விலகிப் போகிறது.பொன்னையர், தலையை இடித்துக் கொள்ளாமல் எழுந்தார்.

அந்த வாகனத்தை ஓட்டிவந்த பெடியன் இறங்கி, அதன் முன் கதவைப் பிடித்துக்கொண்டு நிற்கிறான். அருகிலிருந்தவன் இறங்காதிருப்பது தெரிகிறது.

''தம்பி, இதிலை கொண்டந்து நிப்பாட்டினா? ...''

''பொன்னையர் இங்கிருந்து கேட்கிறார். குரலில் ஒலித்தது கோபமா, முறைப்பாடா?

''கோவியாதையுங்கோ, ஐயா .. அவசரம் ... இந்தா எடுக்கிறம் ...''

ஹெலி தள்ளிப்போவது மரங்களுக்கிடையால் தெரிகிறது. அவன் மீண்டும் ஏறுகிறான்.

இயந்திரம் இயங்க மறுக்கிறது! இதென்ன சங்கடம்? ஹெலிக்காரன் திரும்பி வந்தால்?

வண்டியின் கீழ்ப் பதுங்கியிருந்த கண்ணாடிக்காரன் எழுந்துவந்து கைகளைத் தட்டித் துடைத்தவாறே சைக்கிளிடம் போவது தெரிகிறது. அதை வடிவாக எடுத்துவிட்டு, முன்னால் வந்து அவன் கேட்கிறான்;

''தள்ளவேணுமா, தம்பி?''

''ஓமண்ணை, தயவுசெய்து...... ஒருக்கா ''

அந்தாள் வந்து வானைத் தொடவும் முன்னாலிருந்த மற்றப்பெடியனும் இறங்கி ஓடி வருகிறான். அவனது வலது கை மடித்துக் கட்டியிருக்கிறது. கட்டுத்துணி இரத்தத்தில் ஊறிக்கிடக்கிறது. இடது கையால் தள்ளுகிறான். வாகனம் மெல்ல நகர்கிறது.

ஹெலி திரும்ப வருவதற்குள் இது போகட்டும் .....

''வா, தள்ளி விடுவம் ... ...'' —பொன்னையர் மோகனைக் கூப்பிடுகிறார்.

கண்ணாடி ஆளுக்கும், ஒற்றைக் கையால் தள்ளும் பெடியனுக்கும் நடுவில் நின்று தள்ளும் போது பின் கண்ணாடிக்கூடாக வாகனத்தினுள் என்ன இருக்கிறதென்று தெரிகிறது!

இன்னும் மூன்று பேர்! காயக்காரர், கடுங் காயம். இரண்டு பேருக்கு அறிவில்லைப்போல பாவம் வலு இளம் பெடியள்......

அதில் ஒருவன், அந்த ஸீற்றில் கிடப்பவன் .....?

—''இல்லை, அது ஜெகனில்லை. அவன் சுவிஸில், இது யாரோ, வேறு யாரோ, அவனைப் போல, அதே மாதிரி, அதே வயது......''

காலடியில் மண் புழுதியும் மஞ்சள் வாகைப் பூக்களும் மிதிபடுகின்றன.

இயந்திரம் இயங்கத் தொடங்கி விடுகிறது பெடியன் ஏறிப்போய் ஏறிக்கொள்ள, செலுத்துபவன் பின்னால் திரும்பி,

''நன்றி அண்ணை ... வாறம் .. ஐயா ..'' என்று கைகாட்டுகிறான். கண்ணாடி ஆளும் கைகாட்டுகிறான். வாகனம் நகர்ந்து விரைகிறது.

பொன்னையர், மோகன் பின் தொடரக் கடைக்குள் ஏறினார்.

''அண்ணை அந்தப் பெடியளிலை ஒருதனைப் பாத்தியளே, சரியா உங்கட சின்னவன் மாதிரி...''

முக்காலியை இழுத்துக் குந்தப் போனபோது ஹெலி மீண்டும் நெருங்குவது கேட்கிறது.

''அண்ணை, வாறான்... கண்டிட்டான்களோ?...''

தெருவில் இப்போது கண்ணாடிக் காரனும் இல்லை.

''இனி இந்தப் பெடியன் எங்கை போய் நிப்பாட்டுவாங்கள்? உங்காலை மரங்களுமில்லை மறைவுமில்லை.....'' பொன்னையர் கேட்கிறார்.

''றிவேசிலை திரும்பி வரேலாதே?''

ஹெலி கிட்டுகிறது.

அடுத்த சந்தியில் காது செவிடுபட வெடியோசை. அதிர்கிறது. தொடர்ந்து சூடுகள் கடவுளே......

''கிரனேட் அடிக்கிறான், அண்ணை......''

''கண்டிட்டானோ? போன பக்கந் தானே கேட்குது?''

தன் கருமம் முடிந்த பாங்கில் ஹெலி......

''ஒருக்கா இருந்து கொள்...... என்னெண்டு பாத்திட்டு இந்தா வந்திட்டன் '' — என்றார், பொன்னையர், மோகனின் சைக்கிளைத் தெருவில் இறக்கியபடி.

□□

● ● ●

தென்றலும் தமிழரும்

தென்றல் என்றால் தனியே அதற்கொரு சுகந்தமுண்டு. வசந்த காலத்தில் தெற்கிலிருந்து அசைந்து வரும் தென்றலின் சுகத்தை நன்றாக அறிந்தவா தமிழர். வடக்கிலிருந்து வரும் குளிர்காற்றை வாடை என்றனர். தெற்கிலிருந்து வரும் இளங்காற்றைத் தென்றல் என்றனர். வாடை என்ற சொல்லில் வன்மையுண்டு. தென்றல் என்ற சொல்லில் மென்மையுண்டு

ரா. பி. சேதுப்பிள்ளை

# தமிழீழத்துக் கிராமியப் பேச்சு வழக்கு

## புதியன புகுதலும் பழையன கழிதலும்



பேராசிரியர்
அ. சண்முகதாஸ்

உலகிலே தமிழ்மொழி போன்று சில மொழிகள் இலக்கிய வழக்கு — பேச்சு வழக்கு என்னும் 'இருவழக்குப் பண்பு' கொண்டனவாய் அமைந்துள்ளன. இவ்விரு வழக்குகளுள்ளும் பேச்சு வழக்கினையே மொழியியலாய்வாளர் முதன்மைப்படுத்தித் தம் ஆய்வுக்குட்படுத்தினர். பேச்சு வழக்கு இடத்துக்கிடம் வேறுபட்டதாக அமையும் பண்புடையது.

தமிழ் நாட்டிலே பேசப்படும் தமிழுக்கும் ஈழத்திலே பேசப்படும் தமிழுக்குமிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒலியடைப்படையிலே, ஒரு கருத்தினை ஏற்றுக்கொள்ளும் உடன்பாட்டுக் கூற்றாகத் தமிழ்நாட்டார் "ஆம்" அல்லது "ஆமா" என்று கூற ஈழத்தவர் "ஓம்" என்று கூறுவார்கள். இதனால், தமிழ்நாட்டுக் "காப்பி" ஈழத்திலே "கோப்பி" ஆகவும், "வாங்க" என்பது "வாங்கோ" எனவும உச்சரிக்கபபடுகின்றன.

சொற்களஞ்சிய அடிப்படையிலே தமிழ் நாட்டார் ''சர்க்கரை'' என்பது ஈழத்தில் ''சீனி'' ஆகின்றது. ஈழத்து வழக்கிலுள்ள ,'குழம்பு'', ''சொதி'', ''சம்பல்'' போன்றன தமிழ் நாட்டு வழக்கிலே காணப்படவில்லை. ''அவியல்'' என்பது ஈழத்திலும் கேரளத்திலும் மீனிலே செய்யப்பட்ட பாற்கறியாக அமைய, தமிழ்நாட்டிலே காய் கிழங்கு வகைகளிலே அமைந்த அவியலாகக் கொள்ளப்படும். இவ்வாறு ஈழத்தவர் பேச்சுக்கும் தமிழ்நாட்டார் பேச்சுக்குமிடையே பல்வேறு வேறுபாடுகள் காணப்பட்டமையை இனங்கண்டு அவற்றை விளக்குவதற்காக விபுலாநந்த அடிகள் ''சோழமண்டலத்துத் தமிழும் ஈழமண்டலத்துத் தமிழும்'' என்றொரு கட்டுரையினை எழுதினார்.

ஈழத்துத் தமிழிலேயே, வடபுலத்துப் பேச்சு வழக்குத் தென்புலத்துப் பேச்சுவழக்கினின்றும் வேறுபடுகின்றது. யாழ்ப்பாணத்து ''என்ன தம்பி'' என்னுந் தொடர் மட்டக்களப்பில் ''என்னம்பி'' ஆகின்றது. ''நாங்கள் என்ன செய்யிறது'' என்னுந் தொடர் ''நாம என்ன செய்யிற'' என்றமைகின்றது. வடதமிழீழத்தில் ''கத்தரிக்காய்'' தென்தமிழீழத்தில் ''வழுதுணங்காய்'' என வழங்கப்படுகின்றது. இன்னும் திருகோணமலை, வன்னி, மன்னார், தீவுப் பிரதேசம் ஆகிய இடங்களிலே அவற்றுக்கெனச் சிறப்பான சொற்களும், சொற்றொடர்களும் வழக்கிலுள்ளன.

இடவாரியாகப் பேச்சு வழக்கு வேறுபடுவது போல பட்டினத்துக்கும் கிராமத்துக்குமிடையே பேச்சு வழக்கில் பலவேறுபாடுகள் காணப்படுகின்றன. புதிய கோலங்களும் மோடிகளும் பட்டினத்தவரிடம் வேகமாகவும் பரவலாகவும் வந்தடைகின்றன. கிராமத்தவர்களிடம் இவை உடனடியாகப் போய்ச் சேர்வதில்லை. வளர்ச்சியடைந்த நாடுகளிலே கிராமம் அல்லது ஊர் என்று சொல்லக்கூடிய இடங்கள் அருகிக்கொண்டே வருகின்றன. ஈழத்திலே கிராமங்கள் பெருவாரியாக உள்ளன. ஆட்சிச்செயற்பாட்டுக்கு வசதியாக பட்டினம் எனப் பெயர் கொடுக்கப்பட்ட பகுதிகள் பல இன்னும் கிராமங்களாகவே உள்ளன. கிராமத்துத் தமிழ்ப் பேச்சு வழக்குத் தனித்துவமான சில பண்புகளுடையன.

கிராமத்துப் பேச்சு வழக்கிலே, பிறமொழிச் சொற்கள் விரைவிலே கலந்துவிடுவதில்லை. அப்படிப் பிறமொழிச் சொற்கள் கலப்பினும், அவை தமிழ்மொழி ஒலியமைப்புக் கேற்பவே உச்சரிக்கப்படுகின்றன. பட்டினத்தவர் உச்சரிக்கும் ''பஸ்'' கிராமத்தாரிடம் ''பசு'' அல்லது ''வசு'' ஆகவும் ''றைவர்'' ''இறைவர்'' ஆகவும், ''பிஸ்கற்'' ''பிசுக்கோத்து'' அல்லது ''விசுக்கோத்து'' ஆகவும் அமைந்து விடுகின்றன. பிறமொழிக் கல்வியாலும் வேறு பல காரணிகளாலும் பட்டினத்தவர் பேச்சிலே பிறமொழிச் சொற்கள் பெருவாரியாக, தமிழ் ஒலியமைதிக்கு இயையாதனவாக இடம்பெறுகின்றன. ஆனால், கிராமத்தவருடைய பேச்சிலே இடம் பெறுஞ் சொற்களோ தமிழ் ஒலியமைதிக்கு இயைந்தே அமைகின்றன.

கிராமத்துப் பேச்சு வழக்கிலும் இப்போது சில மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இம்மாற்றம் ஒலியமைதியில் இல்லை; சொற்களிலேதான். பல 'காலமாகக் கிராமங்களிலே பயின்று வந்த சொற்கள் இக்காலத்தில் மறக்கப்பட்டு, புதிய புதிய சொற்கள் அவற்றினிடங்களைப் பிடித்துவருகின்றன.

கிராமங்களில் சமையல் செய்யும் இடம் ''அடுப்படி'' அல்லது ''அடுக்களை'' என்றே வழங்கிவந்தது. சில கிராமங்களில், மரக்கறி உணவு சமைப்பதற்கு ஓரிடமும், மீன், இறைச்சி போன்றனவற்றை ஆக்குவதற்கு இன்னோரிடமும் அமைத்துக்

கொள்வதும் உண்டு. இவற்றை முறையே ''விரதக் கொட்டில்'' என்றும் ''மச்சக் கொட்டில்'' என்றும் அழைத்து வந்தனர். இப்பொழுது, பெரும்பாலான இடங்களில் ''குசினி'' என்னுஞ் சொல் ஆட்சி பெற்று வருவதைக் காணமுடிகின்றது. போர்த்துக் கேயருடைய ஆட்சிக் காலத்திலே பல போர்த்துக்கேய மொழிச் சொற்கள் தமிழர் பேச்சிலும் கலக்கத் தொடங்கின. அவ்வாறு கலந்த சொற்களுள் ஒன்று ''குசினி'' என்பதாகும். பட்டினப் பகுதியிலே பெருவழக்கில் இருந்த இச்சொல் கிராமத்துள்ளும் நுழையலாயிற்று. இப்பொழுது ஆட்சிபெறவுந் தொடங்கிவிட்டது. இது போலவே, ''திண்ணை'' அல்லது ''குந்து'' என அமைந்த வீட்டமைப்பின் ஒரு பகுதி இப்பொழுது ''விறாந்தை'' எனப் பரவலாக வழங்கப்படுகின்றது. ''விறாந்தை'' என்னுஞ் சொல்லும் நாம் போர்த்துக்கேய மொழியிலிருந்து பெற்றுக்கொண்டதொன்றாகும். வீட்டின் இன்னொரு பகுதியான வாயில் தொடர்பாக ''தலை வாசல்'', ''சங்கடப்படலை'' போன்றன கிராமிய வழக்கிலே இருந்து வந்தன. இவை இப்பொழுது வழக்கொழிந்து விட்டன. இவை வழக்கொழிந்து போனதும் ஒருவகையில் நன்று என்றே கூறவேண்டும். இவ்விரு சொற்களும் குறித்த பொருளின் பின்னணியிலே சமூக ஏற்றத்தாழ்வின் எதிரொலி உண்டு. ''சங்கடப்படலை'' பற்றி ஏற்கெனவே நான் எழுதிய ''டானியல் இலக்கியங்களிற் பேச்சுமொழி'' (தமிழோசை, தமிழ் மன்றம், யாழ். பல்கலைக் கழகம், 1987, பக். 22) என்னும் கட்டுரையிலே விரிவாகக் கூறியுள்ளேன். இப்பொழுதெல்லாம், ஆங்கில மொழிச் சொல்லாகிய ''கேற்'' கிராமப் புறங்களிலும் ''கேற்று'' என்ற வடிவில் வழக்கிலே வந்துகொண்டிருக்கிறது. ''வாசல்'', ''வாசல்படி'' என்பன இன்னும் வழக்கிலே இருக்கின்றன.

கிராமங்களிலே உண்கலம், நீர் குடிக்கும் கலம் எல்லாமே ''ஏதனம்'' என்ற சொல்லாலேயே வழங்கப்பட்டன. ஆனால், இப்பொழுது ''கோப்பை'' என்ற சொல்லே பெருமளவு வழக்கிலிருந்து வருகின்றது. ஆங்கிலச் சொல்லின் தமிழ் ஒலிக்கேற்ப அமைந்த வடிவமாகிய ''கோப்பை'' பெரும்பாலும் எல்லா வீடுகளிலுமே ஒலிக்கின்ற சொல்லாகிவிட்டது. பொருட்களைச் சேகரித்து வைக்கவும், பிற இடங்களுக்குக் கொண்டு போகவும் பயன்படும் பொருள் ''உமல்'' என்றே கிராமங்களில் அழைக்கப்பட்டு, பயன்பட்டும் வந்தது. இப்பொழுது ''உமல்'' தன் ஆயுளை இழந்து கொண்டு வந்து விட்டது. தோலாலும், சீலையாலும் பல்வேறு வகையான பைகள் இக்காலத்தில் நம்முடைய பயன்பாட்டுக்கு வந்த விட்டன. ''உமல்'' பெற்ற இடத்தை ''பை'' (சில சந்தர்ப்பங்களில் ''பாக்'') பிடித்துவிட்டது

பெண்களுடைய ஆடையணியுடன் தொடர்பான ''கொய்யகம்'', ''உடுத்தாடை'' போன்ற சொற்கள் கிராமத்திலும் இப்பொழுது வழக்கிழந்து வருகின்றன. சீலை கட்டும் பொழுது, அதன் மடிப்புகளைக் கொய்து முன்னாலே செருகிவிடல் அல்லது பின்னாலே செருகிவிடலைக் ''கொய்யகம்'' என்றனர். முன்னாலே செருகின் ''முன்கொய்யகம்'', பின்னாலே செருகின் ''பின்கொய்யகம்'' எனப்பட்டது. பெண்களின் ஆடை அணிகளிலே வேகமாக ஏற்பட்டுவரும் மாற்றமே இத்தகைய சொற்கள் வழக்கிழந்து போனமைக்குக் காரணமாகும்.

நீண்ட காலமாகக் கிராமப்புறத்திலே வழக்கில் இருந்து வந்த சில சொற்றொடர்கள், யாராவது மறைவாகத் தமக்குள்ளே பேசிக்கொண்டாலன்றி, வெளியாகப் பேசிக் கொள்ளும் வழக்கம் போய்விட்டது. நான் இங்கே குறிப்பிடுவது சமூக ஏற்றத்தாழ்வு தொடர்பாகப் பல காலம் பயன்பாட்டில் இருந்து வந்த சொற்றொடர்களேயாகும். எடுத்துக் காட்டாக ''வாய் நனைத்தல்'' என்னும் தொடரைக் குறிப்பிடலாம்.

இப்பொழுது இத்தகைய தொடர்களுக்கு இடமில்லாதபடி சமூக மாற்றங்கள் நிகழ்கின்றன. இவ்வாறு இவைகள் போயொழிய, காலத்தின் கோலங்களாக, சில புதிய சொற்கள் வந்து சேருகின்றன. குண்டுவீச்சு விமானத்தைக் குறிக்கும் ''பம்பர்'', ஹெலிக்கொப்டர் விமானத்தைக் குறிக்கும் ''ஹெலி'' போன்றவையும், பதுங்கு குழி என்னுந் தமிழ்த் தொடர் இருப்பினும் ''பங்கர் வெட்டல்'' எனப் பரவலாக பயன்படும் தொடரும் தமிழர் பிரதேசத்திலே நிலவிவரும் போராட்ட காலச் சூழ்நிலையின் விளைவுகளோடானவை. இவைபோன்று பல தொடர்கள் இக்காலச் சூழலுக் கேற்ப வழக்குப் பெற்று வருவதுடன் அவை இலக்கிய இடமும் பெற்றுக் கொள்கின்றன.

மேற்காட்டிய தரவுகளை அடிப்படையாகக் கொண்டு மொழியின் சில பண்புகளை நோக்கும் போது எம்முடைய வாழ்க்கையின் பல்வேறு கூறுகளிலே ஏற்படுவது போல் மொழியிலும் பழையன கழிதலும் புதியன புகுதலும் இயற்கையான நிகழ்வேயாகும். இவ்வாறு நிகழ்வதற்குப் பல காரணிகள் உண்டு. அரசியல், சமூக, பண்பாட்டு விழுமியங்களிலே ஏற்படும் மாற்றம் இத்தகைய நிகழ்வுக்குத் தலையாய காரணியாகி விடுகின்றது. எம்முடைய சமூகத்திலே, ஆண்பிள்ளை ஒருவன் ''கடுக்கண்ட', போதிலும், அதனைக் கொண்டாட்டமாக ஆக்குவதில்லை.

ஆனால், பெண்பிள்ளை ஒருத்தி ''சாமத்தியப் பட்டால்'' அல்லது ''புத்தியறிந்தால்'' அது கொண்டாட்டத்துக்குரியதாகிவந்துள்ளது. ஒரு பெண் கருத்தரிக்கும் வளமுடையவளாகி விட்டால், அவள் குடும்பத்துக்கும் சமூகத்துக்கும் புதிய உயிர்களைத் தருபவளாகிறாள் என்னுஞ் செய்தி கூட்டுக் குடும்ப காலத்திலே உவப்பாக இருந்தது. கால ஓட்டத்தில் இந்நிகழ்வு எக்காலத்தும் எங்கும் நிலவும் ஓர் இயற்கை நிகழ்வே. அதனை ஒலிபெருக்கி வைத்து ஊரெல்லாம் அறிவித்துக் கொண்டாட வேண்டிய தேவையில்லை என்னும் உணர்வு மக்களிடையே பரவ, அந்நிகழ்வு தொடர்பாக வழங்கி வந்த மேற்குறிப்பிட்ட சொற்றொடர்களும், ''குப்பைத் தண்ணிவார்த்தல்'', ''கொத்தாலே ஆலாத்தி'', ''புட்டாலே'' ஆலாத்தி எனப்படும் பல்வேறு வகையான தொடர்களும் வழக்கிழந்து போவது விந்தையான நிகழ்வல்ல. உலகின் பல மொழிகளிலே இத்தகைய பண்பாட்டு மாற்றத்தால் ஏற்படும் தாக்கங்களை மொழியியலாளர் இனங்கண்டு விளக்கியுள்ளனர்.

சில கிராமங்கள் அல்லது மக்க கூட்டங்கள் மொழின் சில பழைய தனித்துவமான கூறுகளைப் பேணி வைக்கும் பண்பினையும் காணக்கூடியதாயுள்ளது. இது வரலாற்றுத் தன்மை பொருந்திய பண்பாகும். பழந்தமிழ் மொழியிலே மூன்று வகையான சுட்டுக்கள் வழங்கிவந்தன. பேசுபவன் தனக்கு அருகிலுள்ளதைச் சுட்ட 'இ'யினையும், கேட்பவனுக்கு அருகிலுள்ளதைச் சுட்ட 'உ' வினையும், இருவருக்குமே தூரத்திலுள்ளதைச் சுட்ட 'அ' வினையும் சுட்டுக்களாகத் தமிழிலே பல காலமாகத் தமிழர் பயன்படுத்தி வந்துள்ளனர். யப்பானிய மொழி, துருக்கி மொழி, மொங்கோலிய மொழி ஆகியனவற்றிலே இவ்வாறு மூன்று சுட்டுகள் பயன்பட்டு வருகின்றன. ஆங்கிலம் போன்ற மொழிகளில் ''*This*'', ''*That*'' என இரண்டு சுட்டுக்களே இருக்கின்றன. தமிழ் மொழியிலே பயன்பட்டுவந்த இம் மூன்று சுட்டுகளுள், இன்று தமிழ் நாட்டிலே இரண்டு சுட்டுகள் மட்டுமே (இ,அ) பேச்சு வழக்கிலே பயன்பட்டு வருகின்றன. ''உழவன்'' ''உவர்'', ''உது'', ''உந்த', ''உவ்விடம்,, !'உப்பிடி'' எனவருஞ் சொற்களைத் தமிழ் நாட்டுப் பேச்சிலே மருந்துக்கும் கேட்கமுடியாது. ஆனால், ஈழத்திலே, யாழ்ப்பாணத்துக் கிராமங்களில் உந்தச் சொற்களை எந்நாளும் கேட்கலாம். பழையன கழிதலும் புதியன புகுதலும் தவிர்க்க முடியாத நெறி. மொழியும் இதற்கு விதிவிலக்கல்ல. □□

தமிழ் நாடே என் தாய்நாடே நீ
தமிழைச் சேர்த்தாய் எங்கள் உயிரில்
அமிழ்தைச் சேர்த்தாய் எங்கள் வாழ்வில்
தமிழ் நாடே நீ வாழ்க! வாழ்க!

எங்கள் தமிழுக்கு
நடக்கும்
விழாவுக்கு
நல்வாழ்த்துக் கூறுகின்றோம்

யாழ் மாவட்ட கூட்டுறவாளர்கள்

நாம் பேசும் தமிழ் மொழி!
நாமெல்லாரும் தமிழர்கள்!
மாம்பழம் அடடா மாம்பழம்
வாய்க்கினிக்கும் தமிழ்மொழி
தீம்பால் செந்தேன் தமிழ்மொழி
செங்கரும்பே தமிழ்மொழி
நாம் பேசும்மொழி தமிழ்மொழி!
நாமெல்லாரும் தமிழர்கள்!

முத்தமிழின் புகழ் ஓங்குக!

**யாழ் மாவட்ட தனியார் கல்வி ஒன்றியங்கள்**

இனிய தமிழே,
முத்தமிழே,
நீ வாழ வேண்டும்.



**தமிழீழத்தாயே**
**தமிழர்க்கெல்லாம்**
**உயிர் நீயேயம்மா!**

# தமிழ்த்தாய் தாலாட்டு

வீ. பரந்தாமன்



கண்ணுறங்கு கண்ணுறங்கு கனிமொழியே கண்ணுறங்கு
விண்ணிறங்கி வந்தவொரு மின்கொடியே கண்ணுறங்கு

இந்துமா கடலினிலே
தென்குமரி மலையினிலே
முந்திவந்து பிறந்தவெங்கள்
முத்தகுடித் தமிழ்மகளே! (கண்ணுறங்கு.....)

சிந்துநதி ஓரம்வரை
கங்கைநதி தீரம்வரை
சென்றுலவி வந்தமகள்
திராவிடத்தார் குலமகளே! (கண்ணுறங்கு......)

சந்தனநற் பொதிகையிலே
பூத்திருந்தாய் பொன்மகளே!
சங்கமென்னும் பள்ளியிலே
கற்றுயர்ந்த பூங்கொடி நீ (கண்ணுறங்கு.....)

*மூன்றுவடி வெடுத்தழகாய்*
*முத்தமிழாம் பேரெடுத்தாய்*
*ஆண்டமுடி மன்னருடை*
*அகங்குளிர ஆடிவந்தாய்* (கண்ணுறங்கு......)

*சேரமன்னன் சிலம்புதந்தான்*
*செந்நாவர் குறளாரம்*
*பாரறியப் பூட்டிவைத்தார்*
*பைந்தமிழே கண்ணுறங்கு* (கண்ணுறங்கு......)

*இங்குனக்கே என்னகுறை*
*எம்பிரபா காவலிலே?*
*தங்கமெனும் புலிமறவர்*
*தற்கொடையால் வாழ்வளித்தார்* (கண்ணுறங்கு )

*பொங்குதமிழ் ஈழமென்னும்*
*பூவணையில் நீயுறங்கு*
*எங்களெழில் தாயவளே*
*இடர்நீத்துக் கண்ணுறங்கு* (கண்ணுறங்கு......)

● ●

**தமிழ்நீர்வளத்துக்கும்**
**சிங்களத்தால் ஆபத்து**

சிமெந்து உற்பத்திக்கென காங்கேசன்துறை சிமெந்து ஆலையின் சுற்றாடல் பகுதியிலிருந்து ஏறத்தாழ 25 அடி ஆழம் வரை சுண்ணாம்புக்கல்வெட்டி எடுப்பது யாவரும் அறிந்ததே. கடற்கரை ஒரமாக உள்ள இப்பகுதியிலிருந்து இங்ஙனம் சுண்ணாம்புக்கல் எடுக்கப்படுவதனால் நிலத்திலுள்ள பாறை வெடிப்புகளினூடாக கடலை நோக்கி நன்னீர் நீரூற்றுக்கள் பெருமளவில் வெளியேறும் அபாயநிலை ஏற்ப்பட்டுள்ளது. வெடி வைத்துத் தகர்க்கப்படும் நில அதிர்வுகளினால் பாறை வெடிப்புக்கள் மேலும் விரிவடைந்து நன்னீர் ஊற்றானது கடலை நோக்கி அதிகமாகப்பாய்ந்து ஓடக்கூடிய நிலமை ஏற்ப்படும் இதனால் யாழ்குடா நாட்டிலுள்ள நிலநீர் வெகு விரைவில் குறைந்து போகும் அபாயம் உள்ளது. இங்குள்ள சுண்ணாம்புக் கல்வினால் சிங்களப் பகுதியிலுள்ள காலியில் சிமெந்து உற்பத்தியும், சிங்களவருக்கு வீடும் கிட்டுகின்றது. எம்மண்ணிலுள்ளவருக்கு நீர் அருகி நிலவளம் குறுகிப்போகும் நிலை வந்துள்ளது.



யுத்தகால
வாழ்க்கை
முறை

# பொருளாதாரத் தடையும் போர்க்காலக் கண்டுபிடிப்புக்களும் அவற்றின் பயன்பாடுகளும்

பொன். பூலோகசிங்கம்

தேசிய விடுதலைப் போராட்டங்களை ஒடுக்குமுறையாளர் இராணுவ பலத்தினால் நசுக்கி ஒடுக்க முயன்றாலும் அவை அவற்றையும் மீறி வளர்வது இயல்பு. இவ் வேளையில்தான் ஒடுக்கு முறையாளர் பொருளாதாரத் தடைகளை ஓர் ஆயுதமாகப் பாவித்து மக்களை வெறுப்பும் சலிப்பும் அடையச் செய்து போராட்டத்தை ஒடுக்க முயல்வர். விடுதலைப் போராட்ட வரலாறு இந்த யதார்த்த நிலையைத் தெளிவு படுத்தும். பங்களாதேஷ் விடுதலைப் போராட்ட ஏடுகளும் கற்றுத்தரும் பாடம் இதுதான். இறுதியில் எல்லாத் தடைகளையும் உடைத்துக் கொண்டு பங்களாதேஷ் உருவாயிற்று. இது போன்ற பல தடைகளுக்கும் இடர்களுக்கும் கடந்த சில ஆண்டுகளாகத் தமிழீழ விடுதலைப் போராட்டத்தை நடத்தும் தமிழ் மக்களும் முகங்கொடுத்து வருகின்றனர். இத்தடைகளின் விளைவுகளை விவரிப்பதானால் எமது மக்களின் சுய வெளிப்பாடுகளைப் புரிந்து கொள்ளமுடியும்.

ஈழப் போராட்டம் பல பரிணாமங்களைப் பெற்று முனைப்படைந்தபோது 1984 ம் ஆண்டு சித்திரை மாதம் தொடக்கம் கடல்வலயத் தடைச் சட்டத்தை அப்போதைய தேசியபந்தோபஸ்து அமைச்சர்

லலித் அத்துலத் முதலி அமுல்படுத்தினார். கடற்றொழிலில் ஈடுபட்ட மக்கள் மீது விதிக்கப்பட்ட மறைமுகமான பொருளாதாரத் தடையே இது. 1985 – 1986 ஆம் ஆண்டுக் காலகட்டத்தில் வன்னிப் பகுதியிலும் கிழக்கு மாகாணத்திலும் நெல் விவசாயத்தில் ஈடுபட்டு வந்த மக்கள், அப்பகுதிகளிலிருந்து இராணுவத்தாலும் சிங்கள குடியேற்றக்காரர்களாலும் விரட்டப்பட்டனர். தமிழர் விதைத்த வயல்களில் சிங்களவர்கள் அறுவடை செய்தனர். உடும்பன் குளம் போன்ற இடங்களில் விவசாயிகள் சுட்டுக் கொல்லப்பட்டு நெற்குவியல்களோடு எரிக்கப்பட்டனர். இவையாவும் போராட்டத்தைப் பொருளாதார ரீதியாக பலவீனப் படுத்துவதை நோக்காகக் கொண்டவையாகும்.

1987 ம் ஆண்டு தை மாதம் தொடக்கம் சிறீலங்கா அரசு பொருளாதாரத் தடையை அமுல் படுத்தியது. தமிழ்ப் போராளிகள் போக்குவரத்து ஒழுங்குகளை மேற்கொண்டதைச் சாட்டாக வைத்துக் கொண்டு எரிபொருள் தடையை முதலில் அமுல் படுத்தியது. தொலைத்தொடர்பு பரிவர்த்தனைகளைத் துண்டித்தது. கிளிநொச்சிப் பகுதியில் நிலைகொண்டிருந்த இராணுவத்தினர் அப்பகுதி விவசாயிகளுக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்காமற் செய்வதற்காக இரணைமடுக் குளத்தின் துரிசைப் பூட்டினார்கள். யாழ். குடாநாட்டிற்குள் வெளிமாவட்டத்திலிருந்து விறகு எடுத்து வரவும் தடை விதிக்கப்பட்டது. சைக்கிள் டயர், ரியூப் என்பனவற்றுக்கும் தடை விதிக்கப்பட்டது. நீர் இறைக்கும் இயந்திரங்கள் வடபகுதிக்கு எடுத்துவருவது தடை செய்யப்பட்டது. துவிச்சக்கரவண்டிக்குரிய உதிரிப்பாகங்கள், லொறிகளுக்குரிய வில்லுத்தகடு என்பனவும் தடை செய்யப்பட்டன. யாழ்ப்பாணத்தில் அரச வங்கிகளுக்குரிய காசோலை மாற்றமுடியாமல் தடை செய்யப்பட்டது. யாழ்ப்பாண போதனா வைத்திய சாலையை மூடிவிடவும் முடிவு எடுக்கப்பட்டது. இவ்வாறாகப் பல பொருளாதாரத் தடைகள் விதிக்கப்பட்ட போதும் அவற்றால் போராட்டத்தின் வளர்ச்சிப் போக்கை அரசினால் தடுக்க முடியவில்லை. இதனால் ''ஒப்றேசன் லிபறேசன்'' என்ற பெயரில் 1987 மே மாதம் சிறீலங்கா அரசு வடமராட்சியில் ஓர் பாரிய இராணுவ நடவடிக்கையை மேற்கொண்டது.

## இந்திய இராணுவத்தின் பொருளாதாரத் தடை

1987 ஜூலை மாதம் 29 ம் திகதி இலங்கை - இந்திய ஒப்பந்தம் என்ற பெயரில் தமிழீழப் போர்ாட்டத்தை நசுக்குவதற்கான பொறுப்பைச் சிறீலங்காவிட மிருந்து இந்திய மத்திய அரசு கையேற்றுக் கொண்டது. இந்திய இராணுவம் அதே ஆண்டு ஒக்டோபர் மாதம் பத்தாம் திகதி தொடக்கம் ''ஒப்றேசன் பவான்'' என்ற பெயரில் யாழ்ப்பாண யுத்தத்தை ஆரம்பித்தபோது யாழ்ப்பாணப் புவியியல் அமைவிடம் போராட்டத் தலைமை கரந்துறை வாழ்வை மேற்கொள்ளப் பிரதி கூலமாக இருந்தமையால் போராட்டத்தைத் தொடர்ந்து நடாத்துமுகமாக போராட்ட மையத்தை வன்னிப் பிராந்தியத்திற்கு நகர்த்த வேண்டிய தேவை ஏற்பட்டது. போராட்டத் தலைமை தங்கியிருந்த மணலாறு மாவட்டத்தின் சில பகுதிகளை இந்திய இராணுவம் தடை செய்யப்பட்ட பிரதேசமாகப் பிரகடனம் செய்து போராளிகளுக்கான உணவு விநியோகத்தைக் கட்டுப்படுத்தத் தனது முழுப்பலத்தையும் பிரயோகித்து இறுதியில் படுதோல்வியைத் தழுவிக் கொண்டது.

## 2ம் கட்ட ஈழப் போரும் பொருளாதாரத் தடையும்

விடுதலைப் புலிகளுக்கும் இலங்கை அரசுக்குமிடையிலான பேச்சுவார்த்தைகள்

அரசியல் தீர்வுக்காக இணக்கம் காணமுடியாது போகவே 1990 ஜூன் மாதமளவில் முறிவடைந்தது. இதன் விளைவாக இரண்டாம் கட்ட ஈழப்போர் 1990 ஜூன் மாதம் நடுப்பகுதியில் ஆரம்பமானது. இதனைத் தொடர்ந்து சிறீலங்கா அரசின் தமிழ் மக்கள் மீதான பொருளாதாரத் தடையும் பின்தொடர்ந்தது.

தமிழ் மக்கள் மனதில் மேலோங்கி நிற்கும் விடுதலை உணர்வை, இராணுவ ரீதியாக மட்டுமல்லாமல் பொருளாதாரத் தடையையும் ஒரு ஆயுதமாகப் பயன்படுத்தி ஒடுக்குவதற்கான தந்திரோபாயத்தை இலங்கை அரசு 2ம் கட்ட ஈழப்போரின் ஆரம்பத்திலிருந்தே தீவிரப்படுத்தியது. ஆகவே ஈழப்போரின் இரண்டாம் கட்டத்தில் எதிரியின் ஒடுக்கு முறையானது இரு பரிமாணங்களைக் கொண்டதாகவிருந்தது. தமிழ் மக்கள் இருமுனைகளில் எதிரியைச் சந்திக்கவேண்டியிருந்தனர். விடுதலை உணர்வை மழுங்கடிப்பதோடு விடுதலை இயக்கத்தின் மீது மக்களுக்கு வெறுப்பையும் சலிப்பையும் விரக்தியையும் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்குடன் நடைமுறைப் படுத்தப்பட்ட இப்பொருளாதாரத் தடையானது மக்களின் அத்தியாவசிய நுகர்வுப் பொருட்களைத் தடைசெய்யும் நோக்குடன் முதலில் நகர்த்தப்பட்டது. அரிசி, மா, சீனி முதலான உணவுப் பொருட்களுக்கு விதிக்கப்பட்ட தடை காரணமாக தமிழீழத்தில் இவற்றுக்குப் பெரும் தட்டுப்பாடு நிலவியதோடு விலையும் அதிகரித்தது. ஒரு கிலோ நாட்டரிசி அதன் வழமையான விலையை விட மும்மடங்கு விலைக்கு உயர்ந்தது. மாவின் விலையேற்றம் பாணின் விலையேற்றத்துக்கு வழிவகுக்கவே ஒரு இறா. பாண் 15 ரூபாவரை விற்பனையாயிற்று. ஒரு கிலோ சீனி கொழும்பில் 23 ரூபாவாக (விலை) விற்கும் போது இங்கு அது 72 ரூபா வரை விற்கப்பட்டது. குழந்தைகளுக்கான அத்தியாவசிய உணவுப் பொருட்களான பால்மா வகைகளுக்கு விதிக்கப்பட்ட தடையால் குழந்தைகள் போஷாக்கின்றிப் பாதிக்கப்புட்டனர். குழந்தைகளுக்கான பால்மாவைப் பெற்றுக்கொள்வதில் பெற்றோர் பெரும் இடர்பாடுகளை எதிர் நோக்கினர்.

## மருந்துவகைகளுக்கு தடை

அத்தியாவசிய மருந்து வகைகளுக்கு விதித்த தடை காரணமாகப் பனடோல் முதற்கொண்டு விசர்நாய்க்கடி, ஏற்புவலி முதலானவற்றிற்கான தடுப்பு ஊசி மருந்து வகை வரை அனைத்துக்கும் பெரும் தட்டுப்பாடு நிலவியது. தலைவலி, காய்ச்சல், தடிமனுக்கு பனடோல் பாவியுங்கள் என விளம்பரங்கள் வெளியானதே தவிர அவற்றைப் பெறுவது முயற்கொம்பாக இருந்தது. ஏற்புவலி, விசர்நாய்க்கடிக்கு இலக்கான புலதரப்பட்ட வயதினரும் தகுந்த வைத்திய சிகிச்சை இன்மையால் மரணத்தைத் தழுவவேண்டியதாயிற்று.

## எரிபொருள் தடை ஏற்படுத்திய பாதிப்புகள்

எரிபொருட்களான பெற்றோல், மண்ணெண்ணெய் போன்றவற்றிற்குப் போடப்பட்ட தடை பல்துறையையும் செயல் இழக்கச் செய்தது. கைத்தொழில், கமத்தொழில், கடற்றொழில் முதலான அனைத்துத்தொழில்களும் செயலற்றுப் போயின.

கைத்தொழிற்சாலைகள் மின்தடையால் இயங்கமுடியாத நிலை ஏற்பட்ட போது எரிபொருள் தடை அவை எந்தவகையிலும் தலையெடுக்க முடியாதபடி முற்றாகவே ஸ்தம்பிக்கச் செய்தது. தொழிற்சாலைகள் இயங்காமையால் அவற்றின் உற்பத்திப் பொருட்களுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டதோடு அவற்றின் உற்பத்தியில் ஈடு

பட்டு வந்த பல தொழிலாளர்கள் வேலை வாய்ப்பை இழந்தனர். மேலும், ஆகாய மார்க்கமான தாக்குதல்களால் பல தொழிற் சாலைக் கட்டிடங்கள் தரைமட்டமாக்கப் பட்டன.

கடல்வலயத் தடைச் சட்டத்தைக் கடுமையாக நடைமுறைப்படுத்திய சிறீலங்கா அரசு அதனோடு எரிபொருள் தடையையும் அழுத்தவே கடற்றொழிலாளர்கள் பாதிக்கப்பட்டனர். அவர்களது மீன்பிடி இயந்திரப் படகுகள் செயலற்றுப் போயின. மீன் விலை உயர மக்கள் மத்தியில் பணப் புழக்கம் குறைந்தது. கப்பல் மார்க்கமாகவே பணம் எடுத்துவரப்படும் நிலைமையால் வங்கிகளில் வைப்புச் செய்தோர் தமக்குத் தேவையான நேரத்தில் தேவையான தமது பணத்தையே பெறமுடியாத நிலைமை ஏற்பட்டது.

நீர் இறைக்கும் இயந்திரங்களைப் பயன்படுத்தித் தமது விவசாயத் தொழில்களில் ஈடுபட்டுவந்த மக்களுக்கு மின்தடையும் எரிபொருள் தடையும் அவர்களது உப உணவு உற்பத்தியை மட்டுமன்றி சிறு தானியவகை உற்பத்தியையும் பாதிக்கச் செய்தது. பயிர்களுக்குத் தேவையான யூரியா முதலான பசளை வகைகள், கிருமிநாசினி வகைகள் என்பனவற்றிற்கு விதிக்கப்பட்ட தடையானது விவசாயிகளை இரட்டிப்பு இன்னலுக்குள்ளாக்கியது. பண்ணை வளர்ப்பில் ஈடுபட்டிருந்த விவசாயிகளும் கால்நடை வளர்ப்பு கோழிவளர்ப்பு முதலானவற்றில் ஈடுபட்டிருந்த மக்களும் அவற்றுக்குத் தேவையான கால்நடைத் தீன், தவிடு, பிண்ணாக்கு, கோழித்தீன் முதலானவற்றிக்கு ஏற்பட்ட தடை காரணமாக பண்ணை விவசாயத்தை கைவிட அது அழிந்து போயிற்று. கால்நடைகளுக்குத் தேவையான தீனி இல்லாமையால் பலர் தமது கறவைகளையும் பறவைகளையும் குறைந்த விலைக்கு விற்றுவிட்டுப் பண்ணைத் தொழிலுக்கு முழுக்குப் போட்டனர். இதனால் பால், முட்டை என்பன விலையேற்றம் கண்டன. ஒருபுறம் செய்தொழில் பாதிப்பும் வருமானம் இல்லாமையும் மறுபுறம் விலைவாசி ஏற்றமும் அத்தியாவசிய நுகர்வுப் பொருட்களுக்கான தட்டுப்பாடும் மக்களை பட்டினிச் சாவின் எல்லைவரை அழைத்துச் சென்றது. மேலும், மேலும் மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழே தள்ளப்பட்டனர்.

2 ம் கட்ட ஈழப்போரின்போது மக்களின் அத்தியாவசிய உணவுப் பொருட்களுக்கு மட்டுமல்லாமல் பெரும் தொகையான நாளாந்த பாவனைப் பொருட்களுக்கும் தடை விதிக்கப்பட்டது. சவர்க்காரம் மெழுகுதிரி, காகிதாதிகள், தீப்பெட்டி, கற்பூரம், பிளாஸ்டிக் பொருட்கள், துணிவகைகள் என பலவகையான பொருட்களும் இவற்றில் அடங்கும். காகிதாதிகள், பாடசாலைச் சிறுவர்களது கொம்பாஸ் முதலான உபகரணங்களுக்குத் தடை விதித்ததன் மூலம் பொருளாதாரத் தடை தமிழ்ச் சிறார்களின் கல்வியைச் சீர்குலைப்பதை நோக்கமாகக் கொண்டு இருந்தது. இது அப்பட்டமான அடிப்படை மனித உரிமை மீறல் நடவடிக்கையாகும்.

இந்த நிலையில் 1991 ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் முதல்வாரம் வெளியான அரசாங்க வர்த்தமானியில் 48 விதமான பொருட்களின் பெயர்களை அரசு வெளியிட்டு அவற்றிற்குத் தடை விதித்திருப்பதாக அறிவித்தது.

ஆனால்; வவுனியா, தாண்டிக்குளம் தடை முகாம் இராணுவச் சிப்பாய்கள் தமது மனம்போன போக்கில் மேலும் பல அத்தியாவசியப் பொருட்களுக்கும் தடை விதித்தநுண்டு. கொழும்பில் அத்தியாவசிய சேவைகள் ஆணையாளருடன் தொடர்பு கொண்டு தமக்குத் தேவையான சில பொருட்களை எடுத்துச் செல்லலாம் என

அரசு அறிவித்தும் அவ்வாறு உரிய முறையில் எடுத்துவந்த பொருட்களையும் வவுனியா தடைமுகாமில் நிற்கும் சிப்பாய்கள் பறிமுதல் செய்து தமது உடமையாக்கிக் கொண்ட சம்பவங்கள் பல நிகழ்ந்தன.

## மின்தடையால் வைத்திய சேவை பாதிப்பு

வடபகுதிக்கான மின்தடை தொடர்ச்சியாக கடந்த இரண்டு வருடகாலமாக (1990 ஜூன் தொடக்கம்) இருந்து வருவதோடு சுன்னாகத்திலுள்ள மின்சாரநிலையம் விமானக்குண்டு வீச்சுக்கு இலக்காகி மின்மாற்றிகள் முற்றாகச் சேதப்பட்டமையால் வைத்தியசாலைகள் பெரும் அசௌகரியங்களை எதிர்நோக்க வேண்டியதாயிற்று குளிரூட்டிகள் இயங்காததால் அத்தியாவசிய மருந்துவகைகளைப் பேணிப் பாதுகாக்க முடியாத நிலைமை ஏற்பட்டது. ஜெனரேட்டர்களுக்கும் எரிபொருள் இன்மையாலும் அவற்றின் உதிரிப்பாகங்கள் தட்டுப்பாடு காரணமாகவும் மருந்துவகைகளை பழுதடையாமல் வைத்திருக்க முடியவில்லை. இதேவேளை ஷெல் தாக்குதல்கள், விமானக்குண்டுவீச்சு காரணமாகப் பாதிக்கப்பட்டு வரும் பெருந்தொகையான நோயாளர்களுக்கு அவசர சத்திரசிகிச்சை உட்பட தகுந்த சிகிச்சை அளிக்கவேண்டிய தேவை அதிகமாக இருந்தது. தகுந்த சிகிச்சை அளிக்கப்படாது பலர் அநாவசியமாக இறந்தனர்.

## போக்குவரத்துகளில் ஏற்பட்ட பாதிப்பு

எரிபொருள் தடையால் மோட்டார் போக்குவரத்துக்கள் பெருமளவில் சீர்குலையலாயின. இதனால் அத்தியாவசிய நுகர்வுப் பொருட்களைக் கூட எடுத்துச் சென்று பகிர்ந்தளிக்க முடியாத நிலைமை ஏற்பட்டது. இ.போ.ச. பஸ்கள் தனியார் மினி பஸ்கள், வாடகைக்கார்கள் (டாக்சிகள்) தட்டிவான்கள் யாவும் முடங்கிப்போயின. பெரிய லொறிகள் செயல் இழந்து போகவே பொருட்களை ஏற்றி இறக்க மாட்டுவண்டிகள் பாவனைக்கு வந்தன. விவசாயிகள் பல நெருக்கடிகளுக்கும் இன்னல்களுக்கும் மத்தியில் உற்பத்தி செய்த உற்பத்திப் பொருட்களைச் சந்தைப்படுத்துவதில் போக்குவரத்துச் சீர்கேடுகளால் பெரிதும் பாதிக்கப்பட்டனர். லான்ட்மாஸ்டரும், ஓட்டோ ரிக்ஷாக்களும் பிரதான இயந்திரப் பொறிமுறையிலான போக்குவரத்து வாகனங்களாயின. இவற்றைப் பாவிப்பது கூட எரிபொருள் தட்டுப்பாட்டால் பெரும் செலவாக அமைந்தது. அவற்றின் வாடகைக்கூலி பன்மடங்கு உயர்த்தப்பட்டும் இவையே நீண்டதூரப் பயணங்களுக்குரிய வாகனமாக மாறலாயிற்று. வடபகுதியை விட்டு வெளியேறும் கொழும்புப் பயணிகள் இவற்றையே பயன்படுத்தலாயினர். ஆனையிறவு கடல்னீரேரித் தொடுவாயை ஊடறுத்துச் செல்லும் பிரதான கண்டி வீதி நெருக்கடிக்குள்ளானபோது பூநகரி - சங்குப்பிட்டிப் பாதை நீண்டதூரப் பயணங்களுக்குரிய பிரதான பாதையாயிற்று. 1990ன் பிற்பகுதி தொடக்கம் பூநகரி சங்குப்பிட்டிப் பாதை இராணுவத்தால் தடைப்பட்டபோது இயக்கச்சி - கொம்படி பாதை பிரதான போக்குவரத்துப் பாதையாயிற்று. உழவு இயந்திரங்கள், லாண்ட் மாஸ்டர், ஓட்டோ ரிக்ஷாக்கள் முதலான டீசலில் இயங்கும் வாகனங்களோடு பெற்றோலில் இருந்து மண்ணெண்ணெய்க்கு மாற்றப்பட்ட மோட்டார் சைக்கிள்களும் நீண்டதூரப் பாவனைக்குரிய வாகனங்களாயின. பலர் பயணிகளை ஏற்றி இறக்குவதையே ஊதியம் பெறும் தொழிலாகக் கொண்டனர். இவர்களில் பலர் பொருளாதாரத் தடையால் ஏனைய துறைகளில் வேலை வாய்ப்புகளை இழந்தவர்களாகக் காணப்பட்டனர். இவ்வாறு புதிய தொழில் வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொண்ட இவர்

கள் பொருளாதாரத் தடையால் தமக்கு ஏற்பட்ட பொருளாதார பாதிப்புகளுக்குத் தமது சுய ஆற்றலால் சிறுபரிகாரம் தேடிக் கொண்டனர். இவர்களது மனவுறுதி பொருளாதாரத் தடையை உடைக்க வழிவகுத்தது.

### சைக்கிள் ரிக்ஷாக்கள் பாவனைக்கு வரல்

1990 ன் நடுப்பகுதியிலிருந்து சிறீலங்கா அரசு விதித்த எரிபொருள் தடை மினிபஸ்கள் உட்பட நவீன போக்குவரத்து சாதனங்கள் மீது பெரும் முடங்கலை ஏற்படுத்தியது. துவிச்சக்கர வண்டிகள் பிரதான போக்குவரத்துச் சாதனமாயிற்று. குறுகிய தூர இடைவெளிக்குள் மக்களை நகர்த்தும் பிரதான சாதனமாகச் சைக்கிள் ரிக்ஷாக்கள் முதன்மை பெறலாயின. சுமார் 15 மைல் தூர பயணங்களுக்கு நோயாளர்களையும் முதியவர்களையும் ஏற்றி இறக்கும் முக்கிய வாகனமாக சைக்கிள் ரிக்ஷாக்கள் அமையலாயிற்று.

### நகர்ப்புறங்களில் உருவான விறகுப் பிரச்சினை

எரிபொருள் கட்டுப்பாடு, மின்சாரத் தடை காரணமாக மண்ணெண்ணெய் முக்கிய பொருளாயிற்று. இதனால் 1991 ம் ஆண்டுக்கால கட்டத்தில் ஒரு போத்தல் மண்ணெண்ணெய் 200/- வரை விற்கப்படலாயிற்று. நகர்ப்புறங்களில் மின் அடுப்புகளும் மண்ணெண்ணெய் அடுப்புகளும் செயலற்றுப்போயின. காஸ் சிலிண்டர்கள் எரிவாயு இன்மையால் பயன்படுத்த முடியாதவையாயிற்று. நகர்ப்புறங்களில் விறகு ஒரு பிரதான பிரச்சினையாயிற்று. வன்னிப் பகுதியிலிருந்து விறகு எடுத்துவருவது தடைப்பட லாயிற்று. பொருளாதாரத் தடை காரணமாக தொழில் வாய்ப்புகளை இழந்த பலர் தமது சீவனோபாயத் தொழிலாகக் கட்டுவிறகு விற்பனையில் ஈடுபடலாயினர். வலிகாமம் வடக்கிலும் கிழக்கிலும் வாழும் புலர் வலிகாமம் தெற்கு பகுதிகளுக்குத் தமது துவிச்சக்கர வண்டிகளில் விறகுகளைக் கட்டிக் கொண்டு சென்று விற்பனை செய்யலாயினர். கொக்குவில் சந்தி, திருநெல்வேலி, கந்தர்மடம், நல்லூர் முதலிய இடங்கள் பிரதான விறகு விற்பனைக்கான அமைவிடங்களாயின. இதனால் இராணுவ நடவடிக்கையால் இடம்பெயர்ந்து வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழும் உழைப்பாளிகளான கிராமப்புற மக்கள் தொழில் வாய்ப்புகளைப் பெற்றதோடு நகர்ப்புறத்தில் உருவான விறகு இல்லாப் பிரச்சினையையும் தீர்த்து வைத்தார்கள்.

### மக்கள் தொடர்புச் சாதனங்கள் செயலற்றுப் போனமை

சிறீலங்கா அரசு விதித்த மின்சாரத் தடை, மின்கலத் தடை காரணமாக வடபகுதியில் தொலைக்காட்சி, வானொலி முதலான தகவல் பரிமாற்றத் தொடர்புச் சாதனங்கள் செயல் இழந்தன. கிராமப்புறங்களில் வாழும் மக்களுக்குச் சக்திமிக்க ஊடகமாக விளங்கும் டிரான்ஸ்சிஸ்டர் ரேடியோக்கள் மின்கலத்தடையால் அவர்களை பெரிய அளவில் வெளியுலகச் சூழலிலிருந்து அந்நியப்படுத்திற்று. போக்குவரத்துத் தடங்கல்களும் அளவுக்கு மீறிய சுமைகளும் கொழும்புப் பத்திரிகைகள் யாழ்ப்பாணம் வருவதில் தடைகளை உருவாக்கின. இதனால் வடபகுதிச் செய்திகளை வெளியுலகும், வெளியுலகச் செய்திகளை வடபகுதி மக்களும் அறிந்து கொள்ள முடியாத வகையில் ஒரு இரும்புத் திரை விழுந்தது. இந்த நிலையில்சைக்கிள் டைனமோக்களை இயங்கவைத்து அவற்றிலிருந்து மின்சாரம் பெற்று வானொலிப்

பெட்டிகளை இயங்கவைத்து மக்கள் செய்திகளை அறிந்துகொள்ளத் தலைப்பட்டனர். இந்த வகையில் லண்டன் பி.பி.சி தமிழோசையும் பிலிப்பைன்ஸ் மணிலாவிலிருந்து ஒலிபரப்பப்படும் வெரித்தாசும் உள்ளூர் செய்திகளையும் வெளியுலகச் செய்திகளையும் வழங்கும் முக்கிய வானொலி நிலையங்களாயின. அத்துடன் புலிகளின் குரல் ஒலிபரப்பையும் மக்கள் பிரதானமாக செவிமடுத்தனர்.

**பஞ்சுவிளக்கு பாவனைக்கு வரல்**

எரிபொருள் தடை, மின்சாரத் தடைகளால் மண்ணெண்ணெய் மருந்து போல் பாவிக்கப்பட்டது. குப்பி விளக்குகளைக் கூட ஏற்றிவைக்க முடியாத நிலையைத் தோற்றுவித்தது. இந்த நிலையில் பஞ்சு விளக்குப் பாவனைக்கு வந்தது.

ஜாம் போத்தலில் பஞ்சையிட்டு மண்ணெண்ணெயில் ஊறவிட்டு வால்கட்டையினூடாகத் திரியை எண்ணெய் ஊறிய பஞ்சுடன் தொடர்புபடுத்தி நனையவிட்டு இவ்விளக்கு ஏற்றப்படுதல் புழக்கத்திற்கு வந்தது. மக்கள் மத்தியில் பஞ்சு விளக்கு என பெயர் பெற்றுப் பிரபல்யம் பெறலாயிற்று.

இரண்டாம் உலகப் போரின்போது பிரித்தானிய குடியேற்ற நாடுகளின் மீது ஜப்பான் குண்டுவீச்சு தாக்குதலை மேற்கொண்டபோது பதுங்கு குழிகளுக்குள் பாதுகாப்பைத் தேடிய மக்கள் அக்குழிக்குள் பாவித்த இதனையொத்த "பங்கர் விளக்குகள்" நெருக்கடி காலத்தின்போது "பஞ்சு விளக்குகள்" என்ற பெயரில் எங்கள் வீடுகளுக்கு ஒளிதந்தன. நெஞ்சில் நெருப்பேந்தி வாழும் மக்கள் பஞ்சினில் விளக்கேற்றி வாழப் பழகிக்கொண்டனர்.

**சவர்க்காரம் பாவிக்கத் தடை**

சிறீலங்கா அரசு விதித்த சவர்க்காரத் தடை ஒரு சாதாரண சவர்க்காரத்தின் கட்டுப்பாட்டு விலை 5.25 சதமாக இருக்கையில் 1991 ம் ஆண்டு வட பகுதியில் ஒரு சலவைச் சவர்க்காரக் கட்டி, 65.00 ரூபாவரை ஏறக்குறைய பத்து மடங்கு அதிக விலையில் விற்றது. இதேபோல குளியல் சவர்க்கார விலையும் பன்மடங்காகவே இருந்தது. மக்கள் சவர்க்காரத்திற்குப் பதிலாக உடைகளைச் சலவை செய்ய மாற்றீட்டுப் பொருட்களைப் பாவிக்கத் தொடங்கினார்கள். பனம்பழத்தைப் பிழிந்து அதன் சாற்றைக் கொண்டு துணி வகைகளைச் சலவைசெய்தனர். உடலுக்கும் உடைகளுக்கும் சாம்பலைப் பாவித்த மக்களும் இருந்தனர்.

இவ்வாறு போராட்டத்தை ஒடுக்குவதற்காக எதிரி விதித்த பொருளாதாரத் தடைகள் ஒவ்வொன்றையும் தமிழ் மக்கள் தமது மனவுறுதியாலும் விடுதலை ஆர்வத்தாலும் விடாமுயற்சியாலும் தளராத உழைப்பினாலும் முறியடித்து போராட்டத்தை பாதுகாத்து முன்னெடுத்தனர். □□

□ □ □

*உண்மை ஒரு நாள் வெளியாகும் — அதில்*
*உள்ளங்கள் எல்லாம் தெளிவாகும்*
*பொறுமை ஒரு நாள் புலியாகும்*
*அதற்குப் பொய்யும் புரட்டும் பலியாகும்.*

— பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் —



# வீரியம் கொள்ளல்

கருணாகரன்

*இந்தக் கிராமம் தனித்தது*

*ஒரு*
*சிறு குழந்தையின் சுவடுமற்றுப் போன*
*துக்கம்*
*இந்தக் கிராமத்துக் குண்டாவதை*
*சகிப்பதெப்படி?*

*சாம்பலும் கரியுமாகிப் போயுள்ளன*
*வீடுகளும் முற்றமும்.*
*சன்னங்களேறிக் காலவடுப்பட்டன*
*தென்னையும் பனையும்,*
*தெருவோரப் பிள்ளையார் உண்டியலும்*
*சிலுவை யேசுவும்.*

உடுக்கொலியும் பாட்டும்
இரவாடும் கூத்தும் இசையுமின்றி
துயர் முற்றிப் படர்ந்து
துவளுகின்றன; வயல்வெளியும்
மரங்களும் இந்த நிலாமுற்றமும்.

யாருமற்று
வேகுகின்றன பயிர்கள்.

காய்கின்ற சூரியனே
சாட்சியிரு
புன்னகையாய் மலர்ந்திருந்த
ஊரின் முகட்டில்
தீயிட்ட வதையேன் கூறு.

இவையெல்லாம் கண்டு
துயரம் கசியும்
என் நெஞ்சின் இளைய பாடலுக்கு
ஏது இசை; மொழியென்ன?

வயல் முடிப்படந்தனவோ தொட்டாச் சுருங்கிகள்
அதன் கீழ் கண்ணிவெடிகள்
காடு முடிப் பாதைகள் தூர்ந்தன
அந்த மறைவில் நம் காவலரண்கள்.

இங்கே, இந்நேரம்
கனத்த அமைதி
பெருக்கெடுத்த மௌனம்
விலகாத அவதரனம்.

அவர்களெதிரில்; மிக அருகில்
நானும் என் தோழரும்.
துப்பாக்கிகள் எப்போதும் முழங்குவதற்கு
காத்துள்ளன.

மெல்ல,
மிக மெதுவாக
முன் பதியும் நம் சுவடுகள்

மிருதுவாய் நெஞ்சோடு அணைந்து
இரகசியமாக நம்பிக்கையைச் சொல்லி
வழியனுப்பும் புற்கள்.

நிலம் பதுங்கி நிலம் பதுங்கி
நெஞ்சை நிலத்தோடு ஒட்டி
உந்துகையில்
உராய்வுறும் காலிருந்தும் கையிருந்தும்
பெருகும் உதிரத்தின் வெம்மையில்
நிலம் கொதிக்கும் தகிப்புணரும்.

தூரத்தில்,
காவோலை சரசரப்பினும்
அது தமிழேசையெனப் பொழியும்
ஒலி நோக்கிக் குறியற்ற
எதிரான் துவக்கு

அவர் அச்சமும் செயலும்
இவ்வாறுதான் எப்போதும் நடக்கின்றது.

இத்துயரும்,
முட்களாய் முகிழ்க்கின்ற கொடூரமும்
தமிழ் நிலம் என்பதால் என்பதறிவேன்.

இதை யாரேனும் அனுமதித்தல் கூடுமோ
நான் சகியேன்; யாரும் அனுமதிக்கார்.

கள்ளியும் முள்ஈஞ்சும் கூட
வழி மறித்திருக்கும்? அவர் நடத்தையை
விதைப்பின்றிய வயல்களும் எதிர்க்கும்.

நெஞ்சு திரள்கிறது
திரளத் திரள
விடியல் மலரொன்று பூக்குமெனும்
வீரியம் என்னுள்
தக தக வென்றெழுகிறது.

□□

# கண்ணீர் விட்டே வளர்த்தோம்



தமிழீழ விடுதலைப் போராட்டத்தை வளர்த்தெடுக்கும் போது, தென்தமிழீழப் பகுதிக்கு ஆயுதங்கள் கொண்டு செல்லப்படுகையில் சந்தித்த சம்பவங்கள், எதிர் கொண்ட நடவடிக்கைகள், கற்றுக் கொண்ட அனுபவங்கள் என்பன இங்கு நினைவு கூரப்படுகின்றன. தேசிய விடுதலைப் போராட்டம் வளர்ச்சியடைந்துள்ள இந்த வேளையில் உணர்வு பூர்வமிக்கதான எங்களுடைய போராட்டத்தை விளக்குகின்றது இக்கட்டுரை.

மு. மனோகர்
*(கரும்பறவை — பசீர்காக்கா)*

எப்படியோ மட்டக்களப்புக்குக் கொண்டு செல்வதற்கு ஆயுதம் கிடைத்து விட்டது. இரண்டு .45 ரக சுழல் துப்பாக்கிகள் மட்டக்களப்புக்கு என ஒதுக்கப்பட்டு விட்டன. எங்கள் முகத்தில் பூரிப்பு. இதைக் கொண்டு செல்வதற்காக மட்டக்களப்பிலிருந்து பிரான்ஸிஸ் யாழ்ப்பாணம் வந்திருந்தான்.

தற்போது புலிகளின் ஆதரவாளர்களாக இருப்போரை 'தடா' சட்டத்தின் கீழ் உள்ளே தள்ளுவதாக மிரட்டிக் கொண்டிருக்கும் இந்திய அரசிடம் அப்போது (1983 இல்) பயிற்சி பெற்ற டேவிட் பயிற்சி முடித்து யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்தான். இந்த இருவருடன் நானும் மட்டக்களப்புக்கு புறப்பட ஆயத்தமாகினேன். கூடிய வரை மிதிவண்டியிலேயே செல்வதென்பது எமது திட்டம். மிதிவண்டியில் ஆகக் கூடிய ளவு மதவாச்சி வரை செல்லமுடியும். அதற்கப்பால் தொடர்ச்சியாக மிதிவண்டி ஓட்டுவது கடினம்; இடையில் தங்குவதென்பதும் முடியாத காரியம். மதவாச்சி வரை காட்டுப் பாதைகளூடாகச் செல்வது எப்படி? இதற்குத் தான் உதவுவதாக அப்போது போராளியாக இருந்த தவம்அண்ணை உறுதியளித்தார். ''அவ்வளவும் போதும்- அதுக்கு மேல் நாங்கள் பாத்துக்கொள்ளுவம்'' என்று கூறினோம்.

இரு மிதிவண்டிகளில் எமது பிரயாணம் ஆரம்பமாகியது. நானும் டேவிட்டும் ஒரு மிதிவண்டியில் - மற்றையதில் தவம் அண்ணையும், பிரான்சிசும். இன்று கொழும்புப் பாதையாகிவிட்ட கொம்படிப் பாதை அந்தக் காலத்தில் ஆள் நடமாட்டமில்லாத

இடம். இதனூடாகச் செல்லும் ஒவ்வொரு தடவையும் முள்ளுக்குத்தி மிதிவண்டிக்கு காற்றுப் போய்விடும். அப்படியானால் இடையில் உதவியே கிடைக்க வாய்ப்பில்லை. இதைக் கூடவந்தவர்களுக்குச் சொன்னேன். மிக அவதானமாகப் போனதால் மிதிவண்டிக்கு காற்றுப்போகாத முதல் பயணமாக அது அமைந்தது. நாம் கிளிநொச்சியைச் சென்றடைந்தோம். அங்கு எமக்குத் தெரிந்த ஒரு இடத்தில் தங்கியிருந்தோம்.

பரந்தனில் சிவதாசன் என்ற துரோகிக்கு மரணதண்டனை வழங்குவதென்று ஏற்கனவே தீர்மானித்திருந்தோம். கிளிநொச்சிக்கு வந்த இடத்தில் அதனை நிறைவேற்றாமல் போனால், பின்னர் இப்பகுதிக்கு ஆயுதம் கொண்டு வரும் போதுதான் நிறைவேற்ற முடியும். பெரும்பாலும் பரந்தன் சந்தியில் தான் சிவதாசன் நிற்பான். அப்பகுதியில் இராணுவ ரோந்து அடிக்கடி நிகழும். ஆனாலும், அதற்காக இதனைத் தள்ளிப் போட முடியாது. ஆகவே ஒரு தடவை இராணுவம் ரோந்து வந்து சென்றதும் உடனடியாக இதனை நிறைவேற்றுவதென தீர்மானித்தோம். ஏனெனில், அடுத்த ரோந்துக்கு சிறிது நேரம் செல்லும். ஆனால் தண்டனையை நிறைவேற்றப் போன அன்று நாம் எதிர்பார்த்த நேரத்திற்கு இராணுவம் வரவில்லை. இந்தத் துரோகிக்காக எமது பயணத்தை ஒத்திப் போடவும் முடியாது. எனவே, இப்போதே நிறைவேற்றுவோம் எனத் தீர்மானித்து அப்படியே செய்தோம்.

தண்டனையை நிறைவேற்றி விட்டு 150 யார் கூடச் சென்றிருக்க மாட்டோம். அதற்குள் இராணுவம் வந்துவிட்டது. பரந்தன் சந்தியில் நின்ற எவருமே எம்மைக் காட்டிக் கொடுக்கவில்லை. ஆதலால் தப்பினோம்.

உடனடியாக இடத்தை மாறி வேறு இடத்தில் நிற்பதற்குரிய ஒழுங்குகளை அப்போதைய கிளிநொச்சிப் பிரதேசப் பொறுப்பாளராக விளங்கிய மாறன் செய்திருந்தார்.

அடுத்த நாள் எமது காட்டுவழிப் பயணம் ஆரம்பமானது. இடையில் ஒரு மிதிவண்டிக்குக் காற்றுப் போய் விட்டதால் நீண்ட நேர நடை - ஒருவாறு வவுனியா மாவட்டத்திற்குள் போய்விட்டோம். இதே வேளை யாழ்ப்பாணத்தில் அலன் தம்பதிகளைக் கடத்தியிருந்த ஈ. பி. ஆர். எல். எவ் இயக்கம் இந்தியப் பிரதமர் இந்திராகாந்தியின் வேண்டுகோளின் (கட்டளையின்) பிரகாரம் அவர்களை அன்றைய தினம் விடுதலை செய்வதாகக் கூறியிருந்தது. ஆகவே அன்று வடபகுதியெங்கும் இராணுவம் தனது ரோந்தைத் தீவிரமாக்கியிருந்தது. ஓமந்தையில் இருந்த அகதிகள் முகாமருகே நாம் சென்ற போது, இரு இராணுவ வண்டிகள் வேகமாக எம்மைத் தாண்டிச் சென்றன. அதன் பின் எமது கோலத்தில் சற்று மாறுதல்கள் செய்தோம். அப்பாவிக் கிராம வாசி போல் தலைப்பாகை கட்டியிருந்தார் தவம் அண்ணை. சற்றுத்தூரம் சென்றதும் ஊர்ந்தபடியே இரு இராணுவ வண்டிகள் வந்தன, எமது இரு மிதிவண்டிகளுக்கு மிடையில் அதிக தூர இடைவெளி இருந்தது. ஒவ்வொருவர் முகத்தையும் நன்றாக அவதானித்தனர் இராணுவத்தினர். யாராவது திருட்டு முழி முழித்திருந்தால் எமக்கு சிக்கல் வந்திருக்கலாம். அதிர்ஷ்டவசமாக அப்படி ஏதும் நிகழவில்லை. நாம் பண்டாரிகுளத்தைச் சென்றடைந்தோம்.

அங்கு எமது வேட்டு யாத்திரையின் அடுத்த கட்டம் பற்றித் தீர்மானித்தோம். புளொட் இயக்கத்தினரைக் காட்டிக் கொடுத்த 'தர்மே' என்ற சிங்களவனுக்கு மரண தண்டனை வழங்குவதென்று முடிவாயிற்று. அக்கால கட்டத்தில் வவுனியாவில் 'புளொட்' இயக்கமே எங்கும் நிறைந்திருந்தது. ஒரு சமயம் அவர்கள் வவுனியாவில் சிறீலங்கா விமானப் படையினர் மீது

தாக்குதல் நடத்தினார்கள். சிறீலங்காப் படையினரின் எதிர்த் தாக்குதல் தொடங்கியதும் தாக்குதலுக்குத் தலைமை தாங்கியவர்கள் பயத்தினால் ஓடிவிட்டார்கள். ஓடும்போது ஒரு எஸ். எம். ஜீ. யை அருகிலிருந்த ஒரு கடையின் மிளகாய்ச் சாக்கிற்குள் வைத்துவிட்டார்கள்.

இத்தாக்குதலின் போது இராமநாதன் என்ற 'புளொட்' உறுப்பினர் காயமடைந்திருந்தார். அவரைக்கூடக் கூட்டிக்கொண்டு போகவில்லை. அவரை விட, இன்னொரு உறுப்பினரையும் கூட விட்டு விட்டுப்போய் விட்டார்கள். எனவேஅவர் இராமநாதனை மிதிவண்டியில் ஏற்றிக் கொண்டு காந்தீயம் பண்ணைக்குள் சென்றார். இவர்கள் இருவரையும் பின்தொடர்ந்தபடி வந்துகொண்டிருந்தான் தர்மே என்ற சிங்களவன். அவன் ஒரு வாடகைக்கார்ச் சாரதி. எல்லாவற்றையும் அவதானித்த அவன் சிறீலங்காக் காவல் துறையினருக்குத் தகவல் கொடுத்தான். அவர்கள் அந்த இடத்திற்கு விரைந்தனர். உடனே மோதல் நடந்தது. இவர்களிடம் ஒரேயொரு கைத்துப்பாக்கி தான் இருந்தது. காப்பாற்றி வந்தவர் கொல்லப்பட்டார். காயமடைந்தவர் கைது செய்யப்பட்டார். அந்தக் காலத்தில் 'போராளிகளே, தற்கொலை செய்வதற்கு உங்களுக்கு உரிமையில்லை' என புளொட் கூறியிருந்தது. பிற்காலத்தில் இதுபற்றிச் சுவரொட்டியும் ஒட்டியிருந்தது. அதனாற் தான் இராமநாதன் கைதாக நேர்ந்தது. இதனால், வவுனியாவில் புளொட்டின் நடவடிக்கைகளில் பெரும் பின்னடைவு ஏற்பட்டது - பலர் கைதாகினர்.

இந்தச் சம்பவத்தில் காட்டிக் கொடுத்த தர்மேக்கு தண்டனை வழங்குவதானால் மீண்டும் வவுனியா நகருக்குள் செல்ல வேண்டும். அந்த விஷப்பரீட்சைக்கு புளொட் தயாராக இருக்கவில்லை. எனவே, அதை நாம் செய்யத் தீர்மானித்தோம். இதற்காகத் திட்டம் தீட்டினோம்.

வவுனியா நகருக்குள் செல்லும் ஒருவர் தர்மேயின் மோட்டார் வண்டியை வாடகைக்கு அமர்த்திவருவதென்று முடிவாயிற்று. ஏற்கனவே அங்கு தங்கியிருந்த இரகுமான் இதற்கு முன் வந்தான். (இரணை இலுப்பைக்குளத்தைச் சேர்ந்த இவன் பின்னர் சிறீலங்காக் காவற்றுறையினர் மேற்கொண்ட திடீர்ச் சோதனையின் போது சயனற் உட்கொண்டு வீரச்சாவெய்தினான்.)

ஒரு நாள் பிற்பகலில் இரகுமான் நகருக்குள் சென்றான். இரகுமான் புறப்படும் சமயம் ''நேர தர்மேயிடம் போய்க் கேக்காத. ரெண்டு மூண்டு கார்க்காரரிட்டை றேற்றைக் கதைச்சு பிறகு அது கட்டாது எண்டதால தர்மேட்டப் போறமாதிரி நடி; கார் பிடிக்கப் போகேக்கை நிறைய மரக்கறியும் வாங்கு'' என்று கூறியிருந்தோம். அதன்படி இரகுமான் வேறொரு வாடகை மோட்டார் வண்டிக்காரனிடம் போய் விசாரித்தான். பின்னர் தர்மேயிடம் போய்க் கேட்டான். மற்றவரிடம் விசாரித்ததை தர்மே பார்த்துக் கொண்டு தான் நின்றான் - பின்னர் இரகுமான் அவனை அணுகி விசாரித்தபோது அவன்

''நான் இப்பத்தான் நெளுக்குளத்துக்குப் போட்டு வாறன். எனக்கு களைப்பா இருக்கு; நீ அதிலயே போ'' என்று அந்த மோட்டார் வண்டியின் கதவைத் திறந்துவிட்டான். இரகுமானுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பூசனிக்காய் வேண்ட வேணும். வேண்டிக் கொண்டு வாறன்'' என்று சொல்லிவிட்டு வந்து விட்டான்.

இரகுமான் முதல்நாள் போன விஷயம் பிழைத்து விட்டது. அன்று மோட்டார் வண்டியில் போகாததால் அடுத்த நாள்

மறுபடியும் தர்மேயிடம் எப்படிப் போவது? எனவே, வேறொருவரை அனுப்பத் தீர்மானித்தோம். தவம் அண்ணையின் நெருங்கிய உறவினன் ஒருவன் இதற்குச் சம்மதித்தான். பட்டாணிச்சூர் என்னுமிடத்திற்கு தர்மேயைக் கூட்டிக் கொண்டு வருவதாக முடிவாயிற்று. ''ரீ. வி. ஏத்த வேணும் எண்டு சொல்லு: எப்படியும் கொண்டு வா — இல்லாட்டிப் பிறகு இதைச் செய்யேலாமல் போகும்!'' என்று சொல்லியிருந்தோம். அதன்படி அவன் தர்மேயைக் கூட்டிக் கொண்டு பட்டாணிச்சூருக்கு வந்தான்.

தர்மே கட்டுமஸ்தான தேகமுடையவன். மோட்டார் வண்டியை நிறுத்தியதும் இறங்கி வந்து தொலைக்காட்சியை ஏற்றுவதற்கு வசதியாக பின் 'டிக்கி'யைத்திறந்தான். தொலைக்காட்சிபெட்டியை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவன் விழிகள் சுழல் துப்பாக்கியைக் கண்டதும் ஆச்சரியத்தால் அப்படியே நின்றன. விஷயம் முடிந்தது. ஆனால், அவனது மோட்டார் வண்டியைக் கொண்டுபோக முடியாது. ஏனென்றால், எம்மில் ஒருவருக்குமே வாகனம் ஓட்டத் தெரியாது. அதனால் அனைவருமே மிதிவண்டியில்தான் தப்பிப்போக வேண்டியிருந்தது. நாம் தொடர்ந்தும் பயணம் போக வேண்டியவர்கள் என்பதால், நாம் தங்கியிருக்கும் இடம் தமது உறவினனுக்குத் தெரியக்கூடாது என தவம் அண்ணை விரும்பினார். அதனால், வீதி வழியாக அவனை அனுப்பி விட்டு எம்மை வரம்புகள் ஒற்றையடிப் பாதைகளூடாகக் கூட்டிக் கொண்டு போனார். களைத்துப் போய் நாம் ஒரு வீட்டிற்குள் சென்றோம். ஆனால், சிரமமில்லாமல் வீதி வழியாக முன்னே வந்து அவன் அங்கே கட்டிலில் இருந்தான்.

''பார்! நாங்கள் இவனுக்குத் தெரியக் கூடாதெண்டு இவ்வளவு கஷ்டப்பட்டு வர இவன் சுகமா றோட்டால இஞ்சை வந்திருக்கிறான்.'' என்று நம்மிடம் கிசுகிசுத்தார் தவம் அண்ணை.

எரிச்சலுடன் அங்கிருந்து பயணமானோம்; திரும்பவும் வரம்புகள், ஒற்றையடிப் பாதைகள் — அடுத்த இடத்திலும் இதே நிலை தான். அவனுந்தான் என்ன செய்வது? நாங்கள் ஒவ்வொரு இடத்திலிருந்தும் செல்லச் செல்ல, இந்த இடம் பாதுகாப்பாக இல்லையாக்கும்' என நினைத்து அவனும் அங்கிருந்து செல்வான். அவன் அந்தச் சம்பவத்தில் சம்பந்தப்பட்டதால் அவனும் தான் தப்ப வேண்டும் என நினைப்பது இயல்பாயிற்று. கடைசியில் பாவற்குளத்துடன் எமது வார் ஓட்டம் நின்றது. அன்று அங்குள்ள விகாரை ஒன்றில் ஏதோ நிகழ்ச்சி. அதற்காக மோட்டார் வண்டியில் ஒலிபெருக்கியினை பூட்டி விளம்பரம்செய்து கொண்டு வந்தார்கள். உள்ளே ஒரு புத்த பிக்குவும் இருந்தார். அந்த இடங்களிலெல்லாம் சிங்களக் குடியேற்றம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது என்று தவம் அண்ணர் சொன்னார்.

தவம் அண்ணரின் உறவினனை எமது பயணத்தில் தவிர்ப்பதை விட்டு இனிமேல் இணைத்துக் கொள்வதென்று தீர்மானித்தோம். அங்கிருந்து நேரியகுளம் சென்று பின்னர் பிரதான வீதி வழியாக மதவாச்சி பேருந்து நிலையத்தைச் சென்றடைந்தோம். இதற்கிடையில் மதவாச்சி காவல் நிலையம் இருந்தது. அதையும் தாண்டித் தான் அங்கு சென்றோம். மதவாச்சியில் எம்மை அனுப்பி விட்டு தவம் அண்ணையும் அவரது உறவினனும் மிதிவண்டியிலேயே வவுனியாவிற்குத் திரும்பிவிட்டனர். நானும், பிரான்சிசும், டேவிட்டும் பயணத்தைத் தொடர்ந்தோம்.

எமது திட்டப்படி சிங்களப் பகுதிகளூடாகச் செல்லும் போது கூடியவரை முழுக்க முழுக்க சிங்களவரே பயணம் செய்யும் உள்ளூர் பேருந்துகளிலே போவதென்று முடி

வெடுத்தோம். அதன்படி மதவாச்சியிலிருந்து அநுராதபுரம் போகும் பேருந்தில் பயணமானோம். அநுராதபுரத்திலிருந்து கதுறுவெல வரை (பொலநறுவை) யாழ் — மட்டக்களப்பு பேருந்திலேயே பிரயாணமாக வேண்டியிருந்தது. அதற்குமேல் போனால் ஓட்டமாவடிப் பாலத்தில் சிறீலங்காப் படையினரின் திடீர்ச் சோதனையில் சிக்க நேரிடும். எனவே பொலநறுவையில் இருந்து மட்டக்களப்புக்கு உதயதேவி புகையிரதத்தில் பயணமானோம். மட்டக்களப்பு புகையிரத நிலையத்தில் இறங்கி மட்டக்களப்பு காவல் நிலையத்திற்கு அண்மையிலிருந்த ஒரு வீட்டிலேயே தங்கினோம். அங்கு பிரான்சிஸ் சொன்னான்.

'' அப்பாடா! .... ... மட்டக்களப்புக்கு ஆயுதம் வந்திட்டுது. இனித்தான் ரைகேசிட விளையாட்டுத் தொடங்கப் போகுது.''

அந்த இரு சுழல் துப்பாக்கிகளும்தான் மட்டக்களப்பு சிறையை உடைத்து நிர்மலா அக்காவை கொண்டு வருவதற்கு நாம் பயன்படுத்தியவை.

மட்டக்களப்பு சிறைச்சாலையை உடைத்து நிர்மலா அக்காவை மீட்டு வரும் போது அந்த இரு சுழல் துப்பாக்கிகளுடனேயே யாழ்ப்பாணம் கொண்டு வந்தோம். கிட்டுவின் பொறுப்பில் நிர்மலா அக்காவை ஒப்படைத்ததும் பிரான்சிஸ் யாழ்ப்பாணத்திலிருந்து பேருந்து மூலம் மட்டக்களப்புக்குத் திரும்பிவிட்டான்.

சில நாட்களின் பின்னர் மீண்டும் அடுத்த பயணம் ஆரம்பமாகியது. இந்தத் தடவை என்னுடன் தீசன் பயணமாகினான். இவனும் இந்தியப் பயிற்சி பெற்றவனே. இம்முறையும் மிதிவண்டியிலேயே போவதென்று தீர்மானித்தோம். ஆனால், முல்லைத்தீவிலிருந்து திருமலை சென்று அங்கிருந்து மட்டக்களப்புக்குப் போவதே எமது திட்டம். திருமலைக்குள்ளால் எம்மைக் கொண்டு செல்லும் பொறுப்பை சந்தோஷம் ஏற்றிருந்தான். வன்னியில் மாத்தையாவைச் சந்தித்து அவர் மேற்கொள்ளும் தாக்குதலொன்றில் பங்குபற்றிவிட்டுச் செல்வதெனத் தீர்மானித்தோம். எப்படியும் அதில் ஆயுதம் கிடைக்கும் — அதில் எமக்கு கொஞ்சம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடனேயே அங்கு சென்றோம்.

மாத்தையா ஒட்டிசுட்டான் காவல் நிலையத்தின் மீதான தாக்குதலை மேற்கொள்ளத் திட்டங்கள் தீட்டிக் கொண்டிருந்தார். அத்தாக்குதலில் பங்கு பற்றும் சந்தர்ப்பம் எமக்குக் கிடைப்பதை உறுதிப்படுத்திக் கொண்டோம். இறுதியாக அவருடன் சென்று அந்தக் காவல் நிலையத்தின் அமைப்பைப் பார்வையிட்டதும், அடுத்த நாள் (05.08 84) பிற்பகல் 5.30 மணிக்கு தாக்குதல் நடந்தது. இத்தாக்குதலில் பங்கு கொண்டவர்களில் மாத்தையா, குட்டி, வசந்தன், நான் ஆகியோரே இன்று இயக்கத்திலிருக்கிறோம். அத் தாக்குதலில் பங்குபற்றிய எட்வின், பசிலன், றெஜி, லோறன்ஸ், சபா, பரமதேவா, சசி, மானா, சந்தோஷம், சீலன் ஆகியோர் வெவ்வேறு தாக்குதல்களில் வீரச் சாவெய்தி விட்டனர். (தீசன் அன்று என்னுடன் மட்டக்களப்புக்குப் பயணமாகியவன். ராமு, கோபி, சகோதரம், பாபு, முதலானோர் இன்று இயக்கத்தில் இல்லை.)

அத் தாக்குதலில் நான்கு உப இயந்திரத் துப்பாக்கிகள், மூன்று 303 றைபிள்கள், நான்கு றிப்பீட்டர்கள், இரண்டு -38 ரக சுழல் துப்பாக்கிகள் ஆகிய ஆயுதங்கள் கைப்பற்றப் பட்டன.

அதிரடிப் படையினர் தங்கியிருந்த விடுதிகள் தகர்க்கப்பட்டன. கணேமுல்லையைச் சேர்ந்த உதவிப் பொலிஸ் அத்தியட்சகர் முதியான்சே கோணமடுவ, மற்றும்

கிருஷ்ண சாந்தா, சமரவீர, விஜயரட்ண, விஜயானந்த ஆகிய படையினர் கொல்லப் பட்டதாக சிறீலங்கா அரசு அறிவித்தது. எமது தரப்பில் இழப்பெதுவும் இல்லை. சசி, வள்ளல், மானா, கோபி ஆகியோர் காயமடைந்தனர். இந்திய அரசிடமிருந்து ஆயுதங்களைப் பெற்றுக் கொள்வதற்கு முன்னர் எமது சொந்த ஆயுதங்கள் மூலம் நாம் நடத்திய இரண்டாவது காவல் நிலை யத் தாக்குதல் இது.

இத் தாக்குதல் முடிந்ததும், இரு உப இயந்திரத் துப்பாக்கி, ஒரு சுழல் துப்பாக்கி என்பவற்றை மாத்தையா எமக்கு வழங் கினார். அவருடன் நின்று மட்டக்களப் புக்கு தன்னை அனுப்பும் படி அவரை நச்சரித்துக் கொண்டு நின்ற பரமதேவாவை யும் எம்முடன் அனுப்பி வைத்தார்.

பரமதேவா மட்டக்களப்பில் நிற்பதால் இயக்கத்திற்கு பெரும் பலம். ஏனெனில், இந்தப் போராட்டத்தின் ஆரம்பத்தில் தமிழ்த் தேசிய உணவுள்ளவர்களாக இனங் காணப்பட்ட அனைவருடனுமே பரம தேவாவுக்குத் தொடர்பிருந்தது. இயக்கத் தின் நடவடிக்கைகளை விஸ்தரிப்பதில் பரம தேவாவுக்கு தனியானதொரு ஆற்றல் உண்டு. உணர்வு பூர்வமானவர்களுடன் தொடர்பு கொண்டு, போராட்டத்திற் கான பலமான அத்திவாரத்தைப் போட பரமதேவாவால் இயலும். எனவே, பரம தேவா எம்முடன் வருவது குறித்து நாம் மகிழ்ச்சியடைந்தோம். சந்தோஷம், தீசன், பரமதேவா, நான் ஆகிய நால்வரும் கொக்குத்தொடுவாய்க்குச் சென்று சசியின் வீட்டில் அறிமுகமாகி விட்டு காட்டில் தங் கினோம். அதன் பின் எங்களுக்கு சசியின் வீட்டிலிருந்தே உணவு வந்தது. மீண்டும் எமது பயணம் ஆரம்பமாகியது. அதிக தூரம் மிதிவண்டியை உருட்டிக்கொண்டே போக வேண்டியிருந்தது. நெஞ்சுக்கு மேல் ஆழமுள்ள ஆற்றைக் கடந்தே தென்னன் மரவடிக்குச் சென்றோம். 'அப்பாடா! திருக்கோணமலை மாவட்டத்துக்குள் கால் வைத்து விட்டோம்.' என்று எண்ணி னோம். அங்கு சந்தோஷம் தனக்கு அறிமுக மான ஒரு வீட்டிற்கு எங்களைக் கூட்டிக் கொண்டு சென்றான். அங்கே கிடைத்த செய்தி:

"பின்னேரம் தான் ஆமிக்காரர் வந்திட்டுப் போறாங்கள்; நாளைக்கு காலையில வாறதா சொல்லிப் போட்டுப் போறாங்கள்!" — அவ்வளவு தான். உடனே அங்கிருந்து திரும்பி விட்டோம் — ஏற்கனவே சந்தோஷம் தென்னன் மரவடியில் வைத் திருந்த 4 றிப்பிட்டர்களையும் கிளப்பிக் கொண்டு.

மீண்டும் மாத்தையாவைச் சந்தித் தோம். அவர் கடல்வழி மூலம் பயணமாகு மாறு கூறினார். அதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ளும் பொறுப்பு சந்தோஷத் திடம் ஒப்படைக்கப்பட்டது. அதுவரை பரமதேவா, தீசன், நான் ஆகிய மூவரும் தங்கியிருப்பதற்குரிய ஏற்பாட்டைச் செய்யு மாறுகாண்டீபனிடம் கூறினார் காண்டீபனு டன் தங்கியிருந்த காலத்தில் குடியேற்ற வாசியான ஒரு சிங்களவனுக்கும் மரணதண் டனை வழங்கினோம். இவன் இராணுவத் தினருடன் நெருங்கிய தொடர்பு கொண் டிருந்தவன். அந்த நெருக்கத்தினால் அந்த மண்ணின் சொந்தக்காரர்களுக்கு பல்வேறு வகையிலும் அச்சுறுத்தலாக விளங்கியவன். சில நாட்கள் சென்றதும் சந்தோஷம் திரும்பி வந்தான். கடற்பயணத்துக்கான ஏற்பாடு கள் பூர்த்தியாக விட்டதாக கூறினான்.

வடமராட்சியிலிருந்து செம்மலைக்கு ஒரு வள்ளம் வந்தது. அந்த வள்ளத்தில் கணேஷ் வந்திருந்தான். எமது பயணத்தில் இணைந்து கொள்வதற்காகவே அவனும் வந்திருந்தான். வள்ளத்தை நிறுத்தக் கூடிய பகுதிகளில் சிங்களவர்களின் வாடிகள்

இருந்தன. ஆகவே அந்தப் பகுதிகளில் வள்ளத்தை நிறுத்த முடியவில்லை. கொந்தளிப்புள்ள கடல் பகுதியிலேயே வள்ளத்தை நிறுத்தவேண்டியிருந்தது. வள்ளத்திற்கும் கரைக்குமிடையில் கயிறு மூலம் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. கயிற்றில் பிடித்தபடி தீசன் வள்ளத்தினுள் ஏறினான். அவனது ஒரு கையில் சுழல் துப்பாக்கி இருந்தது. அடுத்து நான் வள்ளத்தில் ஏறினேன். உள்ளேயிருந்த கணேசைப் பார்த்து ''கணேஸ் ... இத வை '' என்றபடி ஒரு பையினைக் கொடுத்தேன். அதற்குள் எனது. 45 ரக சுழல் துப்பாக்கி இருந்தது. மறுகையில் உப இயந்திரத் துப்பாக்கி இருந்தது. கணேஸ் எனது பையை வாங்கி உள்ளே வைத்தது தான் தாமதம், பெரிய அலையொன்று வந்து அடித்ததில் வள்ளம் கவிழ்ந்து விட்டது. எல்லோரும் கடலில் மூழ்கி விட்டோம். ஆழமான அக்கடல் பகுதியில் மூழ்கிய எம்மை மிகக்கஷ்டப்பட்டு செம்மலை மக்கள் காப்பாற்றி விட்டார்கள். தீசன் தான் கடைசியாக மீட்கப்பட்டான். நீண்ட நேரம் கடலில் மூழ்கியும் அவன் தனது கைத்துப்பாக்கியைக் கைவிடவில்லை. எனது கைத்துப்பாக்கி பையுடன் தவறிவிட்டது. சுமார் ஒன்றரை வருடத்திற்கு மேல் இக் கைத்துப்பாக்கியை நான் வைத்திருந்தேன். எனக்கு முன் கிட்டு இதனை வைத்திருந்தார். ஆதலால் அதை எடுக்காமல் போக எனக்கு மனம் வரவில்லை. ஆனால், எவ்வளவு தேடியும் அது கிடைக்கவில்லை. வள்ளம் திருமலைக்குப் புறப்பட்டது. திருமலையில் சந்தோஷம் எதிர்பார்த்த இடத்தில் வரவேண்டியவர்கள் வரவில்லை. அதனால் வள்ளத்திலிருந்து கரைக்கு நீந்திச் சென்றான் சந்தோஷம் நீண்ட நேரம் கடற் பிரயாணம்— முழுமையாக நனைந்த நிலை — எனக்கு ஆஸ்த்மா தொடங்கி விட்டது. எப்படியோ சந்தோஷம் தன்னுடன் தொடர்புள்ளவர்களைக் கூட்டிக் கொண்டு வந்துவிட்டான். நாம் திருமலை மண்ணில் கால் பதித்தோம். அங்கு நாம் தங்கியிருந்த வீட்டுக்காரரின் பாதுகாப்புக் கருதி அனைவரும் ஒரு அறைக்குள் முடங்கிக் கொண்டோம். அன்று எம்மைத் திருமலை மண்ணுக்குக் கொண்டு சென்ற வள்ளத்தில் வந்த அன்பு, ஜீவன் இருவருமே இன்று வீரச்சாவெய்திவிட்டனர்.

மீண்டும் எமது கடல்வழிப் பயணம் ஆரம்பமாகியது. அதிகாலையில் மூதூருக்குப் போய்ச்சேர்ந்தோம். அங்கு இளங்கோ எம்மைச் சந்தித்தார். மூதூரிலிருந்து மட்டக்களப்புக்கு எம்மைக் கொண்டு செல்லும் பொறுப்பை இளங்கோவிடம் ஒப்படைத்தான் சந்தோஷம். அக்காலத்தில் மூதூரில் எமக்குத் தொடர்புகள் குறைவு. ஈரோஸ் இயக்கமே எங்கும் நிறைந்திருந்தது. கஞ்சிக்குப் பயறு போல ஆங்காங்கே வேறு சில இயக்கங்களும் இருந்தன. ஆனால் எமது நிலை இப்படியெல்லாம் குறிப்பிடக் கூடியதாக இல்லை. புலிகள் இல்லாததால் அப்பகுதியைப் பற்றிப் படையினர் பெரிதாகக் கவனம் எடுப்பதில்லை. ஆதலால், முதன் முதலாக, பகிரங்கமாக ஆயுதத்துடன் நாம் போகும்போது, மிகவும் அவதானமாக இருக்க வேண்டியிருந்தது. அத்துடன், எந்த ஒரு இயக்க உறுப்பினர் பிடிபட்டாலும் அவர்களிடம் முதலில் விசாரிப்பது புலிகளைப் பற்றித்தான். ஆகவே, மற்றைய இயக்க உறுப்பினர்களுக்குத் தெரியாமல் இருப்பதுதான் எமது முக்கிய தேவையாயிற்று. அதனால், கட்டைப்பறிச்சானில் மரவள்ளிச் சேனைக்குள்ளே பல நாட்களை நகர்த்தினோம். வெளியே போய்ப் பார்க்க வேண்டிய அலுவல்களை இளங்கோ கவனித்தார். அப்படியிருந்தும் ஈரோஸ் இயக்கத்தினர் எம்மை இனங்கண்டு கொண்டனர். அவர்களால் சில அசம்பாவிதங்கள் ஏற்படக்கூடிய நிலைமை ஏற்பட்டாலும், சமாளித்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டோம். வழியில் பாதை மாறியதால் ஒரு மலையைச் சுற்றிக் கொண்டு வர நேர்ந்தது.

சந்தோஷமும், கணேசும் மூதூரிலேயே நின்றனர். ஈச்சிலம்பத்தையில் பரமதேவாவையும், தீசனையும் தங்க வைத்தோம் ஆயுதங்களையும் பகிர்ந்து கொண்டோம். ஏனெனில் எல்லோரும் ஒரேயடியாகப் பயணமாகும்போது வழியில் ஏதாவது நடந்தால் முழு ஆயுதமுமே போய்விடும். ஆகவே, ஒரு பகுதியினருக்கு ஏதாவது நடந்தாலும், மறு பகுதியினரின் ஆயுதங்களாவது மட்டக்களப்புக்குப் போக வேண்டும் என்பதில் அனைவரும் உறுதியாக இருந்தோம்.

நானும் இளங்கோவும் மட்டக்களப்பு எல்லைக்குள் கால் வைத்தோம். நீண்ட நாட்களுக்கு முன்னரே நாம் புறப்பட்டு விட்டோமாகையால் எமக்கு எவருடனும் தொலைத் தொடர்பு இருக்கவில்லை. மட்டக்களப்பு நிலைமையும் தெரியாது. ஆகவே விஷயம் தெரியாமல் எமது பழைய தொடர்புகள் இருந்த வீடுகளுக்குப் போக முடியாது. ஆகவே தண்ணீரையும், சாப்பாட்டையும் எடுத்துக் கொண்டு நான் தனியாகத் தங்கினேன். வெருகலுக்கும் வாகரைக்கும் இடையில் உள்ள சிறிய காட்டுப் பகுதியில் — சிறிய மலை ஒன்றில் நான் தங்கினேன். வாகரையில் இராணுவ முகாம் இருப்பதால் மிகவும் அவதானமாகவே இருக்க வேண்டியிருந்தது. இளங்கோ மட்டக்களப்பு நகரத்துக்குச் சென்று, நிலைமையை அவதானித்த பின்னர் சந்திரண்ணாவை (காசி ஆனந்தனின் சகோதரர்) அழைத்து வந்தார்.

ஒரு அதிகாலைப் பொழுதில் எமது பயணம் மீண்டும் தொடர்ந்தது. வாகரை இராணுவ முகாம் பகுதியைத் தவிர்த்து பிரதான வீதியால் எமது பயணம் தொடர்ந்தது. இரு தடவைகள் ரோந்து சென்ற படையினரைச் சந்திக்க நேர்ந்தது.

மட்டக்களப்பு நகருக்குள் நாம் சென்றதன் பின்னர் இளங்கோவும், சந்திரண்ணரும் மீண்டும் ஈச்சிலம்பத்தைக்குச் சென்றனர். பரமதேவாவையும், தீசனையும் சந்திரண்ணையுடன் அனுப்பி வைத்தார் இளங்கோ. உப இயந்திரத் துப்பாக்கிகளும் ரிப்பிற்றர்களும் மட்டக்களப்புக்கு வந்துவிட்டன.

இயக்கத்தில் இணைந்து பயிற்சிக்குப் போனவர்கள் பயிற்சி முடிந்து வந்ததும் பெற்றோரைச் சந்திக்க ஏற்பாடு செய்வது வழக்கம். ஆனால், பரமதேவாவின் விடயம் சிக்கலானது. பரமதேவா ஏற்கனவே மட்டக்களப்பில் பிரபல்யமானவர். இவர் வந்து நிற்கிறார் என்றால் படையினர் உஷாராகி விடுவர். அதைவிட அவரது தாய் தங்கியிருந்த வீடு (இவரது சகோதரியினுடையது) மட்டக்களப்பு பிரதான முகாமுக்கு மிக அண்மையில் இருந்தது. என்றாலும் அதற்காக அந்தச் சந்திப்பைத் தள்ளிப் போட முடியாது. பரமதேவாவை அணுகினேன். சிக்கலை அவருக்கு விளக்கினேன். இறுதியாக,

''அம்மாவை அங்கை போய்ச் சந்திக்கிறதெண்டாலும் சரி; இல்லாட்டி வேற வீட்டில சந்திக்க ஒழுங்கு செய்யிற தெண்டாலும் சரி... உங்கட விருப்பம்'' என்றேன்.

அதற்கு பரமதேவா கூறிய பதில், போராட்டத்தின் மீதும் தனது தாயின் மீதும் பரமதேவா வைத்திருந்த பாசத்தை தெளிவாக எடுத்துக் காட்டியது.

''நான் அம்மாவை வீட்டில மட்டுமில்ல, வேற எங்கயுமே சந்திக்க விரும்பயில்ல. நான் போராட்டத்தில இறங்கினதுக்குப் பிறகு அம்மா என்னை ஒரு கைதியாய்த் தான் சந்திச்சிருக்கிறா — ஒரு வீரனாய்ப் பார்க்கயில்லை! அதால நான் இனி ஒரு பீ (F)ல்ட் செய்து அதில எடுத்த ஆயுதத்தைக் கையில கொண்டு போய்த்தான் அம்மாவுக்கு முன்னால நிக்க வேணும்.''— எவ்வளவு வித்தியாசமானவன் இவன்?

ஆனால், அவனது கனவுகள்......

பரமதேவா சிறையிலிருந்து தப்பிய ஒரு வருடப் பூர்த்தித் தினமான 22.09.1984 அன்று களுவாஞ்சிக்குடி காவல் நிலையத்தின் மீது தாக்குதல் தொடுத்தோம். கைக்குண்டெறிவதில் தேர்ச்சி பெற்ற சந்தோஷம் இந்தத் தாக்குதலுக்கும் வரவழைக்கப்பட்டிருந்தான். திருநெல்வேலித் தாக்குதல், ஓட்டிசுட்டான் காவல் நிலையத் தாக்குதல், போன்ற தாக்குதல்கள் 'கைக்குண்டு எறிவதற்கு சந்தோஷம் தான் சரியான ஆள்' என்ற நிலையை உருவாக்கியிருந்தன. (நாங்களே தயாரித்திருந்த கொழுத்தியெறியும் குண்டுதான் அப்போது நாங்கள் பாவிப்பது) இளங்கோவின் குழந்தைக்கு உடல் நலமில்லாததால் அத் தாக்குதலில் ஈடுபட இளங்கோவை நாம் அனுமதிக்கவில்லை. குழந்தையின் சுகயீனத்தை விட தாக்குதலுக்கு தன்னை அனுமதிக்காததே பெரிய கவலையாகத் தெரிந்தது இளங்கோவுக்கு. காயமடைந்தவர்களை பராமரிக்க வேண்டும் என்பதால் சந்திரண்ணருக்கும் தாக்குதலிலீடுபட சந்தர்ப்பம் வழங்கப்படவில்லை. மொத்தம் 15 பேர் இத் தாக்குதலில் கலந்து கொண்டோம். இதில் சந்தோஷம், பரமதேவா, யோகன், கடவுள், காந்தன், சாள்ஸ், ரவி, சிவம் அண்ணர், பிரான்சிஸ், டேவிட், தீசன், கணேஸ், நான் ஆகிய 13 பேரே இயக்கத்தின் முழு நேர உறுப்பினர்கள். சாரதிகளாக வந்த இருவரும் ஆதரவாளர்களே. அதில் ஒருவர் திருமணஞ் செய்து இரு வாரங்கள் கூட ஆகவில்லை. (இவர் பின்னர் பொலிஸாரால் கைது செய்யப் பட்டார்.) நான்கு றிப்பிட்டர்கள், இரண்டு உப இயந்திரத் துப்பாக்கிகள், இரண்டு சுழல் துப்பாக்கிகள். ஒரு வேட்டைத் துப்பாக்கி (ஒரு ஆதரவாளரிடம் பெற்றது.) என்பனவே இத் தாக்குதலுக்காக நாம் கொண்டு சென்றவை. (இதிலும் ஒரு றிப்பிற்றர் வேலை செய்யவில்லை.)

இத் தாக்குதல் நாம் எதிர்பார்த்ததற்கு மாறான விளைவையே கொடுத்தது. பரமதேவாவையும், ரவியையும் நாம் பலி கொடுக்க நேர்ந்தது. தாக்குதலின் ஆரம்பத்திலேயே ரவியும், பரமதேவாவும் காயமடைந்து விட்டனர். வலியினால் கத்திக் கொண்டிருந்த ரவியைத் தேற்றிக் கொண்டிருந்தார் பரமதேவா; பார்! எனக்கும் தான் காயம். உள்ள போனவங்கள் வெற்றியோட வருவாங்கள். கொஞ்சம் பொறு!'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால், நேரம் செல்லச் செல்ல நிலைமை மோசமாகவே இருவருமாகத் தீர்மானித்து சயனைற் உட்கொண்டு விட்டனர். தாக்குதலை நிறுத்திவிட்டு நாம் பின் வாங்கும் போது இருவரையும் தூக்கப் போனோம். ரவி பேச்சு மூச்சற்றுக் கிடந்தான். அதைச் சொல்லத்தான் பரமதேவா உயிரோடிருந்தாரோ?

''நாங்கள் ரெண்டுபேரும் கதைச்சு முடிவெடுத்து சயனைற் அடிச்சிட்டம். அதை விட என்னையெல்லாம் உங்களால தூக்க முடியாது. (அவர் கட்டுமஸ்தான தேகமுடையவர்) நீங்கள் எல்லாரும் தப்பிப் போங்கோ! எனக்காக ஒண்டு மட்டும் செய்யுங்கோ—அம்மாட்டப் போய்ச் சொல்லுங்கோ — உங்கட மகன் சண்டையில தான் செத்தானெண்டு — ஏனெண்டா அண்ணர் புளொட்டில இருக்கிறார். அதால வேற மாதிரிக் கதையெல்லாம் வரும். அதால அம்மாட்டைச் சொல்லுங்கோ — நான் சண்டையில தான் செத்தனெண்டு!''

வெற்றிகரமான தாக்குதல் ஒன்றின் பின்னால், அதில் கைப்பற்றப்பட்ட ஆயுதங்களுடன்—பெருமையுடன் தாயின் முன்னால் நிற்கவேண்டுமென்று கனவு கண்ட பரமதேவா அது நிறைவேறாதென்ற நிலையிலும் இயக்கத்தின் மீது பழிச்சொல் விழக்கூடாதே என்ற அவரது துடிப்பு — இதைவிட இயக்கங்கள் ஒவ்வொன்றையும் பற்றிய அவரது கணிப்பீடு?

அந்தத் தாக்குதலின் விளைவாகக் கைப்பற்றப்பட்ட 303 றைபிளுக்கு ''ராஜா ரவி'' எனப் பெயரிட்டோம்.

● ● ● ●

மட்டக்களப்புக்கும் மூதூருக்குமிடையிலான தொடர்புகளை இளங்கோவே கவனித்துக் கொள்வார். ஒருமுறை காட்டு வழியாக அவரும் காந்தனும் டேவிட்டும் செல்லும் போது வீதியமைப்பு தொடர்பான வேலைகளை மேற்கொள்ளும் சில சிங்கள உத்தியோகத்தர்களைக் கண்டுவிட்டனர். (புதிய சிங்களக் குடியேற்றங்களை மேற்கொள்ளவே இவ் வீதியமைப்பு திட்டமிடப்பட்டது. இத்திட்டம் நிறைவேற்றப் பட்டிருந்தால் மட்டக்களப்பு மாவட்டமும் திருமலை மாவட்டமும் சிங்களக்குடியேற்றத்தால் துண்டாடப்பட்டிருக்கும் ஆனால் அவர்கள் இவர்களைக் காணவில்லை.) இவர்கள் காட்டிற்குள் ஒழிந்து கொண்டனர். காலையிலிருந்து மாலை வரை அசைய முடியாத நிலைமை. சாப்பாடும் இல்லை; தண்ணீரும் இல்லை. கிளா என்ற காட்டுக் காயை மட்டும் சப்பிக் கொண்டு இருந்தனர். யாழ்ப்பாணத்திலிருந்து வரவிருக்கும் ஆயுதங்களையும் போராளிகளையும் மட்டக்களப்புக்கு கொண்டு வருவதற்காகவே இவ்வளவு சிக்கல் நிறைந்த பிரயாணங்கள் மேற்கொள்ளப்பட்டன (இப்பாதையை இளங்கோவுக்கு அறிமுகப்படுத்தியவர் கிருமிச்சையைச் சேர்ந்த நல்லதம்பி என்பவர்) இந்நிலையில், ''எனக்குப் பிள்ளை கிடைக்கப் போகுதுவீட்டில எனக்கு அவரை விட்டா வேறை உதவியொண்டுமில்ல. அதால கொஞ்ச நாளைக்கு அவரைத் தூர இடம் ஒண்டுக்கும் அனுப்பாதேங்கோ!'' என்று செய்தியனுப்பினார் ஜெயந்தி (இளங்கோவின் மனைவி). நானும் ஒப்புக் கொண்டேன். ஆனால், இளங்கோவின் மூன்றாவது பிள்ளை தேன்மொழி பிறந்த பதினோராம் நாள், ''இந்த முறை கட்டாயம் ஆட்கள் வருகிறார்கள். ஆயுதங்கள் வருகின்றன.'' என யாழ்ப்பாணத்திலிருந்து ஒரு செய்தி கிடைத்தது.

ஏற்கனவே. இரு தடவைகள் இவ்வாறு செய்தி வந்து மட்டக்களப்பிலிருந்து மூதூருக்குச் சென்று வெறுங்கையுடன் திரும்பி வந்தவர் இளங்கோ. இந்த முறையும் கிடைக்குமென்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை.

இந்நிலையிலும் இளங்கோவைத் தான் அனுப்ப வேண்டும். ஏற்கனவே போயிருந்தாலும் இளங்கோவுக்குத் தெரிந்த அளவுக்குச் சரியாகக் காட்டுப் பாதையைப் பிடிக்க மாட்டான் காந்தன். இந்த ஒரு தடவை போனால் சரியாகப் பிடித்து விடுவான். ஆனபடியால், இந்த முறை மட்டும் இளங்கோவை மூதூருக்கு அனுப்புவோம். இது தான் கடைசித் தடவை; இனிமேல் காந்தன் தான் இந்த வேலைக்குப் பொறுப்பு என தீர்மானித்த நான், எனது தீர்மானத்தை இளங்கோவுக்குச் சொன்னேன். இளங்கோ காந்தனையும் கூட்டிக் கொண்டு மூதூருக்குப் புறப்பட்டார்.

தன்னியக்க றைபிள்களுடன் முதல் தொகுதி போராளிகள் மட்டக்களப்புக்குச் செல்லப் போகிறார்கள். எனவே, 'வழியில் பிரச்சினையில்லை' என்பதை உறுதிப் படுத்திய பின்னரே அவர்களை வெருகல் ஆற்றுக்கு (மட்டக்களப்பு திருமலை எல்லை) அப்பால் கூட்டிக்கொண்டு போக வேண்டும் எனக் கருதிய இளங்கோ கஜேந்திரனுடன் ஒரு மிதிவண்டியில் வெருகலை நோக்கி வந்தார்.

வெருகலை அண்ணமித்த போது தான் (ஒரு வளைவில்) துறைக்கு அப்பால் பேருந்து நிற்பதைக் கண்டார், உடனே ''எனக்கு சந்தேகமா இருக்கு, சைக்கிளத் திருப்பு'' என்று கஜேந்திரனிடம் கூறினார். கஜேந்திரன் சைக்கிளைத் திருப்பினான். சடசடவென வேட்டொலிகள் கேட்டன. இளங்கோ சந்

தேகப்பட்ட மாதிரி அது இராணுவத்தினர் தான். ஏற்கெனவே, பிரச்சினைவந்தால் எந்தப் பாதையால் ஓடவேண்டும் என்று கஜேந்திரனுக்கு கூறியிருந்தார். அவ்வழியே ஓடினான் கஜேந்திரன். களைத்துப்போன நிலையில் சயனைட்டைக் கடித்தான். (முழுமையாக விழுங்கவில்லை) அந்நிலையிலும் தப்ப முடியும் போல இருந்தது. முகாமுக்கு ஓடி வந்து விட்டான், முதலுதவியின் பின் காப்பாற்றப்பட்டு விட்டான்

இளங்கோ காயமடைந்த நிலையில் உப இயந்திரத் துப்பாக்கியை பாகம்பாகமாய்க் கழற்றி ஆற்றுக்குள் வீசினார். (வெருகல் ஆறு முதலைகள் நிறைந்தது) சட்டைப் பையிலிருந்த பணத்தை இராணுவத்தினர் பயன் படுத்த முடியாதவாறு கிழித்தெறிந்தார். (இளங்கோ கிளித்தெறிந்த நோட்டுக்களில் சில இன்னும் மூதூரில் உள்ளன.) சயனைட்டை உட்கொண்டார்.

சயனைற் உட்கொண்ட நிலையில் இளங்கோ என்ன நினைத்திருப்பாரோ?

அப்போது 19 வயதே உள்ள தன் மனைவியையா? தனது மூன்று குழந்தைகளினதும் எதிர்காலத்தையா? முதன் முதல் மட்டக்களப்புக்கு றைபிள் வரும் போது அதை ஏந்திப் போரிடும் சந்தர்ப்பம் கிடைக்காமல் சாகிறேன் என்றா?

மூன்றாவது தான் சரியென நான் திடமாக நினைக்கிறேன். — இளங்கோவைப் பற்றிச் சரியாக அறிந்தவன் என்ற வகையில். இளங்கோவைப் பற்றி நினைக்கும் போது விபரிக்க முடியாத ஏதோவொரு உணர்ச்சி ஏற்படுகிறது "கொஞ்சநாளைக்கு அவரைத் தூர இடம் ஒண்டுக்கும் அனுப்பாதேங்கோ எண்டு சொன்னதைக் கேட்டீங்களோ" என்று ஜெயந்தி உரத்துச் சொல்வது போன்ற ஒரு உணர்வு ஏற்படும்.

● ● ● ●

இளங்கோவின் மரணம் பற்றிய செய்தி யாழ்ப்பாணத்திலிருந்து தான் மட்டக்களப்புக்குக் கிடைத்தது. அப்படியானால் காந்தன் எங்கே? ஏன் வராமல் நிற்கிறான்? துடித்துக் கொண்டிருந்தேன் நான். சில நாட்களின் பின் காந்தன் என்னுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டான். சம்பவம் நடந்த உடனே எங்களிடம் வராதற்காக அவனைக் கோபித்துக் கொண்டேன். "எப்பிடிக் காக்கா வர முடியும்? சுடு மணலுக்க நடந்து காலெல்லாம் ஒரே கொப்புளம்!" என்றான் அவன். பின்னர், காந்தனிடம் போன போது தான் இரு கால்களையும் கவனித்தேன்—சுதந்திரத்துக்காக நாங்கள் கொடுக்கும் விலை தான் அந்தக் கொப்புளங்கள் என்று.

● ● ● ●

இளங்கோவை இழந்ததற்காக பதிலடி கொடுக்க வேண்டுமென்றான் காந்தன். இளங்கோவை நாம் இழப்பதற்கு காரணமான வாகரை முகாம் இராணுவத்தினர் மீதே எமது முதல் தாக்குதல் (17 - 08 - 85 அன்று) நடைபெற்றது. எமக்கு ஒரு T.56 ரக றைபிள் கிடைத்தது. மூன்று இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். பின்னாளில் மட்டக்களப்புக்கு வந்து சேர்ந்த குமரப்பா இத்தாக்குதலுக்கு தலைமை தாங்கினார். ஏதோ ஒரு திருப்தி எமக்கு.

● ● ● ●

வளர்ந்து கொண்டே போனது எங்கள் தேசிய விடுதலைப் போராட்டம். மட்டக்களப்பு மாவட்ட இணைப்பதிகாரி நிமால் டி சில்வா உட்பட ஏராளம்மான படையினரை இழந்தது சிறீலங்காப் படை. அவ்வாறே இந்தியப் படையும் மட்டக்களப்பில் கசப்பான பாடங்களைப்படித்தது.

தமிழ்த் தேசிய இராணுவத்தின் மீதான தாக்குதலின் முடிவில் கைப்பற்றப்பட்ட 50க்கு மேற்பட்ட கால்காஸ்ட்ரோ, 200 க்கு மேற்பட்ட LMG, 2000 க்கு மேற்பட்ட றைபிள்கள், ஏராளமான மோட்டார்கள் போன்ற ஆயுதங்களை ஏற்றுவதற்கு

உழவு இயந்திரங்களும். பாரவண்டிகளும் (லொறி) தான் தேவைப்பட்டன என்ற செய்தியை அறிந்த போது பரமதேவாவை யும், ரவியையும் இழந்து ஒரேயொரு றைபிளை மட்டும் பெற்றுக் கொண்டது நினைவுக்கு வந்தது.

தொடர்ந்து சிறீலங்காப் படையினருட னான போர் தொடங்கிய போது (1990 ஜூன்) வாழைச்சேனை முதல் பொத்துவில் வரையிலான சகல காவல் நிலையங்களும் ஒரே இரவில் கைப்பற்றப்பட்ட செய்தி கிடைத்தது. அப்போது நாம் தென் தமி ழீழத்தில் நடத்திய முதலாவது காவல் நிலை யத் தாக்குதல் தான் நினைவுக்கு வந்தது. ஒரு காவல் நிலையத்தைக் கைப்பற்றவே ஆயுதங்களும் போராளிகளும் போதாமலி ருந்த நாம் இன்று ஆயுதங்களின் தொகை யில், ஆட்பலத்தில் பல்லாயிரமாகப் பெருகி நிற்பதை எண்ணி மகிழ்கிறேன்.

எமது போராட்டத்தின் வளர்ச்சி சிறீலங்காப் படையினர் மூலமாகவும் தெரி கிறது. அன்று (13-10-86) அடம்பனில் எம்மால் கைது செய்யப்பட்டு கைதிகள் பரிமாற்றத்தின் மூலம் சிறீலங்காவிடம் ஒப்படைக்கப்பட்ட (19 - 12 - 86) பாணந் துறையைச் சேர்ந்த அஜித் சந்திரசிறி இன்று (02 - 08 - 91) வடமுனையில் எமது தாக்குதலின் போது உயிரிழந்துள்ளான். (இத்தாக்குதலில் மொத்தம் 24 இராணு வத்தினர் கொல்லப்பட்டனர். 20 றைபிள் கள் கைப்பற்றப்பட்டன.) இவனை மேஜரா கக் கௌரவித்துள்ளது சிறீலங்கா அரசு. இத்தாக்குதலில் எமது தரப்பில் எந்த விதமான இழப்புமிருக்கவில்லை. இது எமது வளர்ச்சியின் இன்னொரு எடுத்துக் காட்டு.

● ● ● ●

1990 ம் ஆண்டு கொக்கட்டிச் சோலை யில் குமரப்பா, புலேந்திரன் முதலான பன்னிரு வேங்கைகளுக்கான அஞ்சலிக் கூட்டம் நடைபெற்றது. அதில் நானும் கலந்து கொண்டேன். அன்று சிறுவர்களாக இருந்த பலர் அங்கு றைபிள்களைக் கட்டிக் கொண்டு போராளிகளாக நின்றனர். அந்தக் கூட்டத்தில் நியூட்டனும் பேசினார். ''தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் நாம் கைப்பற்றிய ஆயுதங்களில் பெரும் பாலானவை மட்டக்களப்பு — அம்பாறைப் பிரதேசத்திலிருந்தே பெறப்பட்டன. இன்று யாழ்ப்பாணம் கோட்டை எம்மால் விடுவிக் கப்பட்டிருக்கின்றதென்றால் மட்டக்களப்புப் போராளிகளும் தான் அதில் பங்காளிகள். மட்டக்களப்புப் போராளிகளும் அங்கு வீரச்சாவடைந்துள்ளார்கள். அதை விட யாழ்ப்பாணக் கோட்டையை விடுவிப்ப தற்கு பயன்படுத்திய ஆயுதங்களில் கணிச மானவை மட்டக்களப்பில் எம்மால் கைப் பற்றப்பட்டவையே.''

நான் அந்த இரு கைத்துப்பாக்கிகளை யும் நினைத்துக் கொண்டேன். கூடவே இளங்கோவின் குழந்தைகளையும் காந்த னின் கொப்பளித்தபாதங்களையும். □□

□ □ □ □ □

*''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்பது பரந்தமனப் போக்குடன் பழந் தமிழர் வாழ்வு அமைந்திருந்த தென்பதற்குச் சான்று. வீரத்திலும், அறத்தி லும், அரசாட்சியிலும், கலை ஈடுபாடுகளிலும் தமிழர்கள் மேம்பட்டு விளங் கினார்கள். பண்பாட்டையும் ஒழுக்கத்தையும் வலியுறுத்தி வாழ்ந்தார்கள். இவையெலாம் பழந்தமிழர் இலக்கியங்கள் விளம்புவனவாகும்.*

— சாமி. சிதம்பரனார்



# இது எங்கள் தேசம்

ஜெயா

உதிரம் கொடுத்து
உறவை வளர்த்தோம் — எம்
உயிரைக் கொடுத்து
எல்லைகள் மீட்டோம்
இது
எங்கள் தேசம்

வெங்களமாடி
விழுப்புண் ஏற்று — எம்
தேசம் காத்தோம்
குருதியாற்றில் அமிழ்த்தினாலும்
உறுதி குலையோம்
இது
எங்கள் தேசம்

வல்லரசெம்மை வருத்தினாலும்
பல்லிளித்து — நாம்
பதறமாட்டோம்
எல்லைகள் தாண்டிடின்
பாடம் உரைப்போம்
இது
எங்கள் தேசம்

எங்கள்
வாழ்வை அமைக்கவும்
வழியைத் தேடவும்
எமக்கே
உண்டு உரிமை
இது
எங்கள் தேசம்

விழிப்புடன் இருப்போம்
துடிப்புடன் நிமிர்வோம்
எம்
சந்ததி காக்க
சரித்திரமாவோம்
இது
எங்கள் தேசம்



# ஆழவேரோடிய ஆலமரமும் அசைக்க நினைத்த புயல்களும்

யோகரத்தினம் யோகி

தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் தமிழீழ விடுதலைப் புலிகளாகிய நாம் பல பேச்சுவார்த்தைகளில் பங்குபற்றி இருக்கின்றோம்.

வெளிப்படையாக எல்லோருக்கும் தெரிந்த பேச்சுவார்த்தைகள் சிலவற்றை மீண்டும் ஒருமுறை திரும்பிப் பார்ப்பது நாளைய தலைமுறைக்கு வழிகாட்டலாக இருக்கும்.

திம்பு, டெல்லி, பெங்களூர், கொழும்பு, யாழ்ப்பாணம் என இப் பேச்சுவார்த்தைகள் நடந்தன.

மிகப்பெரிய அழுத்தங்கள், சூழ்ச்சிகள் இவற்றிற் கூடாக எம் இலட்சியத்தை விட்டுக் கொடுக்காமலும், அதேவேளை மக்களையும் இதுகுறித்த விழிப்புணர்வுகளுடன் எம்மைப் புரிந்து கொண்டு எமக்குச் சார்பாக நிற்க வைத்துக் கொண்டு பேச்சுவார்த்தைகளில் பங்கு பற்றினோம்.

பலமுள்ளவனுக்கு பயந்து அவன் சொல்வதற்கு இணங்கி, அதன் பின் அந்த இணக்கத்திற்குக் காரணத்தைத் தேடி மக்களை ஏமாற்றுவது ஒருவகைப் பேச்சுவார்த்தையாகும்.

நம்பி, ஏமாந்து, கூட நின்றவர்களை (மக்களை) யும் ஏமாற வைத்து அழிவின் பின் விழித்துக் கொள்வது இன்னுமொருவகைப் பேச்சுவார்த்தையாகும்.

தனிப்பட்ட நலன், பதவிகளுக்காக எல்லோரையும் ஏமாற்றியும், தம் நலன்களை மட்டும் பார்ப்பதும் ஒருவகைப் பேச்சுவார்த்தையாகும்.

இப்படியான பேச்சுவார்த்தைகளுக்கே இந்தியாவும், சிறிலங்காவும் பழக்கப்பட்டிருந்தன.

ஓரளவு அழுத்தத்தைப் பொறுப்பவர்களை, அது அளவு மீறுகின்ற போது நாம் அழிந்தாலும், அடிபணிய மாட்டோம் எனஎழுந்து நிற்பவர்களை, நம்பி ஏமாற ஆயத்தமில்லாதவர்களை, தங்கள் தனிப்பட்ட நலனில் நாட்டம் இல்லாதவர்களை, தமிழீழ விடுதலைப் புலிகளைச் சந்திக்கும் வரை இந்தியாவோ, சிறிலங்காவோ சந்தித்ததில்லை.

1985ல் சிறிலங்கா அரசு, நாம் இங்கு தொடர்ந்து நடத்திய தாக்குதல்களைத் தொடர்ந்து, தன் இராணுவத்தைப் பலப்படுத்த எண்ணியது.

அதற்காகப் பேச்சுவார்த்தை என நாடகம் ஆடியது.

நாம் சிறிலங்கா அரசின் சூழ்ச்சியை விளக்கமாக எடுத்துச் சொல்லியும் ராஜீவ் காந்தியால் சிறிலங்காவைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

இந்தியாவின் பூகோள நலன் மட்டுமே இந்திய அரசின் நோக்கம். சிறிலங்கா, இந்திய உதவியை நாடியதும் தன் நலனை முழுமை செய்யும் நேரம் வந்துவிட்டது என இந்திய அரசு எண்ணியது.

எம்மை ஏதோ வகையில் கைகழுவிவிட எண்ணியது.

பூட்டான் தலைநகர் 'திம்பு'வில் நடைபெறும் பேச்சுவார்த்தைக்கு 'வா' என அழுத்தம் போடப்பட்டது.

முதலில் பேச மறுத்த நாம் இந்த அழுத்தத்தைப் பொறுத்துக் கொண்டு பேசச் சென்றோம்.

அழுத்தம் எல்லை மீறாதவரை பேசலாம் என்பது மட்டும் நோக்கமல்ல; இப் பேச்சுவார்த்தையில் வேறுசில விடயங்களும் எமக்குச் சாதகமாக அமைந்தன.

1) தலைமறைவு இயக்கமாக இருந்த நாங்கள், தமிழீழ மக்களின் பிரதிநிதிகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டமை.

2) பயங்கரவாதிகள், கொலைகாரர் என எம்மைச் சொன்ன சிறிலங்கா அரசு எம்மோடு பேச நிர்ப்பந்திக்கப்பட்டமை.

3) எமதுபோராட்டம் பற்றியும், எமது கோரிக்கைகளைப் பற்றியும் உலகம் முழுவதும் வெளிப்படையாகச் சொல்ல ஒரு தளம் கிடைத்தமை.

சிக்கலைத் தீர்க்கும் நோக்கம் சிறிலங்காவுக்கு இருக்கவில்லை. இராணுவத்தைப் பலப்படுத்த நேரம் அதற்குத் தேவைப்பட்டது.

சிறிலங்கா சற்றும் நியாயமற்ற தீர்வையே வைத்தது. அதேவேளை, நாங்கள் சிறிலங்காவின் நியாயமற்ற தன்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டி நின்றோம்.

இந்திய அரசின் நலன்களை சிறிலங்கா பேண மறுத்தது.

இந்தியா இரண்டு விடயங்களைப்புரிந்து கொண்டது.

1) சிறிலங்காவுக்கு இன்னும் நெருக்கடி கொடுக்க வேண்டும்.

2) தமிழீழ விடுதலைப் புலிகள் இருக்கும் வரை, தன் எண்ணம் போல் தமிழீழப் போராட்டத்திற்கு முற்றுப் புள்ளி வைக்க முடியாது.

தமிழீழ விடுதலைப் புலிகளைப் பலவீனப்படுத்த வேண்டும். அல்லது அழிக்க வேண்டும்.

இது இந்திய அரசுடன் எமக்கு வெளிப்படையாக ஏற்பட்ட முதல் தெறிப்பாகும்

இந்திய அரசு எமக்குப் பாடம் புகட்ட எண்ணியது.

பேச்சுவார்த்தையில் நேரடியாக ஈடுபடாத பாலா அண்ணாவையும், ( திரு. அன்ரன் பாலசிங்கத்தையும் ) சந்திரகாசனையும் பேச்சுவார்த்தையில் நேரடியாக கலந்து கொண்ட சத்தியேந்திராவையும் நாடு கடத்தியது.

எங்களுக்குப் பாடம் படிப்பித்து விட்டதாக இந்திய அரசு மகிழ்ந்தது.. மீண்டும் எம்மை டெல்லிக்குப் பேச்சுவார்த்தைக்கு அழைத்தது.

தலைவர் பிரபாகரன் தலைமறைவானதால் ராஜீவ் விரும்பிய வண்ணம் பேச்சுவார்த்தைகளைத் தொடங்க முடியவில்லை.

இந்திய அரசுக்கு நேரடியாக எமது பலத்தைக் காட்டிய முதல் நிகழ்ச்சி அது.

ராஜீவ் இந் நிகழ்ச்சியை என்றும் மறந்திருக்கமாட்டார்.

காலம் தாமதித்து, நாம் விரும்பிய நேரமே, தலைவர் பிரபாகரன் தலைமறைவு வாழ்க்கையில் இருந்து வெளியே வந்தார். அதன் பின்பே பேச்சுவார்த்தை தொடங்கியது.

டெல்லியில் மீண்டும் ஒரு பலப் பரீட்சை.

போர்நிறுத்தம், தீர்வுத்திட்டம் என்றெல்லாம் பேசப்பட்ட போதும் நாம் பல தடவைகளில் கருத்துத்தெரிவிக்க மறுத்தோம்.

எமது அரசியல் ஆலோசகர் பாலாஅண்ணா இல்லாமல் எம்மால் கருத்துத் தெரிவிக்க இயலாது எனக் கூறிவந்தோம்.

நடைமுறைச் சிக்கலில் இருந்து இந்தியாவிடுபட விரும்பியது. பாலா அண்ணா மீண்டும் இந்தியா திரும்ப ஒப்புதல் தரப்பட்டது.

இது எமக்குக் கிடைத்த இன்னுமொரு வெற்றி.

ஈழத் தேசிய விடுதலை முன்னணி ( ENLF ) என்ற அமைப்பில் தமிழீழ விடுதலைப் புலிகள் இருக்கும் வரை, இக்கூட்டில் இல்லாத 'புளொட்' குழுவைத்தவிர மற்றையோரைத் தம் விருப்பப்படி நடக்கச் செய்ய முடியாது என்பதை இந்திய அரசு உணர்ந்து கொண்டது.

இந்திய அரசு மற்றைய குழுக்களை மறைமுகமாக எங்களுக்கு எதிராக வளர்த்தது.

நாம் தமிழீழத்தில் சிறிலங்கா இராணுவத்தோடு மோதிக் கொண்டு இருந்தோம்.

அதேவேளை ஈழத் தேசிய விடுதலை முன்னணி கூட்டில் இருந்த மற்றக் குழுக்கள் இந்தக் கூட்டிற்கு விடுதலைப் புலிகளால் ஏற்பட்ட மதிப்பைப் பயன்படுத்தித் தம்மை வளர்க்கும் முயற்சியில் ஈடுபட்டனர். யாரும் சிறிலங்கா இராணுவத்திற்கு எதிராகப் போராட ஆயத்தமாக இல்லை.

வெளிநாடுகளில் பணம் சேர்க்க முற்பட்டார்கள். இந்திய அரசின் துணையோடு எமக்கெதிராகச் செயற்பட ஆயுதங்களைப் பெற்றனர்.

மறைமுகமாகவும், பலவேளைகளில் வெளிப்படையாகவும் எம் போராட்டத்தைக் கொச்சைப்படுத்தினார்கள். வழமை போல் நாம் நம்பி ஏமாறத் தயாராக இருக்கவில்லை.

சரியான காலத்தில் இவர்களின் துரோகத்திற்கு எதிராக நடவடிக்கை எடுத்தோம்.

இந்திய அரசு எம்மை ஓரங்கட்டி விட்டு விட்டு தமிழர் விடுதலைக் கூட்டணியை மீண்டும் பயன்படுத்த எண்ணியது.

இந்தியா சொன்னபடி நடப்பவர்கள் அவர்கள்.

இருந்தாலும் கூட்டணியினர் எல்லோரின் கருத்துக்களையும் கேட்டு அதன்படி நடப்பவர்கள் போல ஒரு நாடகம் ஆடினார்கள். தங்களைக் காத்துக் கொள்ள விரும்பி ஆடிய நாடகம் அது. எனவே கொழும்பு செல்லமுதல் எம்மோடு கூட்டணியினர் பேச விரும்பினார்கள்.

கூட்டணியினரின் துரோகத்தனம் எமக்குப் புதியதல்ல. இருந்தும் அவர்களோடு பேசினோம்.

கொழும்பு சென்று 'சமஷ்டி' அமைப்பு ஒன்றைத் தீர்வாக வைக்கச் சொன்னோம். சிறிலங்கா அரசு அதை ஏற்காது; அதையே காரணம் காட்டி, சிறிலங்கா அரசு சிக்கலைத் தீர்க்க விரும்பவில்லை. எனவே தமிழீழம் தவிர வேறு வழியில்லை எனக் கூறி எம் போராட்டத்திற்குச் சார்பாக நில்லுங்கள் என்றோம்.

எதையும் விட்டுக் கொடுக்காமல் பேசுவது என்பது கூட்டணியின் மரபல்ல. எதை எதை விட்டுக் கொடுக்கலாம் எனப் பேசுவதே அவர்கள் மரபு.

அம்பாறை, சேருவில தேர்தல் தொகுதிகளை விட்டுக் கொடுப்பது பற்றிப் பேசினார்கள். சிறிலங்கா அரசு, கூட்டணியினரின் இவ்வளவு விட்டுக் கொடுப்புகளுக்குப் பின்பும் இணக்கம் காண மறுத்தது.

தமிழர் தாயகம் என்ற கோட்பாட்டைசிறிலங்கா அரசு ஏற்க மறுத்தது.

சிறிலங்கா அரசும் கூட்டணியும் இணக்கம் காணும் ஒரு தீர்வை எம்மீது திணிக்கவே இந்தியா விரும்பியது.

கூட்டணி இந்திய அரசு விரும்பிய வண்ணம் நடக்க விரும்பிய போதும் எம்மைக் கண்டு அஞ்சியது.

பெங்களூரில் 'சார்க்' மாநாடு நடக்க இருந்தது. ஜே ஆர் புதிய தீர்வு ஒன்றை முன் வைத்தார்.

வடக்கு ஒரு மாகாணமாக இருக்கும். கிழக்கு மூன்றாகப் பிரிக்கப்படும். திருகோணமலை சிங்கள மாவட்டமாகும். மட்டக்களப்பு தமிழர் மாவட்டமாகும். அம்பாறை முஸ்லிம்களின் மாவட்டமாகும்.

இத்திட்டத்தில் தாயகக் கோட்பாடு மறுக்கப்பட்டது மட்டுமல்ல, திருகோணமலையும் எம்மிடம் இருந்து பறிக்கப்பட்டது.

ஜே. ஆரின் பாதுகாப்பு என்ற பெயரிலும், சூளைமேட்டில் பொதுமக்கள் மீது 'ஈ. பி. ஆர். எல். எவ்' நடத்திய துப்பாக்கிச் சூடுகளால் பொதுமக்களில் ஒருவர் கொல்லப்பட்டதையும் சாக்காகக் கொண்டும் எல்லோரிடமும் 'ஆயுதக்களைவு' என்ற பெயரில் ஆயுதங்கள் எடுக்கப்பட்டன.

தீர்வை ஏற்கப் போடப்பட்ட அழுத்தம் அது.

பெங்களூரில் வழமையான மிரட்டல்கள், அழுத்தங்கள்.

நாம் ஓரளவு அழுத்தத்தைப் பொறுப்போம். அதற்கு மேல் எதிர்ப்போம்.

''வடமாகாணத்திற்கு உங்களை முதலமைச்சர் ஆக்குகிறோம்'' என்றது இந்திய அரசு.

''நான் இப்போதும் வடமாகாணத்திற்கு முதலமைச்சராகத்தான் இருக்கிறேன்'' என்றார் தலைவர் பிரபாகரன்.

போட்ட அழுத்தம் போதாது. இன்னும்அழுத்தம் போட வேண்டும். ''பறியுங்கள் தொலைத் தொடர்பை'' என எம் தொலைத் தொடர்புக் கருவிகளை இந்திய அரசு பறித்தது.

தமிழீழ விடுதலைப் புலிகள், காலில்விழும் நாட்களை இந்திய அரசு எண்ணத் தொடங்கியது.

காலில் வந்து விழும் விடுதலைப் புலிகளைப் பார்த்துக் காத்திருந்த இந்திய அரசின் காதில் அறை விழுந்தது போல, விடுதலைப் புலிகளின் செய்தி வந்தது.

தமிழீழ விடுதலைப் புலிகள் தலைவர், தன்னுயிரைத் தற்கொடை செய்ய முடிவு செய்து விட்டார் என்பதே அச்செய்தியாகும்.

"நீரின்றி, உணவின்றி சாகும் வரை உண்ணாநோன்பு இருக்கத் தொடங்கி விட்டேன்.

தொலைத் தொடர்புக் கருவிகளை ஒப்படையுங்கள்.

இல்லையேல்,

என்னை என் தாய்நாடு செல்ல விடுங்கள். இதுதான் என் கோரிக்கை. ஏதாவது ஒன்றை நிறைவேற்றும் வரை உண்ணாநோன்பு தொடரும்."

தமிழீழப் போராட்டத்தையும் தலைவர் பிரபாகரனையும் நேசித்த எம். ஜி. ஆர் இதை எதிர்பார்க்கவில்லை.

நடுவண் அரசின் அழுத்தத்திற்கு எதிராக, சுகயீனம் உற்றிருந்த எம். ஜி. ஆரால் எதுவும் செய்ய முடியாமல் இருந்தது.

ஆனால், தம் ஆட்சியில், தமிழீழத்தின் தலைவர் சாவதை எம். ஜி. ஆரால் பொறுக்க முடியவில்லை

உடனடியாகத் தொலைத் தொடர்புக்கருவிகளை திருப்பித் தரும்படி கட்டளை இட்டார்.

இந்திய நடுவன் அரசு நிலை குலைந்தது.

இது தமிழீழப் போராட்டத்திற்குக் கிடைத்த இன்னுமொரு வெற்றியாகும்.

இந்திய நடுவன் அரசு அடுத்த மிகப்பெரிய அழுத்தம் குறித்து முடிவுகட்டு முன்னரே, இந்திய மண்ணில் ஒரு சிலரை விட்டுவிட்டு தலைவர் உட்பட எல்லோரும் தமிழீழம் வந்தோம்.

"பிரபாகரன் தமிழீழம் சென்று விட்டார்" என நான் 'இந்து' பத்திரிகையின் இணை ஆசிரியராக இருந்த ராமிடம் கூறிய போது, அவர் கூறிய பதில் "இந்தியாவின் பிடி நழுவிவிட்டது" என்பது தான்.

இந்தியா விடுதலைப் புலிகளை ஓரளவு புரிந்து கொண்டு விட்டது.

இவர்கள் அசாதாரண மிரட்டல்கள், அழுத்தங்களுக்கு விட்டுக் கொடுக்க மாட்டார்கள் என்பதே அந்தப் புரிந்துணர்வு.

எங்களைப் படைபலம் கொண்டே பணியவைக்கலாம் என இந்திய அரசுமுடிவெடுத்தது.

'இந்திய படைபலத்தை எதிர்க்க தென்னாசியாவிலே எந்த நாட்டிற்கும் துணிவில்லை. விடுதலைப் புலிகள் எதிர்க்கப்போவதில்லை. எதிர்த்தால் இருக்கப் போவதில்லை' என இந்தியா கணிப்பீடு செய்தது.

காலத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தது.

வடமராட்சியில் நடைபெற்ற 'ஒப்பரேசன் லிபரேசன்' இராணுவ நடவடிக்கையை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த எண்ணியது.

வடமராட்சிப்பகுதி எமது கட்டுப்பாட்டில் இருந்து விடுபடுவதைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்தது.

பெருமளவில் மக்கள் கொல்லப்பட்டார்கள். பெருமளவில் அழிவு நடந்தது.

வலிகாமத்தின் மீது சிறிலங்கா அரசு படைஎடுக்கக் கூடாது என இந்திய அரசு கூறியது.

வானில் இருந்து ஒரு சில உணவுப் பொட்டலங்களைப் போட்டது.

1) புலிகளால் தமிழ் மக்களைப் பாதுகாக்க முடியாது என்ற உணர்வைத் தோற்றுவிக்க முயன்றது.

2) தன்னால் தான் தாக்குதல் நிறுத்தப்பட்டது. தான் தான் தமிழ் மக்களைப் பட்டினிச் சாவில் இருந்து காப்பாற்றியது என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தது.

தனக்குச் சாதகமான சூழ்நிலையைத் தோற்றுவித்து விட்டதாக எண்ணியது. புலிகளை மக்கள் இனி நம்பமாட்டார்கள் எனநம்பியது.

தனது நேரடித் தலையீட்டுக்கான தக்க நேரம் வந்து விட்டதென மகிழ்ச்சி அடைந்தது.

'ராஜீவைச் சந்திக்க வாருங்கள்' என எம்மை அழைத்துச் சென்றார்கள்.

''ஒப்பந்தம் ஒன்று செய்யப் போகின்றோம் நீங்கள் இதில் எதையும் மாற்ற முடியாது'' என்றார்கள்.

''ஒப்பந்த நகலைத் தரமாட்டோம்; வாசிக்கின்றோம்'' என்றார்கள்.

அவர்கள் எதிர்பார்த்தது போல் நாம்எம் எதிர்ப்பைக் காட்டினோம்.

எல்லோரும் முயன்றும் நாம் இணங்க மறுத்தோம்.

கடைசியில் ராஜீவ் காந்தி எம்மைச் சந்தித்து, எம்மை அமைதிப்படுத்தி எம் இணக்கத்தைப் பெற முயன்றார்.

அந்தச் சந்திப்பின் போது எம் நோக்கம், இலட்சியம் பாதிப்புறாத வகையில் இந்திய சிறிலங்கா ஒப்பந்தம் எம்மக்களின் வேணவாக்களை நிறைவு செய்யும் வரை அதனை நடைமுறைப்படுத்த ஒத்துழைப்பதாகக் கூறினோம்.

'அமைதிப்படை' என்ற இந்திய அரசின் முகமூடியைக் கிழிக்க நேரம் தேவைப்பட்டது.

வந்தவர்கள் தேவதூதுவர்கள் அல்ல என்பதை எடுத்துக் காட்ட வேண்டிய தேவை இருந்தது.

'தாங்கிகள்', உலங்கு வானூர்திகள் எனப் படைக்கலன்கள் குவிக்கப்பட்டன.

'புளொட்', 'ஈ. பி. ஆர் எல். எவ்', 'ரெலோ' குழுக்களில் இருந்து பிரிந்தவர்களைக் கொண்டு 'ஈ என். டி. எல். எவ்' என்ற புதிய தேசவிரோதக் குழு ஒன்றும் இந்தியாவால் உருவாக்கப்பட்டது

தேசத்துரோகிகள் குவிக்கப்பட்டார்கள். படை பலம் குவிக்கப்பட்டது.

தமிழ் மக்களும், புலிகளும் பயந்திருப்பார்கள் எனஎண்ணிய இந்திய அரசுக்கு இங்கு காட்டப் பட்ட எதிர்ப்பு ஆத்திரத்தைக் கிளப்பியது.

தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும், தமிழ்மக்களுக்கும் ஆயுத பலம் மூலம் பாடம் புகட்ட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர்.

தமிழீழ விடுதலைப் புலிகள் தம்மை நோக்கித் துப்பாக்கியால் சுடுவார்கள் என இந்தியப் படையோ, இந்திய அரசோ எதிர்பார்க்கவில்லை.

காலடியில் விழுவோம் என எதிர்பார்த்திருந்த இந்திய அரசபடை, கால் வைத்த இடமெல்லாம் நாம் குண்டுகளால் வரவேற்புக் கொடுத்தோம்.

30 - 7 - 87ல் வந்த 'வன்கவர்வுப் படை' 24 - 3 - 90ல் முப்பத்திரண்டு திங்களின் பின் தமிழீழ மண்ணை விட்டு வெளியேற்றப்பட்டது.

தமிழீழ மண் வரலாற்றில் சந்தித்த மாபெரும் வெற்றி இது.

இந்தியப்படை இங்கிருந்து செல்லாமல்நிலை கொள்ளப் போகின்றது என்பதை பிரேமதாசா உணர்ந்தார்.

ஜே வி. பி யின்இந்திய எதிர்ப்பு என்ற பெயரிலான அரசுக்கு எதிரான போராட்டத்தைத் தடுக்க வேண்டிய தேவையையும் பிரேமதாசா உணர்ந்தார்

அது மட்டுமல்லாமல் சிறிலங்காவுக்குள் குழப்பங்களை இந்திய அரசு தமிழீழத்தில் இருந்து கொண்டு உருவாக்கமுயல்வதையும் தெரிந்து கொண்டார்

இந்தியப்படை வெளியேற வேண்டும். யார் துணை இருந்தால் இதைச் செய்யலாம் என நினைத்தார்.

தமிழீழ விடுதலைப் புலிகளைப் பேச அழைத்தார்.

சிறிலங்கா அரசோடு என்றும் தமிழீழ விடுதலைப் புலிகள் பேசமாட்டார்கள் என்பது இந்தியாவின் முடிந்த முடிவு.

அரசியல், இராணுவ சதுரங்க ஆட்டம் எமக்கு புதியதல்ல. எனவே புதியதோர் சதுரங்க ஆட்டம் தொடங்கியது.

போர் நிறுத்தம் கேட்போம்; எப்படியும் காப்பாற்றுங்கள் எனக் கேட்போம், தாங்கள் சொல்லும் பல விடயங்களுக்கு இணங்குவோம் எனச் சிறிலங்கா அரசு எதிர்பார்த்திருக்கலாம்.

நாம் போர் நிறுத்தம் கேட்கவில்லை. காப்பாற்றுங்கள் என இறைஞ்சவில்லை எங்கள் இலட்சியத்திற்கு இடையூறானஎதையும் ஏற்றுக் கொள்ளவுமில்லை.

நாம் கூட இருக்கும் துணிவில் 'இந்தியனே வெளியேறு'' எனப் பிரேமதாசா முழங்கினார்.

அதேவேளை தான் விரும்பிய வண்ணம் எதையும் எம்மோடு செயல்ப்படுத்த முடியாது என்பதையும் உணர்ந்தார். ஒருபுறம் இந்தியப்படை வெளியேறியது. மறுபுறம் எம்பலத்தை அழிக்கும் திட்டங்கள் தொடர்ந்தன.

1) குடியேற்றங்கள் தொடர்ந்தன.

2) இந்தியத் தலையீட்டுக் காலங்களிலிருந்து கிடைத்த போர் அற்ற சூழ்நிலை, அதன் மூலம் கிடைத்த பணம் இவை மூலம் சிறிலங்காப்படை பெருமளவில் பயிற்சி அளிக்கப்பட்டு, படைக்கலங்கள் வாங்கப்பட்டு, சிறந்த படைஅணியாக மாற்றப்பட்டு வந்தது.

3) தேசவிரோதக் குழுக்களை எமக்கு எதிராகப் பயன்படுத்தும் நடவடிக்கைகள் தொடர்ந்தன.

4) எங்கள் தனித்தன்மையை செயலிழக்கச் செய்யும் வகையில் அனைத்துக் கட்சி மாநாடு தொடங்கப்பட்டது. 10 - 6 - 90ல் மீண்டும் தமிழீழ, சிறிலங்காப் போர் வெடித்தது.

''தமிழீழ விடுதலைப் புலிகள் எம்மை ஏமாற்றி விட்டார்கள்'' எனப் பிரேமதாசா கூக்குரலிட்டார்.

40 ஆண்டுகளுக்கு மேற்பட்ட அரசியலில் தமிழர்கள் தொடர்ந்து ஏமாற்றப்

பட்டதே வரலாறு.

"நாங்கள் ஏமாற்றப்பட்டோம், ஏமாற்றப்பட்டோம்" எனத் தமிழ்த் தலைவர்கள் எம் மக்களிடம் வந்து அழுவதைத்தான் நாம் கண்டிருக்கிறோம்.

முதன் முதலில் ஒரு சிங்களத் தலைவன் 'நாம் ஏமாற்றப்பட்டோம்' எனக் கூக்குரலிட்டது எம்மோடு பேசிய பின்பு தான்.

நாம் ஏமாறவில்லை. ஏமாறத் தயாராக இருக்கவில்லை என்பதுதான் உண்மையாகும்.

இக் கட்டுரையின் நோக்கம் ஒவ்வொரு கட்டப் பேச்சு வார்த்தைகளையும், அதற்கான சூழலையும் விரிவாக ஆராய்வதல்ல.

இப்பேச்சுவார்த்தைகளில் காணப்படும் பொதுவான சில பண்புகளை இனம் காட்ட முயல்வதே ஆகும்.

எல்லாப் பேச்சு வார்த்தைகளின் போதும், அப்பேச்சுவார்த்தைகளின் பின்னால் ஒவ்வொரு நாடும் தங்கள் நலன் கருதியே செயல்படுகின்றன என்பதை நாடகங்கள், கருத்தரங்குகள், கூட்டங்கள் மூலம் எப்போதும் மக்களுக்கு எடுத்துக் கூறி வந்தோம்.

மக்களை என்றும் பிழையாக வழி நடத்தவில்லை.

உதாரணமாக இந்திய அரசு குறித்தும், தேசத் துரோக அமைப்புக்கள் குறித்தும் எம் கருத்துக்களை தமிழீழ மண்ணின் அறிஞர்கள் எனச் சொல்லப்படுவோர் எல்லோரும் ஏற்றுக் கொள்ள மறுத்தனர்.

ஏற்றுக்கொள்ள மறுத்தனர் என்பதைவிட நம்ப மறுத்தனர் என்றே சொல்லலாம்.

நேரடியான பட்டறிவுகளினூடாக அதை அறிந்த பின்பே நாம் என்றோ சொன்னவைகளைப் புரிந்து கொண்டனர்.

எம்மீது அழுத்தங்கள் போடப்படும் போதெல்லாம் எம் இலட்சியத்தைப் பாதிக்காத வகையில் விட்டுக் கொடுத்து இணக்கம் காணும் தன்மையை நாங்கள் கொண்டிருந்தோம்.

இதைச் சிலர் விட்டுக் கொடுப்பு என்று சொன்னதும் உண்டு. இவை விட்டுக் கொடுப்புகள் அல்ல. தேவையற்று உறவுகளைப் பகைக்க வேண்டாம் என்ற நல்லெண்ணத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள் ஆகும்.

இதைப் புரிந்து கொள்ளாமல் எம் இலட்சியத்தைப் பாதிக்கும் வகையில் நடக்க முற்பட்டவர்களோடு எவ்வளவு பெரிய இழப்புக்களைச் சந்தித்தாலும் நாம் போராட ஆயத்தமாக இருந்தோம்.

உயிருக்குப் பயந்து விடுதலையை என்றுமே விலை பேச நாம் தயாராக இருந்ததில்லை.

இப்படியான பொதுவான பண்புகளை எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

இப்படியான பண்புகளை இனங்காணும் போது இவற்றின் பின்னால் மறைந்திருக்கும் வேறு சில பண்புகளையும் அடையாளம் காணாமல் எம் போராட்ட

வரலாற்றின் வளர்ச்சியைச் சரியாக அறிய முடியாது.

1) எவ்வளவு கொடுமைகள், அழிவுகளைச் சந்தித்த போதும், நீதியான போராட்டத்தின் பின்னால் உறுதியாக நிற்கும் தமிழ் மக்கள்.

2) உலக அரசியலில் சூழ்ச்சியாளர்களை விஞ்சும் சூழ்ச்சியாளர்களாகச் செயல்படும் அதேவேளை, எங்கள் மண்ணுக்கும் மக்களுக்கும் உண்மையாகத் தன்னல மற்றுக் கட்டுக் கோப்புடன் உழைக்கும் விடுதலை அமைப்பு.

3) எம்நாட்டின் விடுதலைக்காக உயிரைத் தற்கொடையாக எந்நேரமும் தரத் தயாராக இருக்கும் தலைமையும், போராளிகளும்.

4) 4500 க்கு மேற்பட்ட போராளிகளும் 30,000 க்கு மேற்பட்ட மக்களும் சிந்திய குருதியில் பிணைந்து நிற்கும் உணர்வுகள்.

இவை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால் எம்தேசத்தின் வெற்றிக்குப் பின்னாலுள்ள உயிர்த்துடிப்பை எம்மால் புரிந்து கொள்ள முடியும்! □□

## குறிப்புகள்

1. 18 - 6 - 1985 சிறிலங்கா போர் நிறுத்தம் செய்ய இணங்கியது.
2. 08 - 7 - 1985 திம்புவில் சிறிலங்கா அரசுடன் பேச்சு வார்த்தை தொடங்கியது.
3. 12 - 8 - 1985 திம்புவில் இரண்டாம் கட்ட பேச்சு வார்த்தை தொடங்கியது.
4. 20 - 8 - 1985 தலைவர் பிரபாகரன் தலைமறைவானார்.
5. 22 - 8 - 1985 திம்பு பேச்சு வார்த்தை ஒத்திவைக்கப் பட்டதாக இந்திய அரசு அறிவித்தது.
6. 23 - 8 - 1985 திரு. அன்ரன் பாலசிங்கம் 48 மணிநேரத்துள் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என இந்திய அரசு உத்தரவிட்டது.
7. 13 - 7 - 1986 தமிழர் விடுதலைக் கூட்டணி பேச்சுவார்த்தை நடத்த கொழும்பு சென்றது.
8. 06 - 11 - 1986 சூளைமேட்டில் ஈ. பி. ஆர். எல். எவ். தேச துரோகிகளால் பொது மகன் ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்டார்.
9. 08 - 11 - 1986 ஆயுதக் களைவு என்னும் பெயரில் ஆயுதங்கள் பெறப்பட்டது.
10. 17 - 11 - 1986 பெங்களூரில் பேச்சு வார்த்தை நடந்தது.
11. 22 - 11 - 1986 தொலைத் தொடர்புக் கருவிகள் பறிக்கப்பட்டதைத் தொடர்ந்து தலைவரின் உண்ணா நோன்பு தொடங்கியது.
12. 23 - 11 - 1986 தொலைத் தொடர்புக் கருவிகள் மீளத் தரப்பட்டதை அடுத்து உண்ணா நோன்பு முடிவுற்றது.
13. 05 - 1 - 1987 தலைவர் பிரபாகரன் தமிழீழம் திரும்பினார்.
14. 29 - 7 - 1987 இந்திய சிறிலங்கா ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டது.
15. 10 - 10 - 1987 தமிழீழ இந்தியப் போர் தொடங்கியது.

# தாய் நிலத்தைக் காதல் செய்

புதுவை இரத்தினதுரை



1992 ஆடி 12ம் தேதி நள்ளிரவு 1.00 மணி
இடம்:— கட்டுநாயக்கா சர்வதேச விமான நிலையம்

*தம்பி டேய்!*
*நீ கோப்பாய்த் தவராசா வாத்தியின்ரை*
*தம்பியல்லே......*
*எங்கை பயணம்...... கனடாவோ?*
*அடிசக்கை......*
*போங்கோ...... போய்த்திரும்பிப்*
*பிறகெல்லாம் முடிஞ்ச பின்னர்*
*வாங்கோ, கிழடுகள் நாம்*
*வரவேற்கக் காத்திருப்பம்.*

1992 ஆடி 20ம் தேதி முற்பகல் 10. 00 மணி.
இடம்: கோண்டாவில் தோட்டவெளி.

நெருப்புக்குள் நின்றும் நிமிர்ந்தோம்.
சிரிக்கின்றோம்.
இருப்பிழந்து போகாமல் இன்னும் இருக்கின்றோம்.
பெருமைப்படு,
தேகம் புல்லரிக்க நின்றாடு,
தொழுதெம் மண்மீது தொடு.
கண்ணில் வை.
புழுதிமண்ணானாலும் புரண்டு விழுந்தெழும்பு.
தாயை நிகரெங்கள் தாயகத்தைக் காதல் செய்.
வாயால் புகழ்ந்தேற்றி வாழ்த்து.
இம்மண்ணில்,
வீரம் விளைக்கின்ற வீரர்களை மனத்தெண்ணு.
பாரம் சுமக்கின்ற பாலகரைக் கட்டியணை.
நேற்றுவரை தூங்கி நினைவிழந்து,
எதிரியெனும்,
கூற்றுவனுக் கிலக்காகிக்
குலைந்தழிந்த தமிழினத்தை
ஆற்றுப்படுத்தவந்த அத்தலைவன் பெயரைச்சொல்.
மாரியெனக் குண்டு மழைபொழியும்,
எறிகணைகள்
கூவிவரும்,
வீதிசூழியாகும்,
நாங்களிங்கு,
நாறிப்போய் விட்டோமா?
நடைப்பிணங்க ளானோமா?
இல்லை……

இதற்குள்ளே இருக்கப் பழகி விட்டோம்.
புல்லும் நிமிர்ந்து போர்க்கோலம் பூண்டது போல்
வெல்வோம், எனும் உறுதி
வீச்சோடு வாழ்கின்றோம்.
ஆனை வந்தெங்கள் அழகான வயலுக்குள்,
சேனை, புலவுக்குள்,
தின்கிறது.
வழியாலே.........
போய் வாற பேரைப் பிடித்து மிதிக்கிறது.
'காய்கூய்' என்றாரும்
கத்தித் தொலைத்தாலும்
வாய் நோகுதன்றி ''வாரணங்கள்'' போகுதில்லை.
வெடி கொழுத்திப் போட்டால் வெருண்டோடும்
அதற்கிங்கே
பொடியள் சிலபேர்கள் போதுமா?
கனபேர்கள்
வேண்டும், என்செய்வோம்.
விருத்தெரிந்த இளசெல்லாம்
கூண்டு திறந்து...... குருவிகள் போல்......
கடற்பரப்பைத்
தாண்டி,
தங்களது,
தனிச்சுகமே சுகமென்று
திக்கொன்றாய்ப் பறந்து திசைமாறிப் போயினவே.
தக்க தருணத்தில் தாய்மண் துணையின்றித்
துக்கித் திருக்கிறது.
தொப்புள் கொடியுறவு
எல்லாம் பொய்யாகி, இல்லாததொன்றாகிப்
பல்தேச மெங்கும் பறந்து சிதறினவா?
என்றாலும் நாங்கள் இருப்பை இழக்கவில்லை.

தென்னை இளநீரும்
செவ்வலரி சிறுபூவும்
கண்மலர்த்திவேம்பு காய்பழமும் தருகிறது.
கத்தரியும்,
வெண்டிக்கன்றும்,
பூக்கிறது.
சட்டிக்காணை தழைக்கிறது.
ஆதலினால்,
இந்தமண் அழகோடு இன்றும்தான் இருக்கிறது.
எந்தத்துயர்வரினும் இனிக்கலக்கம் கொள்ளாது
ஆழக்கிணறு,
ஆடுகால்ப் பூவரசு,
நீளக்கிடக்கின்ற நெல்வயல்கள்
உள்ளமட்டும்
காலில் விழுந்தெவர்க்கும் கைகட்டி நிற்காது.
நேற்றென் பேரன் நேர்வந்தான்.
எனைக்கட்டி
காற்றில் மிதந்தான், களித்தான்
முத்தமிட்டான்,
வரம்பில் இருந்தான், வாய்க்காலின் தண்ணீரை
விரும்பிக் குடித்தான், வெளிக்கிட்டான்.
'எங்கயடா போகின்றாய்'
என்றேன்.
நின்றான்.
'சண்டைக்கு' என்று சத்தமிட்டுச் சொல்லிவிட்டு
சென்றான்.
இனியெங்கள் தேசம் பணியாது,
தாய்மண்ணைக் காதலிக்கும் தளிர்கள் இருக்குமட்டும்
பாய்விரித்தெம்தேசம் படுக்காது,
போர் செய்யும். □□

படிப்பும் பேச்சும் இயற்றமிழ்
பாடும் பாட்டே இசைத்தமிழ்
நடிப்பும் கூத்தும் சேர்ந்ததே
நாடகத் தமிழ் என்பார்கள்
முடிக்கும் மூன்றும் முத்தமிழே
முத்தமிழ் என்பது புத்தமுதே
முடித்த வண்ணம் நம் தமிழை
முத்தமிழ் என்றே சொல்வார்கள்.

*பாரதிதாசன்*

*வெந்தழல் நீராகும்; வெள்ளெலும்பு பெண்ணாகும்*
*வந்த மத வேழம் வணங்கிடுமே, — சந்தமெழப்*
*பாடுவார் உள்ளுருகிப் பாடும் தமிழிசைக்கு*
*நீடுலகில் உண்டோநிகர்?*

— **கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை**

# இயல், இசை, நாடகம் வளர்க!

எம் தமிழுக்கு நடக்கும்
விழாவை வாழ்த்துகின்றோம்.

□ □ □

# நெஞ்சார நினைக்கின்றோம்

ஆசிச் செய்தி அளித்த தலைவர்,
வாழ்த்துச் செய்திகள் வழங்கிய தளபதிகள்,
கட்டுரை, கவிதை, கவிநூறு ஓவியம்,
கதைகள் தந்த அறிஞர் கூட்டம்,
அழகுற ஆக்கிய அச்சுக் கலைஞன்,
அவருடன் இணைந்த அச்சக ஊழியர்,
விளம்பரங்கள் தந்து உதவியோர்,
வியர்வை சிந்த ஓடித்திரிந்து
வியத்தகு மலரை ஆக்கிய மலர்குழு,
நண்பர்கள் அனைவர்க்கும் நன்றிகள் சொன்னோம்.

அன்புடன்
விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகம்
நடுவப்பணியகம்
தமிழீழம்.



இறப்பதற்கும் சொத்தெல்லாம்
இழப்பதற்கும் அடியுதைகள்
ஏற்பதற்கும்
மறப்போரில் உடற்குருதி
கொடுப்பதற்கும் மலைத்தோளின்
கீழே தொங்கும்
சிறப்புமிகு தடக்கைகள்
அறுந்துபட முழக்கமிட்டுச்
சிரிப்பதற்கும்
புறப்பட்டீர் ..... அடடாவோ!
தமிழினத்தின் போர்த்திறத்தை
வாழ்த்துகின்றேன்!

உணர்ச்சிக் கவிஞர்
காசி ஆனந்தன்